# பொருளடக்கம்



மலர் 21

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 15

# உறவை உதறுங்கள்

கோடிக்கணக்கான டன்கள் வெடி மருந்துச் சக்தி கொண்ட அதி பயங்கரமான இரண்டு அணுகுண்டுகளை ருஷியா வெடித்து, உலகத்தின் சூழல் முழுவதிலும் விஷத்தை வாரி யிறைத்திருக்கிறது. தன் அதிகாரத்தின்கீழ் வராத நாடுகளிலும் விஷச் சத்துக்களை ஏராளமாகப் பரப்பியிருக்கிறது. இன்று வாழும் மக்கள் மட்டுமின்றி, இனிமேல் பிறக்கப் போகும் பல சந்ததிகளும் உடலிலும் அறிவிலும் முடங்கிப் போகுமாறு செய்யும் அரக்கச் செயலை ருஷியா புரிந்திருக்கிறது. உலக நாடுகள் யாவும் எதிர்த்தும் அந்த எதிர்ப்பைச் சற்றும் பொருட்படுத்தாமல் அது இந்தக் கோரச் செயலைச் செய்திருக்கிறது.

உலகத்தார் உண்டு என்ப(து) இல் என்பான்—வையத்து
அலகையா வைக்கப் படும்

என்ற வள்ளுவர் வாக்குப்படி, உலக நாடுகளெல்லாம் எடுத்துக் காட்டிய ஆபத்தை இல்லை என்று சாதித்துத் தான் பேய் (அலகை) என்று ருஷ்யா உலகத்துக்கு நிரூபித்துக் காட்டிவிட்டது. புராணத்தில் காணும் அரக்கர்களும், சரித்திரம் சொல்லும் கொடுங்கோலர்களும் கூடப் புரிந்திராத அளவுக்கு சம்ஹாரத்தில் இறங்கிவிட்டது. ஸ்டாலின் சவத்தை நீக்கிய செஞ்சதுக்கச் சமாதியில் உலக சமாதானத்தையே அடக்கம் செய்வதற்கு ஏற்பாடுகள் தொடங்கி விட்டன.

"போரேதும் மூண்டு விடவில்லையே, சாதாரண சோதனை வெடிதானே!" என்று தள்ளிவிடக்கூடிய விஷயமன்று இது. உலக மக்களை உயிருடன் வைத்தே அணுஅணுவாக வதைத்துக் கொல்பவை இந்த அணுகுண்டுச் சோதனைகளினால் பரப்பப்படும் விஷம், மருந்தில்லாத விஷம்.

பதினாறு ஆண்டுகளுக்கு முன் ஹிரோஷிமாவில் அணுகுண்டு வெடித்ததன் காரணமாக எண்பதாயிரம் பேர்கள் மாண்டனர். ஒரு லட்சம் பேர்கள் காயமுற்றனர். அதைப்போல் பல மடங்கு மக்கள் நோய்களுக்கு உள்ளாயினர். இன்றும் அந்தப் பகுதியில் பிறக்கும் ஏராளமான குழந்தைகள் அங்கவீனத்துடனும் மூளைக் கோளாறுடனும் காணப்படுகின்றன.

இப்போது ருஷியா வெடித்துள்ள குண்டு அந்த ஹிரோஷிமா குண்டைப் போல் 2,500 மடங்கு வலிமை வாய்ந்தது என்றால் அதன் பயங்கர விளைவுகளைக் கற்பனையேனும் செய்து பார்க்க இயலுமா? இதை மிகவும் சாமானிய விஷயமாகக் கருதிப் பேசும் குருஷேவை எளிதில் மன்னிக்கத்தான் முடியுமா? அப்படியே மன்னித்தாலும் பரிகாரம் காணக்கூடிய செயல்தானா இது? ஒரு நாட்டின் கொள்கையில் தவறு இருந்தால் அதனைத் திருத்த இயலும். ஆனால் முடிவு பெற்றுவிட்ட ராட்சதச் செயலாகிய இதன் விளைவுகளை இப்போது சரிசெய்வது என்பது நடக்காத காரியமல்லவா? தான் செய்த கொடூரத்தை ரத்து செய்ய முடியவில்லையே என்று வருந்த வேண்டிய குருஷேவ் இவ்விஷயத்தைப் பற்றி எளிதாகப் பேசியிருப்பது உலக மக்களைக் கொதிப்படையச் செய்கிறது. 'வெடித்த குண்டுகளில் ஒன்று ஐந்து கோடி டன் வெடி மருந்தைவிட அதிக சக்தி பெற்றது. எனினும் நான் கவலைப்படவில்லை' என்கிறார் அவர்.

மற்ற நாடுகள் இதனைச் சகித்துக் கொண்டால் சர்வ தேசச் சட்டம், தர்மம், நீதி இவை அதோகதி அடைய வேண்டியதுதான். "பொறுமையோடு இருங்கள்" என்று நான்

குருஷேவ் அவர்கள் உபதேசம் செய்கிறார். ''பொறுத்தால் நீங்களே பார்ப்பீர்கள்— நாங்கள் விஷத்தைப் பரப்புவதெல்லாம் உலகத்தில் அமைதியை நிலைநாட்டத் தான்'' என்கிறார். மயான அமைதியையே அவர் குறிப்பிடுகிறார் என்று கொண்டாலொழிய இந்தப் பேச்சுக்குச் சற்றும் பொருள் இல்லை.

இந்த வெடிச் சோதனை சர்வதேச சட்டங்களுக்கே வைத்த வெடியாகும். நாடுகள் பரஸ்பரம் சகிப்புத் தன்மை காட்ட வேண்டும், அமைதியுடன் ஒட்டி வாழ வேண்டும் என்ற கருத்துக்களைத் தவிடுபொடியாக்கி விட்டது இது.

இப்போது இந்த அரக்கர்கள் பிடியில் தத்தளிப்பது தவிர நாம் செய்யக் கூடியது ஏதேனும் உண்டா என்று கலங்குகிறது உலகம். நாம் செய்யக்கூடியது ஒன்று உண்டு. மனித குலத்தின் உரிமைகளைத் தகர்த்த சமுதாய விரோதிகளைப் பகிஷ்காரம் செய்வதே இப்போது உலகம் செய்ய வேண்டிய காரியம். மானுடப் பண்புகளையும், நாகரிகத்தையும் கைவிட்டு விட்ட ருஷியாவுக்கு மனித இனத்துடன் கூடி வாழ என்ன அருகதை யிருக்கிறது?

ருஷ்யாவைப் பகிஷ்காரம் செய்யும் தகுதியை மற்ற வல்லரசுகள் அடைவதற்கு ஒரு முதற்படி உண்டு. அணு ஆயுதத் தயாரிப்பையும், சோதனையையும் அவை உடனடியாக நிறுத்த வேண்டும். ருஷியாவின் அசுரச் செயலின் பயனாக மற்ற வல்லரசுகள் தங்கள் சோதனைகளை நிறுத்திவிட்டால் ருஷியாவின் செயல் ஆண்டவன் திருவிளையாடல்களில் ஒன்று என்றே வைத்துக் கொள்ளலாம். விஞ்ஞானத்தால் விளைந்த இந்த விபரீதத்தைத் தடுத்து நிறுத்த வேண்டுமென எண்ணூறு விஞ்ஞானிகளே வேண்டுகோள் விடுத்துள்ளனர். வியர்த்தமாகப் போன பல வேண்டுகோள்களில் ஒன்றாக இதுவும் ஆகிவிடக் கூடாது என்பதே நாம் வேண்டிக் கொள்வது.

# தருமம் தரும் தாரக மந்திரம்

அணுகுண்டுகள் பரப்பும் விஷத்தைப் போலவே வேறொரு விஷத்தைப் பாரத புண்ணிய பூமியில் பரப்பும் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டிருக்கிறது காங்கிரஸ் கட்சி. உடலையோ, அறிவையோ, பாதிக்கும் விஷயமல்ல இது. ஆத்மாவையே அழிந்து போகச் செய்யும் லஞ்சம் என்ற பேயை நாட்டு மக்கள்மீது ஏவி விட்டிருக்கிறது. 'மக்கள் பிரதிநிதித்துவ சட்டத்தில்' அபேட்சகர் செய்யும் செலவுக்கு வரம்பு விதித்துள்ள போதிலும் அவர் சார்பில் கட்சி செய்யும் செலவுக்கு வரம்பில்லாமல் செய்திருக்கிறது அது. காங்கிரஸ்காரர்கள் கட்சியின் தேர்தல் நிதிக்காகத் திரட்டும் இவ்வளவு பணத்தையும் என்னவிதமாகச் செலவு செய்யப் போகிறார்கள்?

தமிழ்நாடு என்ற ஒரு ராஜ்யத்தில் மட்டும், பஸ் சொந்தக்காரர்கள் என்ற ஒரே ஒரு துறையினரிடமிருந்து, ஒரு பஸ் பர்மிட்டுக்கு ஆயிரம் ரூபாய் என்ற விகிதப்படி ஐம்பது லட்சம் ரூபாய் திரட்ட முடியும் என்றால், பலப்பல துறைகளிலிருந்து எல்லா ராஜ்யங்களும் மத்திய சர்க்காருமாகச் சேர்ந்து எவ்வளவு தொகை சேகரிக்கக்கூடும் என்பதை எண்ணிப் பாருங்கள். இப்படி மலையாகக் குவிக்கும் பணத்தையெல்லாம் எப்படிச் செலவு செய்வது என்பதைக் கணக்குப் போட்டுப் பார்த்தால் காங்கிரஸுக்கே தலை கிறுகிறுக்கத்தான் செய்யும்.

நம் மக்கள் பணத்தைப் பெற்று, வோட்டுகள் கொடுத்து விடுவார்கள் என்று காங்கிரஸ் கருதுகிறதென்றால், அதிலிருந்தே அது மக்களை எவ்வளவு தாழ்வாக மதிப்பிடுகிறது என்பதைத் தெரிந்துகொள்ளலாம். காங்கிரஸ் விசியுள்ள இந்த மாய வலையில் மக்கள் சிக்கிக் கொள்ளலாமா? இந்த ஜனநாயகத்தில் தங்களுக்குள்ள உரிமையைப் புலப்படுத்தும் பொதுத் தேர்தல் ஓர் ஏமாற்று வியாபாரமாக, கள்ள மார்க்கெட்டாக மாறுவதற்கு இடம் கொடுக்கலாகாது.

ராஜாஜி அவர்கள் சமீபத்தில் பெங்களூரில் நிகழ்த்திய உரையில் ஒரு மந்திரத்தை உபதேசித்திருக்கிறார். ''லஞ்சம் தருவதால் பயன் ஏற்படாது. வோட்டு சேராது'' என்பதே அந்த மந்திரம். லஞ்சம் கொடுத்துவிட்டால் வெற்றி நிச்சயம் என்னும் எண்ணத்தைப் பொய்யாக்கிவிட வேண்டும். லஞ்சம் பெற்றவர்களும் தங்களை ஏமாற்றி விடலாம் என்று காங்கிரஸ்காரர்கள் உணருமாறு செய்துவிட வேண்டும். அப்போது லஞ்சத்தில் பயனில்லை என்பதை அவர்கள் அறிவார்கள்.

# உச்சவரம்பு வேண்டும்!

அச்சுப் பிழையா என்ற ஐயம் வேண்டாம்! சுதந்திரக் கட்சித் தலைவர் ராஜாஜி அவர்களேதான் இவ்விதம் கூறியிருக்கிறார். உச்ச வரம்பு அவசியம் விதித்தே தீர வேண்டும் என்று வற்புறுத்தியிருக்கிறார் அவர். ஆனால் இந்த வரம்பு நிலத்துக்கோ, செல்வத்துக்கோ அல்ல. சர்க்காரின் அதிகாரத்துக்குத்தான் வரம்பு கட்ட வேண்டும் என்கிறார் ராஜாஜி.

'பலம் சித்தத்தைக் கோளாறாக்கும்' என்று சாணக்கியர் வெகு காலத்துக்கு முன் சொன்னது இன்றும் சத்தியம் என்பதைப் பிரத்தியட்சமாக அறிந்தவர்கள் யாவரும் இந்த உச்சவரம்பை வரவேற்பார்கள்.

1947-ம் ஆண்டு காங்கிரசுக்கு இந்த அதிகாரம் திடீரென்று கிட்டியது. திடீரென்று கிட்டியதனால் அந்த அதிகாரத்தை ஆண்டு அநுபவிப்பதில் காங்கிரஸின் துடிப்பும் பெரிதாக இருந்தது.

அதிகாரத்தை இரண்டு விதங்களில் பிரயோகிக்கலாம். ஒன்று நேரடியாகப் பிரயோகிப்பது; மற்றது 'பிரயோகித்து விடுவேன்' என்று அச்சுறுத்திக் கொண்டிருப்பது. நேரடியாக அதிகாரத்தைச் செலுத்தி விட்டால் அதற்கு ஆளாகிறவர் அதோடு அழிந்து விடுகிறார். அச்சுறுத்திக் கொண்டேயிருந்தால் அதிகாரத்திலுள்ளவர்கள் ஆதாயம் பெற என்றென்றும் உதவியாக இருக்கிறார் அதிகாரத்துக்கு ஆளானவர்.

பணக்காரர்களின் பொருள் முழுவதையும் பறித்துக் கொள்வது இன்றைய ஆட்சிக்கு முடியாத காரியமல்ல. ஆனால் இன்று ஒட்டாண்டியாகி விட்டால் அதன்பின் அவர்களால் கட்சியின் கஜானாவை எப்படி நிரப்ப முடியும்? எனவே பணக்காரர்களை அடியோடு தொலைத்து விடாமல் பயமுறுத்தியே நிரந்தரமாகப் பயனடைந்து வருகிறது காங்கிரஸ். சுட்டுக் கொல்லாமல் துப்பாக்கியைக் காட்டியே கொள்ளை அடிக்கும் கள்ளர்களின் தொழில் முறையை அது பின்பற்றுகிறது. பர்மிட் - லைசென்ஸ் — கோட்டா இவைதான் காங்கிரஸின் துப்பாக்கி.

லைசென்ஸ் பெற்றுள்ள பாக்கியவானிடம் காங்கிரஸ் சொல்கிறது: ''உங்களுடைய வயிற்றில் இந்த நிமிஷமே மண்ணைப் போட எங்களால் முடியும். ஆனால் இன்னும் ஐந்து வருஷங்களுக்கு அப்படிச் செய்யப் போவதில்லை. நன்றி செலுத்துகிறீர்களா? உங்கள் நன்றியால் எங்களுக்கு ஒன்றும் ஆக வேண்டியதில்லை. நன்கொடையாகச் செலுத்துங்கள்'' என்கிறது.

'காங்கிரஸே கண் கண்ட கடவுள்' என்பதைப் புரிந்து கொண்ட லைசென்சுதாரர் அதன் கருணையை வியந்து காணிக்கை செலுத்துகிறார். உடனே வியாபாரி விரும்பும் லைசென்ஸ் மீண்டும் வந்து விடுகிறது.

''இந்தப் பஸ் ரூட்டை நாங்கள் தேசியமாக்கி விட்டால் நீங்கள் என்ன



செய்வீர்கள்?'' என்று பஸ் சொந்தக்காரர்களைக் கேட்கிறது காங்கிரஸ். அவர்கள் கலங்குகிறார்கள். ''பயப்படாதீர்கள்'' என்று உடனே அபயஹஸ்தம் அளிக்கிறது காங்கிரஸ்.

''இப்போதைக்கு அப்படியெல்லாம் செய்யும் உத்தேசமில்லை. உங்கள் உதவி எங்களுக்குத்தானே?'' என்கிறது சர்க்கார் சர்ப்பம். விழுந்து பிடுங்காமல் சீறியதோடு விட்டதே என்று அதன் காலில் விழுந்து பணிகின்றனர் அந்தப் பேதைகள்.

''கரும்புச் சாகுபடி நிலத்துக்கு வரம்பு போடாமல் விட்டோமே! நீங்கள் எவ்வளவு நன்றிக் கடன்பட்டிருக்கிறீர்கள்?' என்று பிழைத்துப் போன பிரிவினரிடம் காங்கிரஸ் சர்க்கார் கூறுகிறது. அவ்வளவுதான்; அவர்கள் கப்பத்தைக் கட்டுகிறார்கள்.

காங்கிரஸின் நேரடியான அதிகாரத்துக்கு இலக்காகாத பொதுமக்கள் தாம் இறுதியில் அந்த அதிகாரப் பிசாசுக்குத் தீனி போடுகிறார்கள்.

தேர்தல் சமயத்தில் இந்தப் பிசாசு கண்ணுண்டு போலக் களியாட்டம் போடுகின்றது. அதிகாரம் துஷ்பிரயோகத்தின் எல்லையை அடைந்து விடுகிறது. இதனால்தான் ராஜாஜி அவர்கள், தேர்தல் காலத்தில் ஆளும் கட்சி தனது சிம்மாசனத்திலிருந்து இறங்க வேண்டும் என்று கூறினார். ஆனால் காங்கிரஸ் அதை ஏற்க முன்வரவில்லை; அதிகாரத்தால் எவ்வளவு ஆதாயம் கிடைக்கிறது என்பதை அறிந்த காங்கிரஸ் அதற்கு ஒப்பவில்லை.

நாடு முழுவதையும் சர்வ மானியம் எடுத்துக் கொண்டுள்ள இந்த அதிகாரத்துக்கு ஓர் உச்சவரம்பு வேண்டுமா வேண்டாமா என்பதை நீங்களே சொல்லுங்கள். சொல்வதோடு நில்லாமல் செயலிலும் அதை நடத்திக் காட்டுங்கள். ஏனெனில் மக்கள் உடைமைகளுக்குத்தான் இந்தச் சர்க்கார் வரம்பு விதிக்கும். சர்க்கார் உரிமைகளுக்கு வரம்பு விதிக்க வேண்டிய பொறுப்பு மக்கள் கையில் தான் இருக்கிறது.

# ஆலாட்ச மணி ஒலிக்கிறது!

தர்ம தேவதையின் திருக் கோயிலிலுள்ள ஆலாட்ச மணி முழங்குகிறது. காது கொடுத்துக் கேட்கிறவர்களெல்லாம் சுதந்திரக் கட்சியின் தேர்தல் அறிக்கையில் அந்தத் திவ்விய நாதத்தைச் செவியுறுகிறார்கள்.

மக்களுடைய சுதந்திரத்தையெல்லாம் பறித்துச் சர்வாதீனமாக நடத்தும் ஆட்சியை ஒழிப்பதற்குக் கட்டியம் கூறுகிறது சுதந்திரக் கட்சி. தனி மனிதனுக்கு நாட்டில் நடுநாயகமான நிலையை ஈட்டித் தருவதற்கு முன்வந்திருக்கிறது சுதந்திரக் கட்சி. தனி மனிதர்களின் முயற்சியும், ஈடுபாடும் முழு வளர்ச்சி பெறும் வாய்ப்பை இது அளிக்கிறது.

வரிப் பளுவினால் முதுகெலும்பு முறிந்து போன மக்களை ஆசுவாசப்படுத்த, இதோ ஒரு கட்சி இருக்கிறது.

தனது நீண்ட காலத் திட்டங்களுக்காக இன்றைய சந்ததியினரின் வாழ்வைக் காங்கிரஸ் ஆட்சி அடகு வைத்திருக்கிறதல்லவா? அம்மக்களைத் தளையிலிருந்து விடுவிப்பதாக வாக்குக் கூறியிருக்கிறது சுதந்திரக் கட்சி. இன்று நம் மக்களுக்குத் தேவைப்படும் அன்றாட வாழ்க்கைப் பொருள்களின் உற்பத்திக்கு முதலிடம் கொடுப்பதாக அது கூறுகிறது.

அதிகாரிகளை மக்களுடன் பழக விட்டுக் கட்சிக்கு நலன் தேடிக் கொள்ளும் அக்கிரமத்தை அடியோடு வெட்டி வீழ்த்துவதற்கு முற்பட்டிருக்கிறது சுதந்திரக் கட்சி. 'லஞ்சத்துக்கு மசிய மாட்டோம் என்று மக்கள் உறுதி பூண வேண்டும்' என்று கூறிய அதே கூட்டத்தில் 'மக்களை ஒருகாலும் பணபலத்தால் மயக்க மாட்டோம்' என்ற சுதந்திரக் கட்சியின் பிரதிக்ஞையையும் ராஜாஜி பிரகடனப் படுத்தினார் அல்லவா? அந்தப் பிரதிக்ஞையை வலியுறுத்துகிறது சுதந்திரக் கட்சியின் தேர்தல் விஞ்ஞாபனம். நேர்மையான நிர்வாகம் என்பது கனவாகத் தேய்ந்த இன்று மக்களின் மனத்தில் அமுதத்தை வார்க்கிறது அது.

பணவீக்கத்தைத் தடுத்து, விலைவாசிகளை ஸ்திரப்படுத்தும் நடவடிக்கைகளை சுதந்திரக் கட்சி அதிமுக்கியமாகக் கருதும் சீர்திருத்தமாகும். பணவீக்கத்தைக் குறைப்பதோ, விலைகளைக் கட்டுப்படுத்துவதோ காங்கிரஸால் ஒருகாலும் இயலாத காரியம். எவ்வளவோ பித்தலாட்டம் செய்யும் அந்தக் கட்சியும் இவ்விஷயங்களை மறுத்துக் கூறாதது கவனிக்க வேண்டிய விஷயமாகும். தங்கள் கையிருப்பின் மதிப்பு இன்னதென்றே தெரியாத அவல நிலை ஒழிய வேண்டுமானால் மக்கள் அதற்குச் சுதந்திரக் கட்சியை ஆதரிப்பதொன்றே வழி என்பதை விஞ்ஞாபனம் தெளிவு படுத்துகிறது.

பொது மக்களுக்குச் செய்யவிருக்கும் இவ்வளவு நன்மைகளுடன் விவசாயிகள், தொழிலாளர்கள் முதலிய ஒவ்வொரு பிரிவினருக்கும் விசேஷ வசதிகள் அளிக்கும் திட்டங்களைச் சுதந்திரக் கட்சியின் விஞ்ஞாபனத்தில் காண்கிறோம். மக்களுக்குச் சுதந்திரம் இல்லாததோடு சர்க்காரும், பார்லிமெண்டும் கூடச் சுதந்திரமின்றித் திட்டக் கமிஷனுக்கு அடிமையாக வாழும் விபரீதத்தையல்லவா இன்று காண்கிறோம்? ஜனநாயக முறைக்கு ஒவ்வாத திட்டக் கமிஷனை எடுத்துவிடப் போவதாகவும் சுதந்திரக் கட்சி கூறுகிறது.

எல்லாவற்றுக்கும் மேலாக, காங்கிரஸ் ஆட்சி சிதைத்துள்ள ஆன்மீகப் பண்புகள் தழைக்க வழி செய்யும் கட்சி அல்லவா சுதந்திரக் கட்சி?

சத்தியத்தின் சங்கநாதத்தை ஒலி பரப்புவதே கடமையாகக் கொண்ட கல்கி பத்திரிகையின் ஏடுகளில் இவை பற்றி இனி விளக்கமாகப் படிக்கத்தான் போகிறீர்கள்.

மணி முழங்கியபின் ஆராதனை நடக்க வேண்டியதுதானே? அறக் கடவுளுக்குப் புரியும் ஆராதனையாகவே மக்கள் பொதுத் தேர்தலை நடத்தி வைப்பார்களென நம்புகிறோம்.

# என்ன சேதி?

## மதுரமான சேதி

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட கால முடிவுக்குள் எல்லா ராஜ்யங்களும் பூரண மதுவிலக்கை அமுலாக்குவதற்குத் திட்டம் வகுக்க வேண்டுமென மத்திய மதுவிலக்குக் கமிட்டி சிபாரிசு செய்துள்ளது. இதனைத் தில்லி சர்க்காரும் ஆமோதித்துள்ளது.

குடியால் விளையும் கேட்டினை எடுத்துச் சொல்ல வேண்டியதே இல்லை. மகாத்மாவுக்கு மிகவும் பிடித்தமான மதுவிலக்குத் திட்டம் தேசமெங்கும் அமுலுக்கு வந்தால் அது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

தற்போது மதுபானம் தடையாகியுள்ள இடங்களில் கள்ளத்தனமாகச் சாராயம் காய்ச்சும் குற்றம் பெருமளவில் இருந்து வருகிறது என்பதால் திட்டத்தையே கைவிட வேண்டுமென்று விஷயஞானம் உள்ள சிலரும் கூறுவது வருந்தத் தக்கதாகும். தீய நடவடிக்கைகள் அதிகமாவதை ஒட்டி, தடுப்புக் காரியங்களையும் தீவிரப்படுத்துவது தான் நியாயம்; அந்தத் தீயச் செயல்களே குற்றம் அல்ல என்று தள்ளுபடி செய்வது முறையாகாது. எனவே மதுவிலக்குப் போலீசார் தங்கள் கடமையை முன்னிலும் சிறப்பாக ஆற்றுமாறு செய்ய வேண்டியதே அவசியமாகும்.

மது விற்பனையில் கிடைக்கும் கலால் வரி நஷ்டமாவதைச் சிலர் குறிப்பிட்டு, மதுவிலக்கை எதிர்க்கிறார்கள். மக்களின் தீய காரியங்களை வருமானம் கிடைக்கும் ஆதாரங்களாக்கிக் கொள்வது நியாயம்தானா என்று இவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தற்போது மதுவிலக்கை அமுல் செய்தால் இழக்க நேரிடும் தொகையில் பாதியைப் பகிர்ந்து கொள்ள மத்திய சர்க்கார் முன்வருமெனத் திட்டக் கமிஷன் உபதலைவர் ஸ்ரீ நந்தா கூறியிருக்கிறார். அவசியமானால் இந்த நஷ்டம் முழுவதையுமே தில்லி ஏற்று, இந்த நாட்டிலிருந்து மது அரக்கனை விரட்டத் தயங்கக் கூடாது என்பதே நம் விருப்பம்.

## வரிப் பயன் யாருக்கு?

நமது காங்கிரஸ் ஆட்சி தன்னை 'க்ஷேமாபிவிருத்தி சர்க்கார்' என்று சொல்லிக் கொள்கிறது. யாருடைய க்ஷேமத்தை அது அபிவிருத்தி செய்கிறது என்பது மக்களுக்குத் தெரியும். தெரியாதவர்கள் தெரிந்து கொள்ளட்டுமே என்று இப்போது ஒரு காரியம் செய்திருக்கிறது அரசாங்கம்.

நிலக்கரி போதிய அளவு கிடைக்காததாலும், அதன் விலை கூடுதலாகி விட்டபடியாலும் சிமெண்டின் அடக்க விலை அதிகமாகிவிட்டது என்று சிமெண்டுத் தொழிற்சாலைகள் கூறின. உடனே காங்கிரஸ் சர்க்காரானது சிமெண்டின் விற்பனை விலையை அதிகமாக்கிவிட்டது. இதனால் ஒரு டன் சிமெண்டின் விலை பதின்மூன்று ரூபாய் உயரும். அப்பாவிகளாக இருப்பவர்களுக்கு இது நியாயமாகவே தோன்றும். உற்பத்தியாளர், உபயோகிப்பவர்கள் இவர்களில் ஒருவர் பளுவைச் சுமந்துதானே ஆகவேண்டும் என்று அவர்கள் கேட்பார்கள். இவ்விருவருக்குமிடையே நின்று, ஒரு கணிசமான சத விகிதத்தை வரி என்ற பெயரில் விழுங்கி வரும் சர்க்காரை அவர்களுக்குச் சுட்டிக் காட்ட வேண்டியிருக்கிறது. இப்போது சில்லறை விற்பனையில் ஒரு டன் சிமெண்ட் 152 ரூபாயென்றால் அதில் இருபது சத

விகிதமான முப்பது ரூபாய் சர்க்காருக்கு வரியாகச் சேருகிறது. 'சொந்த வீடு கட்டிக் கொள்ளுங்கள்' (Own your own house) என்பது போன்ற இயக்கங்கள் நடத்தி வருகிறது நம் க்ஷேமாபிவிருத்தி சர்க்கார். எனவே வீடு கட்டத் தேவைப்படும் இந்த முக்கியமான பொருளானது எல்லோருக்கும் நியாயமான விலையில் கிடைக்க வேண்டுமானால் தான் ஈட்டும் வரியிலிருந்து பதின்மூன்று ரூபாயை அது கழித்துக் கொண்டிருக்க வேண்டியதே முறையாகும். வரிப் பணத்தைச் சர்க்கார் சொத்து போலக் கருதி, பொது மக்களில் ஒரு பகுதியினரை மட்டும் பாதிக்கும் செயலில் அது இறங்கி யிருப்பது புரியாத புதிராக இருக்கிறது.

இதில் வேடிக்கை என்னவென்றால் சர்க்கார்தான் அதிகமாக சிமெண்ட் உபயோகிப்பது. மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் அது சுமார் இரண்டரைக் கோடி டன் சிமெண்ட் வாங்க வேண்டியிருக்கும். அதாவது இந்த விலை உயர்வினால் முப்பத்தைந்து கோடி ரூபாய்க்கு மேல் திட்ட மதிப்பீட்டைவிட அதிகமாகச் செலவிடப் போகிறது சர்க்கார். இதைக் காணும்போது நம் சர்க்காரின் போக்கு விசித்திரமாகத்தானே தோன்றுகிறது?

## ஓரே பரிகாரம்

சென்ற வாரம் கவர்னர்கள் மகாநாடு, பல்கலைக்கழகத் துணைவேந்தர்கள் மகாநாடு, கல்லூரி மாணவர்களின் இளைஞர் விழா இப்படிப் பல முக்கியமான சந்திப்புக்கள் தில்லியில் நடைபெற்றன. இன்றைய தனிப்பெரும் பிரச்னையான தேசிய ஒருமைப்பாடு பற்றி இவற்றிலெல்லாம் விவாசித்தார்கள். ஒரே ஒரு விவேகமான முடிவு மூன்று மகாநாட்டிலும் வெளியிடப்பட்டது. ஆங்கிலமே பல்கலைக் கழகப் போதனமொழியாக இருக்க வேண்டும்—அப்போதுதான் கல்வி அறிவு பெற்ற மக்களாவது ஒருவரோடொருவர் பழகி ஐக்கியத்தை ஏற்படுத்திக்கொள்ள இயலும் என்று வற்புறுத்தப் பட்டது. வரவேற்க வேண்டிய விஷயம். இதே கருத்து ஆட்சி மொழி விஷயத்திலும் தோன்றுமானால் எவ்வளவோ நன்றாக இருக்கும்.

இவற்றோடு சென்னையில் சமுதாய ஒழுக்க மகாநாடு ஒன்று நடந்தது. காலா காலத்தில் திருமணம் செய்து வைத்து இயற்கை வேகங்களை நியதிப்படி செல்லவைப்பதால் தூய்மை பெருகும் என்று லோகசபை சபாநாயகர் தைரியமாகக் கூறினார். இதற்கும் நம் வரவேற்பை நல்குகிறோம்.

ஆனாலும் தேசிய ஒருமைப்பாடு, ஒழுக்கம் இவை வளரத் தற்போது கூறப்பட்டுள்ள யோசனைகள் இப்போது நாட்டைப் பீடித்துள்ள வியாதியின்மூலத்தை ஆராய்ந்து கொடுத்த மருந்தாகத் தெரியவில்லை. வெளியில் காணப்படும் அடையாளங்களை மட்டுமே குணப்படுத்துவதுபோல இவை தோன்றலாம். உள்ளே அடங்கிக் கிடக்கும் நோய்க் கருவை ஆற்ற இவை போதா. சமய உணர்ச்சி, தெய்வ நம்பிக்கை இவற்றை ஊட்டும் கல்வி முறைதான் தேச மக்களிடையே சமரஸ ஐக்கிய பாவத்தையும் சீலத்தையும் வளர்க்கும். பிரதமர் கருதுவதுபோல் மாணவர்கள் தினம்இரண்டு வேளையும் தேசிய கீதத்தைக் கோஷ்டி கானமாக இசைப்பதாலோ, பாடபுத்தகங்களைச் சர்க்காரே வெளியிடுவதாலோ ஒற்றுமை ஏற்பட்டுவிடாது. பக்தியையும் மதப்பற்றையும் பேணுவதற்குச் சர்க்கார் முன்வராத வரையில் ஒருமைப்பாட்டையும், ஒழுக்கக் கேட்டையும் பற்றி எத்தனை கூட்டங்கள் போட்டாலும் ஒரு பயனும் விளையாது.

## தொழில் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை

சமீபத்தில் நடைபெற்ற முக்கியத்துவம் வாய்ந்த கூட்டங்களில் மற்றுமொன்று தொழில் துறை மத்திய ஆலோசனைக் குழு புது தில்லியில் நடத்தியதாகும். பிரபல தொழிலதிபர்கள் பலர் இதில் கலந்து கொண்டனர். நவபாரதத்தில் புதியதொரு தொழில் யுகத்தை நிர்மாணிக்கப் போவதாகப் பறைசாற்றிய மூன்றும் திட்டம் வெளியாகி ஏழு மாதங்கள் ஆவதற்குள் அதில் உள்ள பொத்தல்கள் இக் கூட்டத்தில் தெரிய வந்தன. மின்சாரம் போதிய அளவு கிடைக்கவில்லை, நிலக்கரி சரியாகக் கிடைப்பதில்லை என்றும் இவற்றால் உற்பத்தி பாதிக்கப்படுவதாகவும் குறைபாடுகளும் முறையீடுகளும் தெரிவிக்கப்பட்டன. இதற்குச் சர்க்கார் தரப்பில் தரப்பட்ட பதில்கள் விநோதமானவை.

மின்சாரம் சர்க்கார் துறையிலேதான் இருக்க வேண்டும். தனியார் அந்தத் துறையில் பிரவேசிப்பது தவிர்க்கப்படும் என்று சம்பந்தமே யில்லாத விடைதரப்பட்டது. நிலக்கரி விநியோகம் சரிவர நடைபெறாததற்குக் காரணம் ரயில்வேயின் காலதாமதம்தான் என்று கனிவள இலாக்கா ரயில்வேயைத் தாக்க, ரயில்வே இலாக்கா கனிவள இலாக்கா

வின் மீது எதிர்த் தாக்குதல் செலுத்திற்று. 'இதெல்லாம் தொலையட்டும். சாலைப் போக்குவரத்தையாவது விஸ்தரித்துக் கொள்ளத் தனியாருக்கு வசதி செய்து தாருங்கள்' என்று கேட்டுக் கொண்டதற்கும் சம்மதம் அளிக்கச் சர்க்காருக்கு மனமில்லை.

இந்த மகாநாட்டில் ஓர் உபயோகமான விஷயம் மட்டும் தெரிந்தது. நாட்டின் தொழில் உற்பத்தி இன்ன துறைகளில் பெருக வேண்டும் என்பதைச் சர்க்கார்தான் நிர்ணயிக்கிறது என்பதே அது. 'எங்கள் திட்டம் நிறைவேற ஏராளமான அந்நியச் செலாவணி வேண்டும். எனவே மூலப்பொருளும், உபகரணமும் அதிகம் இறக்குமதி செய்யாத தொழிலகங்களுக்கும், ஏற்றுமதி செய்யக் கூடிய பண்டங்களைத் தயாரிப்பவர்களுக்கும் தான் அதிகச் சலுகை காட்டுவோம்' என்று தொழில் மந்திரி மனுபாய்ஷா வெளிப்படையாகக் கூறினார். நாட்டுக்கு எந்தப் பண்டங்கள் தேவை என்பது பற்றிக் கவலைப்படாமல் தங்கள் திட்டம் நிறைவேறுவதிலேயே கண்ணாக இருக்கும் கம்யூனிஸ மனப்பான்மையை அதன் மூலம் நாடறியச் செய்திருக்கிறார் அவர்.

## அதிகாரப் பிச்சை

ராஜ்ய சர்க்கார் எழுப்பும் கடன்களுக்கு, பாங்கிகள் போதிய அளவு கடன் செலுத்துவதில்லை என்று ஒரு மகாராஷ்டிர மந்திரி குறைப்பட்டிருக்கிறார். இத்துடன் நின்றிருந்தால் பரவாயில்லையே! இதற்கு மேல் ஒரு படி எழும்பி, இந்த நிலை இப்படியே நீடித்தால் சர்க்கார், பாங்குகளைத் தேச உடைமையாக்கி விடும் என்று பயமுறுத்தியிருக்கிறார். காற்று எந்தப் பக்கம் அடிக்கிறது என்பது தெளிவாகி விட்டது! இதிலிருந்து காங்கிரஸ் அடுத்த தடவை பதவிக்கு வந்தால் தங்கள் இஷ்டப்படி செயல் படாத தனியார் துறைத் தொழிலையெல்லாம் சர்க்கார் உடைமையாக்கி விடும் என்பது நிச்சயமாகத் தெரிகிறது.

பாங்குகள் மக்களின் பொருளாதார வாழ்வின் ஜீவநாடி. அவை தொழில்கள் செழிக்கும் முறையில் கடன்கள் அளிக்கவும், டெபாசிட் செய்தோர் நலனைப் பாதுகாக்கவுமே உள்ளன. சர்க்காருக்குக் கடன் செலுத்துவதற்காக அல்ல. இதையெல்லாம் கருதாது பூச்சாண்டி காட்டும் மகாராஷ்டிர மந்திரி இன்றைய ஆட்சியாளர்களுக்கு ஒரு சின்னஞ் சிறிய 'சாம்பிள்' தான்.




சேலம் ஸ்ரீ சௌந்தரராஜப் பெருமாள் ஆலயம் மிகவும் பழமையானது. அது கோட்டைப் பெருமாள் கோயிலெனப் பெயர் பெற்றது.

ஒரு சமயம் பிருகு முனிவர் மகா லக்ஷ்மியைக் குறித்துக் கடுந் தவம் புரிந்து தமக்குப் பெண்ணாக வரும்படி வேண்டினார். தேவியும் சிறு பெண்ணாக அவருக்குக் காட்சியளித்து அவரது ஆசிரமத்திலேயே வளர்ந்து வந்தாள். தமது பெண் பேரழகு நிரம்பப் பெற்றவளாக இருந்ததால் 'சுந்தரவல்லி' எனப் பெயரிட்டு அழைத்து வந்தார். மகாலக்ஷ்மியைப் பிரிந்த மகாவிஷ்ணுவும் அழகு வாய்ந்த திருமேனி கொண்டு தமது தேவியைத் தேடி வந்து முனிவர் ஆசிரமத்தில் அவளைக் கண்டார். பெருமாள் அழகு வாய்ந்த திருமேனியுடன் அங்கு எழுந்தருளியதால் பிருகு முனிவர் 'சுந்தரராஜன்' எனப் பெயரிட்டு அவரை அழைத்தார். முனிவர் பெருமாள் ஸ்ரீ நாராயணனைத் தமது பெண்ணான மகாலக்ஷ்மிக்கு வரனாக ஏற்று ஸ்ரீ தேவியைக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார். இப்படி மகாவிஷ்ணுவுக்கும் மகாலக்ஷ்மிக்கும் திருக் கல்யாணம் நடந்த க்ஷேத்திரம்தான் சேலம். ஸ்ரீ சுந்தரராஜப் பெருமாளும் ஸ்ரீ சுந்தரவல்லித் தாயாரும் கல்யாண கோலத்துடன் இன்றும் அங்கு விளங்கி வருகிறார்கள்.

இந்த ஆலயத்தில் மிக உயரமான உருவத்துடனும் அழகிய அங்க அமைப்புடனும் விளங்கி வரும் ஆஞ்சநேயர் குறிப்பிடத் தக்கவர். புராண வரலாற்றுப் பெருமை வாய்ந்த இத் திருக் கோயிலின் திருப்பணியை உள்ளூர் பக்தர்கள் சிலர் ஆரம்பித்திருக்கின்றனர். மிகப் பழமையான இந்த ஆலயத்துக்கு ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் திருப்பணிச் செலவு ஆகுமெனக் கணக்கிடப் பெற்றிருக்கிறது. ஆஸ்திகர்கள் இந்தப் புண்ணிய கைங்கரியத்துக்குப் பரிபூரணமாய் உதவிபுரிய வேணும். அவ்வாறு செய்து ஸ்ரீ சுந்தரவல்லி ஸமேத ஸ்ரீ சுந்தரராஜப் பெருமானின் பரிபூரண அனுக்கிரகத்துக்குப் பாத்திரர்களாகும்படி ஆஸ்திகப் பெருமக்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

பொருள் அனுப்ப வேண்டிய விலாசம்: **ஸ்ரீ கே. ஏ. சஞ்சீவி செட்டியார், தலைவர், சுந்தரராஜப் பெருமாள் கோயில் திருப்பணிக் குழு, முதல் அக்ரகாரம், சேலம்.**



# காச்மீரத்தில் கலைஞர் கூட்டம்

இந்திய சரித்திரம், இலக்கியம், மொழி, மதம், ஆசாரம், பண்பாடு, புதைபொருள் முதலிய துறைகளில் ஆராய்ச்சி செய்யும் ஸ்தாபனமான, அகில பாரதீய 'ஓரியண்டல் கான்பரன்'ஸின் 21-வது மகாநாடு காச்மீர அரசாங்கம், சர்வகலாசாலை இவற்றின் ஆதரவில் சென்ற அக்டோபர் மாதத்தில் ஸ்ரீநகரத்தில் நடைபெற்றது.

இந்த மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கும் கௌரவம் சென்னை சர்வகலாசாலை சம்ஸ்கிருதப் பேராசிரியர் டாக்டர் வே. ராகவன் அவர்களுக்கு அளிக்கப்பட்டது நாமெல்லோரும் பெருமை கொள்ள வேண்டிய விஷயம். சென்ற நாற்பத்திரண்டு ஆண்டுகளில் நடந்திருக்கும் இந்த ஸ்தாபனத்தின் இருபத்தொரு மகாநாடுகளில் தென்னிந்திய சம்ஸ்கிருதப் பேராசிரியர் ஒருவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது இதுவே முதல் முறையாகும்.

மகாராஜா கரன் ஸிங் மகாநாட்டைத் திறந்து வைத்தார். பிரதம மந்திரி பக்ஷி குலாம் முகம்மது, மற்றும் பல பிரமுகர்களும் வந்திருந்தனர். ஜம்மு — காச்மீர சர்வகலாசாலைத் தலைவர் சர்தார் பணிக்கர் எல்லோரையும் வரவேற்றார்.

காச்மீரத்துக்கும் தென்னாட்டுக்கும் உள்ள தொடர்பு, அலங்காரம், நாடகம், சைவம், பௌத்தம் முதலிய துறைகளில் காச்மீரம் ஆற்றிய சீரிய தொண்டு, வேதம், பார்ஸி இலக்கியம், அராபி-பார்ஸிய இலக்கியம், சம்ஸ்கிருதம், மதம், மொழிகள், புதைபொருள், கவடிகள், தென் தேசத்திய நாகரிகம் அயல்நாட்டில் பாரதப் பண்பாடு பரவிய சரித்திரம்,—இந்தத் துறைகளில் சமீபத்தில் நடந்த ஆராய்ச்சிகள், இவைகளைப் பற்றித் தமது தலைமை உரையில் டாக்டர் ராகவன் விளக்கிக் கூறினார்.

பாரத சரித்திர ஆராய்ச்சியை எவ்வாறு நடத்த வேண்டும், இந்தியாவின் ஐக்கியத்தைப் பலப்படுத்த ஆராய்ச்சியாளர் எவ்வாறு உதவ முடியும், இந்தியப் பண்பாட்டின் அடிப்படையான உண்மைகள் எவை என்பன பற்றிப் பல அரிய கருத்துக்களை வெளியிட்டார் டாக்டர் ராகவன். இந் நாட்டில் அவ்வப்போது ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு மக்களும் மன்னரும் சென்று வாழ்ந்ததால் எந்த ஒரு பிரதேசமும் ஒரு குறிப்பிட்ட மக்களுக்கு மட்டும் உரிமையானது என்று சொல்ல முடியாது; எனவே மாகாண மொழிச் சண்டைகளுக்கு இடமே இல்லை என்றும் எடுத்துக் காட்டினார்.

அந்தந்தத் துறைகளில் புலமைமிக்க அறிவாளிகள் தனித்தனியே கூடிச் சுமார் ஐந்நூற்றுக்கு மேலான கட்டுரைகளை மகாநாட்டில் படித்தனர்.

சுமார் நூறு சம்ஸ்கிருதப் பண்டிதர்கள் கூடிப் பல விஷயங்களைப் பற்றிப் பண்டித பரிஷத்தில் சம்ஸ்கிருதத்திலேயே பேசினர்.

மத்திய ஆசியா, மங்கோலியா சைபீரியா முதலிய வெளிநாடுகளில் பாரதப் பண்பாடு, மதம் இலக்கியம், வைத்தியம் முதலியன எப்படிப் பரவியிருந்திருந்தன என்பது பற்றி டாக்டர் ரகுவீரர் ஒரு சிறந்த சொற்பொழிவு ஆற்றினார். காச்மீர இசை, லதக்—நிருத்தம் முதலியன அடங்கிய ஒரு கலை விருந்தும் நடைபெற்றது.

காச்மீரத்தின் அழகு, கவர்ச்சி இவற்றின் காரணமாய் எதிர்பார்த்ததற்கும் மேலாகச் சுமார் தொள்ளாயிரம் அங்கத்தினர்கள் சேர்ந்திருந்தனர். பண்டைக்காலத்தில் இந்தியப் பண்பாட்டின் வளர்ச்சியில் காச்மீரம் சிறப்பான பங்கு கொண்டிருந்ததும் ஒரு காரணமாக இருக்கலாம். இந்தியப் பல்கலைக் கழகங்கள் எல்லாவற்றிலிருந்துமே பல துறைகளில் தேர்ச்சிபெற்ற புலவர்கள் வந்திருந்ததோடு, இந்திய ஆராய்ச்சியில் ஈடுபட்ட அறிஞர் பலர் மேனாடுகளிலிருந்தும், பர்மா, ஈழம் முதலிய நாடுகளிலிருந்தும் வந்திருந்தனர்.

காச்மீரத்திலிருந்து கேரளம் வரை இந்தப் பாரதத்தை அன்று ஒன்றாய்ப் பிணைத்துக் காட்டியது ஆதிசங்கரர். ஸ்ரீநகரத்தில் நகரத்துக்கே நாயகம் போல் நிற்கும் ஆயிரம் அடி உயரமுள்ள மலைக்கு சங்கராச்சார்ய மலை என்று இன்றும் பெயர் வழங்குகிறது. பிற மதத்தினரை வென்று, 'சாரதா' என்ற சரஸ்வதி தேவிக்கு உறைவிடமாயிருந்த இந்தக் காச்மீரத்தில்தான் ஸ்ரீ ஆதி சங்கரர் 'ஸர்வஜ்ஞ பீடம்' ஏறினார். இந்திய ஐக்கியத்தின் சின்னமாகத் திகழும் இம் மலையில் ஏறிவிட்டு வராத யாத்திரிகர் எவருமே இல்லை. அப்படியிருக்க இந்தக் கலைஞர்கள் சும்மா வருவார்களோ!

---

# சுதந்திர நிதி

**(29—10—61 லிருந்து 4—11—61 வரை)**

| | | |
|---|---|---|
| வி. எஸ். பழனியப்ப முதலியார் | 100 | 00 |
| எஸ். குருசுவாமி | 2 | 00 |
| பெங்களூர் அன்பர் | 111 | 00 |
| எஸ். ஏ. குருமூர்த்தி | 10 | 00 |
| ஏ. எஸ். குப்புசுவாமி | 50 | 00 |
| கே. ஆர். ராமச்சந்திர ராவ் | 100 | 00 |
| 10-1-61 முதல் 28-10-61 முடிய | 8464 | 86 |
| ஆக ரூ. | 8837 | 86 |

---

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்கிறவர்கள் ஸ்ரீ ராஜாஜி c/o 'கல்கி' காரியாலயம், சென்னை - 10 என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.

# தீபாவளி முதல்

சென்னை மற்றும் தென்னாடெங்கும்



MAV PICTURES

எம்.ஏ.வி. பிக்சர்ஸாரின்...

# பணம் பந்தியிலே

டைரக்ஷன்: கிருஷ்ணராவ்

கதை: இரா. செழியன்

வசனம்: சேலம் நடராஜன்

பாடல்கள்: கா.மு.ஷரீப்

சங்கீதம்: K.V. மஹாதேவன்

BHARATH STUDIO

ஸ்டுடியோ: ரத்னா (சேலம்)

# கேட்டீர்களா சேதி?

சென்னை பிராட்வேயில் இருக்கும் பல்கலைக் கழக மாணவர் உணவு விடுதியைச் சேர்ந்த மாணவர்கள் தங்களுடைய கோரிக்கைகள் நிறைவேறும்வரையில் விடுதியில் சாப்பிடுவதில்லை என்று முடிவு செய்திருக்கிறார்களாம்.

பல்கலைக்கழக மாணவர்கள் ரொம்ப ரொம்பக் கெட்டிக்காரர்கள். தற்காலத்து அரசியல்வாதிகள் மாதிரி சாகும் வரை உண்ணாவிரதம் என அசட்டுப்பிசட்டென்று முடிவு செய்யவில்லையல்லவா?

ஃ ஃ ஃ

"ஓவியக் கண்காட்சி ஒன்று சமீபத்தில் மெக்சிகோவில் நடந்தது. திருட்டுப் போன முப்பத்தெட்டு ஓவியங்கள் அந்தக் கண்காட்சியில் வைக்கப்பட்டிருந்தன. உள்ளூர்ப் பொருட் காட்சியிலிருந்து மேற்படி ஓவியங்கள் 1929-ம் ஆண்டிலிருந்து 1946-ம் ஆண்டுக்குள் திருட்டுப்போனவையாகும். தனிப்பட்டவர் சேகரித்து வைத்திருந்த ஓவியங்களிலிருந்து அந்த ஓவியங்கள் கண்டெடுக்கப்பட்டன என்பதாக அதிகாரிகள் கூறினார்கள்."

இந்தத் திருட்டுக் கண்காட்சி மிகவும் நூதனமானதுதான். மேற்படி ஓவியங்களைத் திருடிப் பல்லாண்டுகளாகச் சேகரித்து வைத்திருந்து அவைகளை ஒரு தனிக் கண்காட்சியில் வைக்கப் பெரிதும் உதவியாயிருந்த ஓவியத் திருடர்களைப் பற்றிய விவரங்களும் சரித்திரத்தில் இடம் பெற வேண்டியவைதான்.

ஃ ஃ ஃ

"கார்டன் தாம்சன் என்னும் ஐரோப்பியர் ஜீன் என்னும் மாதைச் சில ஆண்டுகளுக்கு முன்பு மணந்து கொண்டார். திருமணத்துக்குப் பிறகு மனைவி படிப்படியாகப் பெண்களுக்குரிய ஆடைகளைக் கைவிட்டு, ஆண்களுக்குரிய ஆடைகளை உடுத்தலானாள். தாம் பார்த்து வந்த காரியதரிசி வேலையை விட்டு விட்டுத் தொழிற்சாலையில் தொழிலாளியானாள். ஆண்களுக்குரிய சைக்கிள் வாங்கினாள். தன் மனைவி நாளுக்கு நாள் ஆண் வேடதாரியாகி நடிக்க முற்படவே, வேதனையுற்ற கணவன் அவளை விட்டுப் பிரிந்தார். கணவனிடம் கொடுமையாக நடந்து கொண்டாள் என்ற காரணத்தைக் காட்டி நீதிபதி விவாகரத்துக்கு அனுமதி அளித்துள்ளார்."

இந்த விசித்திர வழக்கில் கணவனின் நிலை வருத்தத்துக்கு உரியதுதான் என்றாலும், அவர் செய்தது சரியல்ல. மனைவி கைவிட்ட சம்சார சாம்ராஜ்யத்தைக் கணவர் கைப்பற்றியிருக்க வேண்டாமோ? இது என் அபிப்பிராயமல்ல. சம்சார வாழ்வில் சமாதானத்தை நிலைநாட்ட விரும்பும் ஒரு பழுத்த சம்சாரியின் கருத்து!

ஃ ஃ ஃ

"போக்குவரவில் பல சௌகரியங்களை உத்தேசித்துத்தான் சர்க்கார் பஸ் போக்குவரவை ஏற்று நடத்துகிறார்கள் என்று கூறப்படுகிறது. ஆனால் ஒருவருக்கும் ஒரு சௌகரியத்தையும் காணுமே! எந்த மார்க்கத்திலும் பஸ்கள் பொது மக்களின் சௌகரியத்துக்கு ஏற்ப ஓடுவதாகத் தெரியவில்லையே."

ஒரு பொதுக்கூட்டத்தில் பிரசங்கி ஒருவர் இம்மாதிரி அங்கலாய்த்தார். அவர் சர்க்காரின் நோக்கத்தைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார் என்றுதான் கருத வேண்டியிருக்கிறது....... 'போக்குவரவில் பல சௌகரியங்கள்' என்றால் இவர் 'மக்களுக்கு' என்று ஏன் நினைக்கிறார்? சர்க்கார் 'தங்கள்' சௌகரியங்களைக் கருதி அவ்வாறு கூறியிருக்கலாம் அல்லவா?

ஃ ஃ ஃ

"காலஞ் சென்ற இரும்பு மனிதர் ஸ்டாலின் பல ஆண்டுகள் யாருடனும் பேசாமலும், கிரெம்ளின் அரண்மனையை விட்டு வெளிவராமலும் இருந்திருக்கிறார். தமது இறுதிக் காலத்தில் ஸ்டா





உடுப்பியில் கோயில் கொண்டுள்ள கண்ணபிரானைத் தரிசிக்க வரும் யாத்திரீகர்களுக்காக அதமார் மடத்து சுவாமிகளின் பேராதரவில் ஒரு சத்திரம் கட்டப்பட விருக்கிறது. இந்தப் புனித கைங்கரியத்துக்குச் சென்ற மாதம் 29-ந்தேதியன்று பெங்களூரில் நடைபெற்ற ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் உதவிக் கச்சேரியின் மூலம் வசூலான எழுபதாயிரம் ரூபாயிலிருந்து திருவாரூரில் நிர்மாணிக்கப்பட்டு வரும் ஸ்ரீ முத்துசுவாமி தீக்ஷிதர் பூஜாகிருகத் திருப்பணிக்கு ஐயாயிரம் ரூபாய் அளிக்கப்பட்டது.

ஸ்ரீ தீக்ஷிதர் பூஜாகிருகத் திருப்பணிக்காக அதமார் மடம் சுவாமிகளிடமிருந்து ஐயாயிரம் ரூபாய்க்குச் 'செக்' பெற்றுக் கொண்ட கல்கி அதிபர் ஸ்ரீ சதாசிவம் அவர்கள், கர்நாடக சங்கீதத்தின் பிதாமகரெனக் கருதப்படும் ஸ்ரீ புரந்தரதாஸர் வாழ்ந்த கன்னட தேசத்திலிருந்து கர்நாடக சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீ தீக்ஷிதரின் நினைவுக்குச் செலுத்திய இக்காணிக்கை மிகவும் பொருத்தமானதாகும் என்று சொல்லி ஸ்ரீ சுவாமிகளுக்கும் பெங்களூர்வாழ் பெருமக்களுக்கும் நன்றி கூறினார். உடுப்பி சத்திர நிர்வாகக் கமிட்டியின் தலைவர் திரு ஜி. ஏ. ஆசார்யா இந்தக் கைங்கரியத்துக்கு உதவிக் கச்சேரி அளிக்க முன்வந்த ஸ்ரீ சதாசிவம் தம்பதிகளுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டார்.

மைசூர் முதன்மந்திரி ஸ்ரீ ஜட்டி அவர்கள் மேற்படி இன்னிசை விருந்துக்குத் தலைமை வகித்து, பூஜ்யரான உடுப்பி அதமார் மடம் சுவாமிகளின் ஆஸ்திகத் தொண்டினை மிகவும் பாராட்டிப் பேசினார்.

---

லின், கட்சியிலிருந்தும், மக்களிடமிருந்தும் வெகுவாக விலகிக் கொண்டார். ருஷ்ய மக்கள் எவ்விதம் வாழ்கிறார்கள், அவர்களை எதிர்நோக்கியுள்ள சிக்கல்கள் என்ன என்பவற்றை யெல்லாம் அவர் அறிந்து கொள்ளவும் இல்லை. அறிந்து கொள்ள விரும்பவுமில்லை. அவர் எங்கும் போனதில்லை. இதுதான் உண்மை'' என்று ருஷ்யாவின் பிரசித்திபெற்ற பத்திரிகையான ''பிராவ்தா''வின் ஆசிரியர், காலஞ்சென்ற ஸ்டாலினைப் பற்றிக் கடுமையாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

''இவை யெல்லாம் கூடப் பெரியவையல்ல. ஸ்டாலின் தமது மரணத்துக்குப் பிறகும் மேற்படி குற்றங்களைச் செய்து கொண்டிருப்பதுதான் மிகப் பெரிய குற்றம்'' என்று குருஷேவ் கூச்சல் போட்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை!

ஃ ஃ ஃ

''சென்னை மாகாண அழுகும் பொருள்கள் வியாபாரிகள் சங்கத் தலைவர், செயலாளர் ஆகியவர்கள் அழுகும் பொருள்களுக்கு விற்பனைவரி விதிக்கும் கொடுமையை ரத்து செய்யும்படி சர்க்காரிடம் கோரினர்.''

இதற்காகச் சர்க்காரிடம் போய் அழுது என்ன பயன்? இந்தப் பொருள்களெல்லாம் நன்றாக அழுகும் வரை சர்க்கார் இதைக் கவனிக்கப் போவதில்லை.

ஃ ஃ ஃ

''சிரியா இப்போது சிரிப்பாய்ச் சிரிக்கும் சம்பவங்கள் பற்றி ஐக்கிய அரபு தலைவர் நாசருக்கு, பிரதம மந்திரி நேருஜி சிரியாப் பிரச்னை விரைவில் சுமுகமாகத் தீர்க்கப்பட்டு விடும் என்று தாம் நம்புவதாக ஒரு கடிதம் எழுதியுள்ளார்.''

சிரியாப் பிரச்னை சுமுகமாக எப்படித் தீரும் என்பது புரியவில்லை. சிரியா'ப் பிரச்னை என்றால் அது 'சிடுமூஞ்சி'ப் பிரச்னையாகத்தானே இருக்கும்!

ஃ ஃ ஃ

சோவியத் பிரதமர் குருஷேவிடமிருந்து அன்பளிப்பாக வந்த புலி, கூண்டுக்குள் போக மறுத்து, அடம் பிடித்து வருகிறதாம்.

சரியான கம்யூனிஸ்ட் சண்டிப் புலியாகத்தான் இருக்கும் போலிருக்கிறது. ஒருவேளை குருஷேவே புலி வேஷம் போட்டுண்டு வந்திருக்காரோ என்னவோ என்கிறாள் ஒரு பாட்டி!

# ராவணன் வழிபட்ட சிவலிங்கம்

ரஜனி

கொழும்பு, அக்டோபர், 28—

புராண காலத்தில் ராவணனும் அவனுடைய தாயாரும் வழிபட்டதாகக் கருதப்படும் பழமையான சிவலிங்கம் திருகோணமலை கடலிலிருந்து இவ்வாரம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஒரு சிங்கள சினிமாப் படமெடுப்பதற்காக மைக் வில்சன், ரோட்னி ஜோங்க்ளாஸ் ஆகிய இரு உலகப் பிரசித்தி பெற்ற ஆழ்கடல் ஆராய்ச்சியாளர்கள் திருகோணமலைக் கடலில் மூழ்கியபோது கடலுக்கு அடியில் சுமார் ஐம்பதடி ஆழத்தில் இந்தச் சிவலிங்கம் புதையுண்டிருப்பதைக் கண்டுபிடித்து மிக்க பிரயாசையுடன் கரைக்குக் கொண்டு வந்து சேர்த்தார்கள். மைக் வில்சன் என்பார் சில ஆண்டுகளுக்கு முன்னால் சுவாமிமலை எனப்படும் கடல் பாறைகளுக்கு அப்பால் ஏற்கெனவே ஆழ்கடல் ஆராய்ச்சி நடத்தி, கடலுக்கு அடியில் அபூர்வமான பல புகைப் படங்களை எடுத்துப் புத்தக வடிவில் பிரகரித்தார். அப்பொழுது மிக மிகப் புராதனமான கோணேசுவரர் கோயில் கடலுக்கு அடியில் ஆழ்ந்து கிடப்பது உண்மைதான் என்றும் கோயிலும் சிவலிங்கமும் ஆலய கண்டா மணியும் கடலில் கிடப்பதாகவும் அவர் வெளியிட்டார். ஆனால் இதற்குமேல் இதைப் பற்றித் தீவிரமான ஆராய்ச்சிகள் அப்பொழுது நடைபெறவில்லை. இவ்வாரம் அவர் கண்டுபிடித்துக் கரை சேர்த்திருக்கும் சிவலிங்கம் இந் நாட்டின் புதைபொருள் ஆராய்ச்சியில் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

இலங்கையில் இராமாயண காலத்துடன் சம்பந்தப்பட்டதாக எண்ணப்படும் சைவ ஸ்தலங்கள் மூன்று உண்டு. ஒன்று முன்னேசுவரம் எனப்படும் முனிசுவரம். மற்றொன்று வடக்கே உள்ள நகுலேசுவரம். மூன்றாவது கிழக்கு மாகாணத்தில் திருகோணமலையில் உள்ள கோணேசுவரம். நான்காவதாக மன்னார் ஜில்லாவில் உள்ள திருக்கேதீச்வரமும் இலங்கையின் சரித்திரத்துக்கு முற்காலத்தியது. இவற்றில் திருக்கேதீச்வரமும் கோணேசுவரமும் முற்றாக அழிந்துபோய் அவை இருந்ததாகக் கருதப்படும் இடங்களில் புதிய ஆலயங்கள் கட்டப்பட்டுள்ளன. கோணேசுவர ஆலயத்தைக் காவிரிப்பூம்பட்டினம் அழிந்தபோது கடல் கொண்டு விட்டதாயும் திரும்பக் கட்டிய ஆலயத்தையும் போர்க்கீசியர்கள் அழித்ததாயும் சரித்திர வாயிலாக அறிய முடிகிறது. இரு முறைகள் அழிக்கப்பட்ட பின்னர் மூன்றாவது தடவையாகக் கட்டப்பட்டிருப்பதே இப்போதுள்ள கோணேசுவரர் ஆலயம்.

இராவணன் தாயார் கோணேசுவரர் கோயிலில் தினசரி வழிபாடு நடத்துவது வழக்கமாம். இத்தகைய பழையதொரு கோயிலின் சிவலிங்கம் இப்பொழுது கண்டுபிடிக்கப்பட்டிருப்பது விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது என்பதில் சந்தேகம் இல்லை. அந்தச் சிவலிங்கம் கிடைத்த இடத்தில் மேற்கொண்டு ஆழ்கடல் ஆராய்ச்சிகள் நடத்துவது பல அதிசயங்களை வெளிப்படுத்துவதாக இருக்கும்.

## பத்திரிகை மசோதா

இவ்வாரம் அரசாங்க பார்லிமெண்டரிக் கட்சிக் கூட்டத்தில் இலங்கைப் பத்திரிகைகளின் நிலைமையைப் பற்றி விவாதம் நடைபெற்றது. ஸ்ரீமதி பண்டாரநாயகாவின் அரசாங்கம் பதவியேற்றவுடன் டைம்ஸ் ஆப் ஸிலோன் கம்பெனி, அஸோஸியேடட் நியூஸ் பேப்பர்ஸ் கம்பெனி ஆகியவை நடத்தும் டைம்ஸ், டெய்லி நியூஸ், அப்ஸர்வர், தினமினே, செனுமினே, லங்கா தீப, தினகரன் முதலிய பத்திரிகைகளை அரசாங்கம் எடுத்துக் கொண்டு ஒரு கார்ப்பரேஷன் மூலமாக நடத்த வேண்டும் என்றும் பத்திரிகைத் தொழிலில்



குரும்பலூர் கல்கி ஏஜண்ட் திரு எம். கே. முத்துசாமிக் கோனார் அவர்களுக்கும் சௌபாக்கியவதி செல்லத்துக்கும் சமீபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.



எழுத்தாளர் பில்லூர் சுந்தரராமன் அவர்களின் சகோதரி சௌபாக்கியவதி யோகாம்பாளுக்கும் திரு ராதாகிருஷ்ணனுக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.



கோவை திரு கே. ரங்கசாமி அவர்களின் குமாரரும் கோவை அர்வின் ஏஜன்ஸீஸ் டைரக்டருமான திரு ஆர். விசுவநாதனுக்கும் சௌபாக்கியவதி கப்புலக்ஷ்மிக்கும் திருமணம் சமீபத்தில் வெகு விமரிசையாக நடைபெற்றது.

ஏகபோக உரிமை இருப்பதைத் தவிர்க்கவேண்டும் என்றும் கூறப்பட்டது. இவ்விதம் செய்வதாக அரசாங்கம் 1960ம் வருடத்திய சிம்மாசனப் பிரசங்கத்தில் வாக்குறுதி அளித்திருந்தது. அந்த வாக்குறுதியை அரசாங்கம் நிறைவேற்றி வைக்க வேண்டுமென்றும் அதற்காக அடுத்த ஒரு மாதத்துக்குள் மந்திரி சபை ஒரு மசோதாவைத் தயாரித்துச் சமர்ப்பிக்க வேண்டுமென்றும் அரசாங்கப் பார்லிமெண்டரிக் கட்சி இவ்வாரம் தீர்மானித்திருக்கிறது. இது சம்பந்தமாக அடுத்த வாரத்துக்குள் அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

## திரு தொண்டமான் வோட்டு

நியமனப் பிரதிநிதிகள் எப்போதும் அரசாங்கக் கட்சியை ஆதரித்துப் பார்லிமெண்டில் வோட்டுப் போடுவதென்பதுதான் இலங்கையில் நீண்ட காலமாக இருந்து வரும் சம்பிரதாயம். நியமனப் பிரதிநிதிகள் அரசாங்கக் கட்சி அங்கத்தினர்கள் என்ற முறையில் அந்தக் கட்சிக் கூட்டங்களில் பிரசன்னமாகிறார்கள். அதன் விவாதங்களில் கலந்து கொள்கிறார்கள். ஆகவே அரசாங்கக் கட்சிக் கொறடாவின் கட்டளைகளுக்கு இணங்க அவர்கள் அரசாங்கக் கட்சியை ஆதரித்து வோட்டுப் போட வேண்டுமென்று எதிர்பார்ப்பது இயற்கை. இந்த நியதிக்கு மாறாக முன்னர் இந்திய நியமனப் பிரதிநிதியாக இருந்த திரு எஸ். பி. வைத்திலிங்கம் என்பவர் ஒரு முறை இந்தியப் பிரச்னையைப் பற்றிய ஒரு மசோதாவில் அரசாங்கத்துக்குப் பாதகமாக வாக்களித்தார். இப்பொழுது நியமனப் பிரதிநிதியாக இருந்து வரும் இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ் தலைவர் திரு எஸ். தொண்டமான் கட்சிக் கொறடாவின் கட்டளைகளை எதிர்பாராமல் மனச்சாட்சியின்படி வாக்குக் கொடுப்பது என்ற கொள்கையை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார். சட்டவிரோதக் குடியேற்றக்காரர்களைக் கண்டுபிடித்துக் கைது செய்வதற்காக ராணுவத்துக்கு அதிகமான அதிகாரங்களை வழங்கும் மசோதா சென்ற வாரம் பார்லிமெண்டில் விவாதிக்கப்பட்டபோது, இந்த மசோதா அதிகார துஷ்பிரயோகத்துக்கு இடமளிப்பதாக உள்ளது என்று கடுமையாகத் திரு தொண்டமான் கண்டித்து மசோதாவை எதிர்த்து வாக்களித்தார். இந்த மசோதாவைத் தமிழரசுக் கட்சி அங்கத்தினர்கள் எல்லோருமே வன்மையாகக் கண்டித்தார்கள். இலங்கையில் நீடித்து வசிப்பவர்களை கள்ளக் குடியேற்றக்காரர்கள் என்று சொல்லிக் கைது செய்து காவலில் வைக்கப்படுவதாயும், இம்மாதிரி அநேகம் நிரபராதிகள் காவலில் வைக்கப்பட்டிருப்பதாயும் அவர்கள் சொன்னார்கள். கைது செய்யப்படுவோர் மிக மிகக் கேவலமான நிலைமையில் மாதக் கணக்கில் காவலில் வைக்கப்படுவதாகவும் வர்ணித்தார்கள். கள்ளக் குடியேற்றக்காரர்கள் என்று சந்தேகப்படுவோர்கள் மீது ஏன் கோர்ட்டில் பகிரங்கமாக நடவடிக்கை யெடுத்துச் சிறைத் தண்டனை விதிக்கக் கூடாது என்றும் அவர்கள் கேட்டார்கள்.

# * எல்லோராலும் புகழப்படுவது




''டிரேயான்ஸ்'' ரேயான் நூல்களினால் செய்த ஆடைகள் எல்லோராலும் புகழப்படுகிறது.

இந்தியாவில் முதல் முதலாக சிறந்த ரசாயன முறையில் தயாரிக்கப்பட்ட உன்னத நூல் ''டிரேயான்ஸ்'' ரேயான் நூல்கள். விலை மலிவு-நீண்ட கால உழைப்பு-பகட்டான உடைகளுக்கு ஏற்றது.

''டிரேயான்ஸ்'' ரேயான் நூல்கள் 100, 120, 150, 300 டினையர்களில் தயாரிக்கப்படுகின்றன.



*

Rt

ஸ்டாக்கிஸ்டுகள்

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட லிமிடெட்

போன்: 21641. 61, செம்புதாஸ் தெரு, சென்னை-1 தந்தி: "CELYARN"

கிளைகள்:

போன்: 253. தந்தி: ''CELYARN'' 68/416, மெயின் ரோடு, செவ்வாப்பேட்டை, சேலம்.

போன்: 598. தந்தி: ''CELYARN'' 114/A, தெற்கு மாசி வீதி, மதுரை.

போன்: 3441. தந்தி: ''RAYONS'' யுனைடெட் இந்தியா பில்டிங் அவினாசி ரோடு, கோவை.

# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி

## 24 - இணையிலா வெற்றி

நீலநாகமறவர் பைரவியைத் துரத்திக் கொண்டு சென்றபோது, எவ்வளவு பரபரப்போடு சென்றாரோ அவ்வளவிற்குச் சிறிதும் குறைவில்லாத நிதானத்தோடு படைக்கலச்சாலைக்குத் திரும்பியிருந்தார். அவர் படைக்கலச் சாலைக்குத் திரும்பியபோது விடிவதற்குச் சில நாழிகைகளே இருந்தன. மகிழ மரமும், பவழ மல்லிகையும் தங்களை வளர்த்து அரும்பிப் பூக்கச் செய்த மண்ணுக்கு அர்ச்சனை புரிந்து வழிபடுவன போலத் தத்தம் மலர்களை உதிர்த்திருந்தன. விடிவை நோக்கி ஓடுகிற நேரத்துக்கே உரிய இங்கிதமான குளிர்ச்சியும், பூக்களின் கன்னி கழியாத புது மணமும், இந்த உலகத்தில் நிரந்தரமாக நேர்ந்து நிலைத்துவிட்ட ஏதோ ஓர் அநியாயத்துக்காக நிரந்தரமாக ஓலமிட்டுக்கொண்டிருப்பதுபோன்ற கடல் அலைகளின் ஓசையும் சேர்ந்து இயற்கையின் சங்கேத சப்தங்களை மொழியாக மாற்றி வழங்கும் மௌனத் தீவு ஒன்றிற்கு வந்துவிட்டாற் போன்ற சூழ்நிலையை அடைந்தார் நீலநாகமறவர். இப்படிச் சூழ்நிலை இந்த வைகறை நேரத்தில் எல்லா நாளிலும் நிலவுமாயினும் அவருடைய இன்றைய மன நிலைக்கு இது மிகவும் இதமாயிருந்தது. ஆழ்ந்த தூக்கமும் இல்லாமல் ஆழ்ந்த விழிப்பும் இல்லாமல், பூக்கள் உதிர்ந்திருந்த அந்த மரத்தடியிலேயே அமர்ந்து நடந்தவற்றை ஒவ்வொன்றாகச் சிந்தித்துக் கொண்டிருந்தார் அவர்.

கனைநீரில் மூழ்குவதுபோலக் காற்று உடம்பில் உராய்ந்து கொண்டிருந்தது. அன்று பைரவியைச் சந்தித்து இரகசியங்களை அறிய முடிந்திருந்தால் அவளிடமிருந்து அறிய முடிந்த இரகசியங்களுடன் படைக்கலச் சாலைக்குத் திரும்பி அங்கே தூங்கிக்கொண்டிருக்கும் ஓவியன் மணிமார்பனை எழுப்பி அவனையும் அழைத்துக் கொண்டு பட்டினப் பாக்கத்துப் பெரு மாளிகைக்குச் செல்ல வேண்டுமென்று திட்டமிட்டிருந்தார் நீலநாகமறவர். முதலில் இருந்தே திட்டமிட்டபடி எதுவும் நடக்கவில்லை. எல்லாம் வேறு விதமாக மாறியிருந்தன. பெருந்தன்மையும், நல்லவர்களுக்கு இருந்தே தீரவேண்டிய நாணமும் சேர்ந்து தன்னுடைய தீர்மானங்களையெல்லாம் மாற்றி விட்டதை எண்ணிப் பார்த்து நெட்டுயிர்த்தார் அவர். மாலையில் வீர சோழிய வளநாடுடையார் தம்மிடம் கூறியிருந்த செய்தி இப்போது மீண்டும் நினைவு வந்தது அவருக்கு.

''எப்படியோ இந்த வைகாசி விசாகம் வரை இளங்குமரனைக் காப்பாற்றுங்கள். வைகாசி விசாகத்துக்கு முன்னால் இளங்குமரனை அழைத்துக்கொண்டு மணிபல்லவத்துக்கு யாத்திரை போகத் திட்டமிட்டுள்ளேன். அதற்கு அப்பால் எல்லாத் துன்பங்களுக்கும் வழி பிறந்துவிடும்'' என்று வளநாடுடையார் கூறியது பொதுவாக இருந்த போதிலும், இந்தச் செய்திக்குள் அடங்கியிருக்கும் வேறு செய்தி ஒன்றும் இலை மறைகாயாக நீலநாகருடைய சந்தேகத்தில் புலப்பட்டது. வீர சோழிய வளநாடுடையார் தன்னைச் சந்திக்க நேருகிறபோதெல்லாம் இளங்குமரனை மணிபல்லவத்துக்கு அழைத்துக் கொண்டு போவது பற்றிச் சொல்லிக் கொண்டிருப்பதைக் கூர்ந்து உணர்ந்து அந்தச் செய்திக்கு ஏதோ ஒரு முக்கிய விளைவு இருக்க வேண்டுமென அநுமானித்துக் கொண்டிருந்தார் நீலநாகமறவர். இப்போது அந்த அநுமானமே மேலும் வலுப்பெற்றது. மகிழ் பவழமல்லிகை ஆகிய மரங்களின் கீழே இவ்வாறு சிந்தித்துக் கொண்டே மிகுதியான எண்ணங்களிலும் குறைவான உறக்கத்திலும் மூழ்கியிருந்த நீலநாகர் தான் வழக்கமாகக் காலைக் கடன்களைத் தொடங்கும் நேரம் நெருங்கியதை உணர்ந்து உள்ளே போய் இளங்குமரனையும் எழுப்பி அழைத்துக் கொண்டு புறப்

பட்டார். முதல் நாள் இரவு படைக்கலச் சாலைக்குத் தன்னைத் தேடிக் கொண்டு வந்த நண்பர்களிடம் நெடு நேரம் பேசிக் கொண்டிருந்த காரணத்தால் அப்போது இளங்குமரன் மிகவும் சோர்ந்து போயிருந்தான். களைப்பாகவும் இருந்தான். அதனால் அன்று பகலில் அவன் நாளங்காடிக்குச் செல்லவில்லை. அவன் தேடிக் கொண்டு போக வேண்டிய சமயவாதிகளின் கூட்டம் ஒன்று அவனையே தேடிக் கொண்டு, படைக்கலச் சாலைக்கு வந்திருந்தது. உறையூருக்கு அருகில் இருந்த சமதண்டம் என்ற ஊரிலிருந்து இந்திர விழாவுக்காகக் காவிரிப்பூம் பட்டினத்துக்கு வந்திருந்த ஆசீவகர்களின் கூட்டம் ஒன்றை அவனோடு வாதிடுவதற்காக விசாகை அங்கே அழைத்துக் கொண்டு வந்திருந்தாள். விசாகை தனக்கு இருக்கும் ஞானத்தினால் தானே அந்த ஆசீவகர்களை வென்றிருக்க முடியுமாயினும், அவர்களை வெற்றி கொள்ளும் பெருமையை இளங்குமரனுக்கே அளிக்க வேண்டுமென்று கருதியது போல் அங்கே கூப்பிட்டுக் கொண்டு வந்திருந்தாள். இளங்குமரனை வாதத்தில் வென்றால், அந்த ஆண்டு பூம்புகாரின் இந்திர விழாவில் கூடிய அத்தனை சமயவாதிகளையும் வென்றாற் போன்ற பெருமையை அடையலாம் என்ற ஆசையோடு வந்திருந்தனர் சமதண்டத்தைச் சேர்ந்த ஆசீவக அறிஞர்கள். பலரைத் தோற்கச் செய்த ஒருவனை வெல்வதில் இரண்டு விதமான தன்மைகள் உண்டு. வெற்றி வீரனை இளங்குமரனை வெல்வதினால் அவனால் ஏற்கெனவே வெற்றி கொள்ளப்பட்டவர்களையும் சேர்த்து வென்று விடும் பெருமையை எதிர்பார்த்தனர் சமதண்டத்தார்.

மேலைச் சோழ மண்டலத்தினரான சமதண்டத்து அறிஞர்களின் வாதத் திறமையைப் பற்றி இளங்குமரன் நிறையக் கேள்விப்பட்டிருந்தான். எதிராளி பேசும் சொற்களில் ஒரு மாத்திரை மிகுந்து ஒலித்தாலும் குறைந்து ஒலித்தாலும், அந்த ஒலி மிகுதிக்கும் குறைவுக்கும் கூடக் காரணம் கற்பித்து வாதமிடும் நுணுகிய வாதத்திறமையுடைய சமதண்டத்து ஆசீவகர்கள் ஐம்பதின்மர் அவனிடம் வந்திருந்தனர். 'இந்த ஐம்பது பேரும் வலுவில் தேடிக்கொண்டு வாதுக்குப் போவது அருமை. இன்றியமையாத காரணம் இருந்தால்தான் வாதத்துக்குரிய எதிராளியை அவர்கள் தாங்களே நேரில் தேடிக்கொண்டு வருவார்கள். அவர்கள் ஐம்பதின்மரையும் தனித்தனியே வாதிட்டு வெல்ல வேண்டும். அப்படி வெல்வதற்குக் குறைந்த பட்சம நூறு நாட்களாவது செலவழியும்' என்று இளங்குமரன் பலரிடம் பலமுறை கேள்விப்பட்டிருந்தான்.

'இந்த ஐம்பது பேரறிஞர்களையும், இவர்களுடைய திறமையைப் பற்றிக் கேள்வியுற்றிருப்பதையும் எண்ணுகிறபோது என் மனத்தில் இப்போது தோன்றி விடுவதற்குப் பார்க்கிற ஆற்றாமையை நீக்கிக் கொள்ளும் வலிமையை உடனே எனக்கு அளியுங்கள்' என்று நினைத்தபடியே தன் ஆசிரியரைத் தியானம் செய்து கொண்டான் இளங்குமரன். படைக்கலச் சாலையின் முற்றத்தில் அந்த அறிவுப் போர் தொடங்கியது. விசாகை, நீலநாக மறவர், மணிமார்பன், அவனுடைய மனைவி ஆகியவர்கள் இளங்குமரனோடு அருகில் நிற்கும் துணைகளாக இருந்தனர். ஆசீவகர்களின் தலைவர் தங்கள் சமய நூலாகிய 'நவகதிர்' என்னும் கிரந்தத்திலிருந்து சான்றுகளைக் கூறி வாதத்தைத் தொடங்கினார். இளங்குமரன் அவர் கூறுவனவற்றையெல்லாம் கவனித்துக் கேட்கலானான்.

''இன்னவாறு இன்ன காரணத்தால் தோன்றுமென இல்லாமல் வானத்தில் இந்திரவில் தோன்றுவது போல் தோன்றிக் காரணமின்றி விளங்கும் மற்கலி தேவன் எங்கள் இறைவன். நில அணு, நீர் அணு, தீ அணு, காற்று அணு, உயிர் அணு என்னும் ஐந்து அணுக்களும் இவ்வுலகு நிகழ்வதற்குக் காரணமாக நாங்கள் கருதும் அணுக்கள். உள்ளது கெடாது. இல்லாதது தோன்றாது. எல்லாப் பொருள்களின் நிகழ்ச்சியும் ஆழ்தல், மிதத்தல் என்னும் இரு தொழிலில் அடங்கும் என்பது எங்கள் சமயத்தின் கருத்து.''

இவ்வாறு தொடங்கி 'நவகதிர்' நூலிலிருந்து வேண்டிய மேற்கோள்களைச் சொல்லித் தன்னுடைய வாதத்துக்குப் பூர்வ பட்சமாக வலுவான தோற்றுவாய் செய்தார் ஆசீவக முதல்வர்.

''ஐயா தாங்கள் கூறும் உவமை தங்களுடைய கருத்துக்கு அரண் தருவதாயில்லை. இந்திர வில்லாகிய வானவில் காரணமும் பிறப்பும் அற்றது என்று தாங்கள் கருதுவது பிழை. சூரிய கிரணங்கள் மேக படலத்தில் படுவதால்தான் வானவில்லும் அதில் நிறங்களும் பிறக்கின்றன. எனவே தாங்கள் கூறும் காரணம் பிறழ்வுடையதாகிறது. பிறழ்வுடைய காரணம், 'அனைகாந்திகம்' என்னும் தருக்கக் குற்றமாய் அடங்கும்....'' என்று இவ்வாறு பல காரணங்களையும் சொல்லி நவகதிரின்

> மென்னியைப் பிடிக்கும் நிர்ப்பந்தங்களே வடிவம் எடுத்த அரசாங்கம் தொலைந்து சுதந்திர ஆட்சி ஏற்பட வேண்டும் என்று ஆசைப்படுகிறவர்கள் பயத்தை உதறி ஒதுக்கிச் சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு தரும் உறுதி எண்ணத்தைப் பெறுவார்களாக. —ராஜாஜி

முரண்பாடுகளை விளக்கினான் இளங்குமரன். அவனுக்கும் அவருக்கும் நிகழ்ந்த வாதம் மட்டும் முடியவே ஆறு நாட்கள் கழிந்தன. ஏழாவது நாள் சூரியோதயத்தில்தான் அவர் 'இளங்குமரனுக்குத் தான் தோற்றதாக' ஒப்புக்கொண்டார்.

இளங்குமரன் அடுத்த மூன்று நாட்களில் அந்தக் கூட்டத்தில் மேலும் நான்கு ஆசீவகர்களை வென்றான். கருத்துக்களில் முரண்பாடு இருந்தாலும் சமதண்டத்தாருக்கே உரிய தருக்க ஞான நுணுக்கத்தால் வாதத்துக்குரியவற்றை வளர்த்து வளர்த்து இளங்குமரன் விரைவில் முழு வெற்றியும் பெற்றுவிட முடியாதபடி செய்து கொண்டிருந்தார்கள் அவர்கள். நூற்றுக்கணக்கான போர்வீரர்களைத் தனியே எதிர்த்து நின்று, வெற்றி கொள்ள முடிந்த இரும்பு மனிதரான நீலநாக மறவர் ஐம்பது முதிய அறிஞர்களை வெற்றி கொள்ள ஓர் இளம் அறிஞன் படுகிற துன்பத்தைக் கண்டு வியப்பு அடைந்தார். ஒவ்வோர் அறிஞனையும் நாட்கணக்கில் செலவழித்து வெற்றி கொள்ளும்படி நேர்ந்து வருவதும் அவருக்குத் திகைப்பை அளித்தது.

ஆசீவக வாதம் தொடங்கிப் பத்தாவது நாளும் வந்து விட்டது. வாதம் ஒரு முடிவுக்கும் வராமல் தொடர்ந்து வளர்ந்து கொண்டே யிருந்தது.

''எங்கள் இறைவனான மற்கலிதேவன் முழுதும்உணர்ந்துபேச்சின்றி மௌனமே உருவாயிருப்பவன்'' என்று அன்றைய வாதம் தொடக்கப்பட்டது.

''பேச்சின்றி மௌனமா யிருக்கும் உங்கள் இறைவனே வாய் திறந்து 'நான் முழுதும் உணர்ந்தேன்' என்று கூறியிருந்தாலொழிய அவன் முழுதும் உணர்ந்தவன் என்பதை நீங்கள் அறிந்திருக்க இயலாது. அவன் வாய் திறந்து அப்படிக் கூறி யிருப்பானானால் அவன் மௌனமா யிருப்பான் என்று நீங்கள் கூறுகிற இலட்சணம் பொய்யாய் முடியும். முழுவதும் உணர்வதை அநுமானம் பண்ணிக் கொள்வதற்கு மௌனமாய் ஓசையின்றி இருப்பதே தன்மையானால் பேசாப் பருவத்துக் குழந்தைகளும், ஊமைகளும், மலையும், கல்லும், கட்டையும் முழுதும் உணர்ந்தவை என்பதாக முடிவு செய்ய நேரிடும்'' என்று அந்த வாதத்தைச் சாதுரியமாக மறுத்தான் இளங்குமரன்.

இதற்கு அடுத்த பத்து நாட்களில் 'உள்ளது கெடாது — இல்லது தோன்றாது' என்னும் ஆசீவக தத்துவத்தை நிறுவ முயன்ற வாதத்தை மறுத்து வென்றான் இளங்குமரன். ''இழுதாய் உறைந்துள்ள நெய் நெருப்புப் பட்ட போது கெட்டு இளகுதலும், நெய்யில் இல்லாத நெருப்பு வேள்விக் குழியில் நெய் பட்டபோது நெய்யால் வளர்ந்து தோன்றுதலும் காண்கிறோம். எனவே உள்ளது கெடாது, இல்லாதது தோன்றாது என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?'' என்று தன் கருத்தை இளங்குமரன் நிறுவினான். உள்ளது கெடாது, இல்லாதது தோன்றாது என்னும் தத்துவத்தை மறுப்பதற்கு மட்டும் புத்தி பூர்வமாகவும், யுக்தி பூர்வமாகவும் இளங்குமரன் எத்தனையோ வாதங்களைச் செய்ய வேண்டி யிருந்தது. கையாய்த் தோன்றிய வழி விரல்களாய்த் தோன்றாமையும், விரல்களாகத் தனித்தனியே பிரிந்து தோன்றிய வழிக் கையாய்த் தோன்றாமையும் — என இரு நிலைமை உள்ளதை அவர்களுக்கு எடுத்துச் சொல்லி இளங்குமரன் யுக்தி வாதம் புரிந்தான். மொழி எழுத்துக்களாகத் தனித்தனியே பிரிந்தபோது சொல் ஆகாமையையும் சொல்லாய்க் கூடிய வழி எழுத்தாகாமையையும் விளக்கினான். ஆசீவகர்களுடைய பிடிவாதம் சிறிது சிறிதாகத் தளர்ந்தது.

சமதண்டத்தி லிருந்து இந்திர விழாவுக்கு வந்திருந்த ஆசீவகர்கள் இந்திர விழா முடிந்த பின்னும் சில நாட்கள் வரை இளங்குமரனை விடவில்லை. சித்திரைத் திங்கள் முடிந்து வைகாசித் திங்களின் முதற் கிழமை வரை இளங்குமரன் அவர்களோடு செலவழிக்கும்படி ஆகி விட்டது. அந்த ஐம்பது முதியவர்களையும் வென்று முடிக்கிறவரை படைக்கலச் சாலைக்கு அப்பால் இருந்த உலகத்தை இளங்குமரன் மறந்து போய் விட்டான் என்றே கூறவேண்டும். அவர்களை வாதத்தில் வெல்ல வேண்டுமென்கிற முயற்சி ஒன்றுதான் அப்போது அவனுடைய உலகமாயிருந்தது. நூற்றுக்கணக்கான நாட்கள் செலவழித்து வாதிட்டாலும் வெற்றிகொள்ள முடியாத சமதண்டத்து அறிஞர்களை மிகச் சில நாட்களிலேயே அவன் வென்ற பெருமையை உடனிருந்த விசாகை வெகுவாகப் பாராட்டினாள்.

''இந்தக் கொடி வெற்றிக் கொடியாக உயரட்டும் என்று நான் அன்று வாழ்த்தியதன் பயனை இன்றுதான் கண்ணாரக் கண்டேன் ஐயா!'' என்று ஆவல் பொங்கும் குரலில் விசாகையினிடமிருந்து இளங்குமரனை நோக்கிச் சொற்கள் பிறந்தன. இணையிலாத் தருக்க ஞானிகளாகிய சமதண்டத்து ஞான வீரர்களை வென்று விசாகையின் மனம் நிறைந்த வாழ்த்துக்களையும் ஏற்றுக்கொண்ட நல்ல நாளாகிய அன்று மாலையில் அவளோடு காவிரிப்பூம் பட்டினத்து இந்திர விகாரத்துக்குச் சென்று தன் வாழ்வு இப்படி மாறி அமைவதற்குக் காரணமாயிருந்த பழைய பௌத்த சமயத் துறவியைச் சந்தித்தான் இளங்குமரன்.

அவனை அடையாளம் புரிந்து கொண்டு புன்முறுவல் பூத்தார் அவர். இவ்வளவு ஆண்டுகளுக்குப் பின்பு தோற்றத்தால் மேலும் முதுமையடைந்திருந்த அந்தத் துறவியின் புன்முறுவல்மட்டும் மூப்படையாமல் பழைய அழகோடு—அறிவின் அழகோடு அன்றிருந்தாற் போலவே விளங்கிற்று. அன்பிலே குழைந்த குரலோடு அவர் அவனை நோக்கிக் கூறினார்:

''நீதான் அப்பா மெய்யான மாணி! ஒரு நல்ல உண்மை அதன் முழு ஆற்றலுடனே மனத்தில் உறைத்து அதைச் செயற்படுத்தத் தவிப்பதுதான் புத்தி என்பார்கள். 'இப்படி உடம்பை மட்டும் மற்போர் வீரனைப் போல் வலியதாக்கிக்கொண்டு வந்து நின்று பயனில்லை. மனத்தை வலியதாக்கிக் கொண்டு வா' என்று நான் என்றோ உன்னிடம் கூறியதைச் செயற்படுத்தி விட்டாய். என்னுடைய சொற்களைச் செயலாக்கிய உன் மானத்திற்கும் அதன் விளைவாகிய உன் ஞானத்துக்கும் இப்போது நான் தலை வணங்குகிறேன் அப்பா!''

இளங்குமரன் அவரைப் பதிலுக்கு வணங்கிவிட்டுச் சிறிது நேரத்து உரையாடலுக்குப் பின் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு படைக்கலச் சாலைக்குத் திரும்பினான். விசாகையும் அவனோடு திரும்பினாள். படைக்கலச் சாலையில் வளநாடுடையார் ஆவலோடும் அவசரத்தோடும் அவனை எதிர்பார்த்துக் காத்திருந்தார். அவர் வந்திருக்கிற காரியம் முக்கியமானதென்று அவரிருந்த நிலை கண்டு அவனாலேயே புரிந்துகொள்ள முடிந்தது.

## 25. வாழ்க்கைப் பயணம்

அவனைச் சந்திப்பதற்காகப் படைக்கலச் சாலையில் வந்து காத்திருந்த வீர சோழிய வளநாடுடையார் ஏதோ நிறையப் பேசுவதற்குச் சேர்த்துக் கொண்டு வந்திருப்பவர்போலத் தோன்றினார். அவர் வந்திருக்கிற வேகத்தையும், அந்த வேகத்தோடு இணைந்து தெரிந்த உறுதியையும் கண்டு எதைச் சொல்ல வந்திருக்கிறாரோ அதைத் தோற்கவிட மாட்டார் என்று உணர்ந்து புன்னகை பூத்தான் இளங்குமரன். வந்திருப்பவர் இளங்குமரனோடு தனியாகப் பேசுவதற்காக வந்திருக்கிறார் என்பதை அங்கு நிலவிய குறிப்புக்களால் புரிந்துகொண்ட விசாகை அவர்களைத் தனிமையில் விடுத்துச் சென்றாள்.

''இப்போது நீங்கள் நான் வெற்றி கொள்ள முடியாத ஏதோ ஒரு வாதத்தைக் கொண்டு இங்கு வந்திருப்பதாக என் உள்ளுணர்வு கூறுகிறது ஐயா!'' என்று சொல்லிக் கொண்டே அவர் அருகில் போய் நின்றான் இளங்குமரன். அவர் சற்றே சிரித்தார். மிகுதியாகச் சிரித்துவிட்டால் தான் சொல்லுவதற்கு வந்திருக்கும் உறுதியான செய்தியை அந்தச் சிரிப்பே பலவீனப்படுத்தி விடுமோ என்று பயந்து கொண்டே சிரிப்பது போலிருந்தது.

''தம்பீ! நான் இப்போது தொடங்க வந்திருக்கும் வாதத்துக்கு இரண்டு விதமான முடிவுகள் இல்லை. ஒரே முடிவுதான். இந்த வாதம் என் பக்கம் வெற்றியாக முடியுமா, உன் பக்கம் வெற்றியாக முடியுமா? என்ற ஐயத்துக்கு இடமே இல்லை. என் பக்கம்தான் வெற்றியாக முடிய வேண்டும் என்று நான் புறப்படும்போதே தீர்மானம் செய்து கொண்டு விட்டேன். அதை நீ மறுப்பதற்கில்லை.''

''நல்லது. ஆனால் மாறுபாடும், வேறுபாடும் இல்லாமல் என்றும் ஒரே விதமாக — ஒரே பக்கமாக முடியத்தக்க ஒருமை முடிபே உள்ள செய்திகள் வாதத்துக்குப் பொருளாகா என்பதை மறுமொழியாகக் கூறி உங்களை எடுத்த எடுப்பிலேயே நான் மறுத்து விடலாம் ஐயா! 'நித்தியை காந்த பட்சம்' எனப்படும் ஒருமை முடிபே உள்ள செய்திகளை இரு கூறாக்கி வாதிட முடியாது. 'தண்ணீர் குளிர்ந்திருக்கும்' என்றும் 'தீ சுடும்' என்றும் வருகிற வாக்கியங்களை அவற்றிற்கு மாறாகத் தண்ணீர்

சுடும், நீ குளிர்ந்திருக்கும் என வேறு முடிவும் காட்டிப் பிரதிவாதம் செய்வதற்கில்லையே? நீங்கள் என்னிடம் கூற வந்திருக்கும் செய்தியும் அப்படி மறுப்பதற்கில்லாத ஒருமை முடிவே உள்ளதாயின் உடனே ஒப்புக் கொள்ளுவதைத் தவிர வேறு மாற்றம் சொல்ல வழி ஏது?'' என்றான் இளங்குமரன்.

''ஆகா: நீ படித்திருக்கிற தருக்கத்தை இன்றைக்கு மட்டும் பாராட்டுகிறேன் தம்பீ! நான் கூறுவதை மறுக்காமல் நீ உடனே ஒப்புக் கொள்ளுவதற்கும் உன் படிப்பு இடந் தருகிறது என்ற ஒரே காரணத்துக்காக இந்தப் படிப்பைப் பாராட்ட வேண்டியதுதான். ஆனால் வாதம் செய்வதற்கும் மாற்றம் சொல்லி மறுப்பதற்கும் இது பொருள் ஆகாது. இப்போது இங்கே நான் பேச வந்திருக்கும் செய்திக்குப் பொருள் வேறு எதுவும் அல்ல; உன்னுடைய வாழ்க்கைதான். அதற்கு ஒரே முடிவுதான் உண்டு....''

'தவறு ஐயா! ஒரே முடிவுதான் உண்டு என்பது என்னுடைய வாழ்க்கைக்கு மட்டும் தான் உண்மை என்பதில்லை, பொதுவாக எல்லாருடைய வாழ்க்கைக்குமே ஒரே முடிவுதான் உண்டு!''

''நீ குதர்க்கம் பேசுகிறாய் தம்பீ!''

''தர்க்கமல்லாதது தான் குதர்க்கம்; இன்னொரு விதமாகக் கூறினால் தர்க்கம் ஆகாததும் குதர்க்கம். தர்க்கத்துக்குப் பொருளாகாத ஒரே முடிவுடைய செய்தியைத் தொடங்கியவன் நான் இல்லையே ஐயா?'' என்று சிரித்தபடி நிதானமாக அவருக்குப் பதில் சொன்னான் இளங்குமரன். இதைக் கேட்டு அதுவரை, விளையாட்டாகப் பேசிக் கொண்டே வந்த வளநாடுடையார் சீற்ற மடைந்தார். பேச்சில் சிறிது சினமும் கலந்தது.

''நான் தர்க்கம் பேச வரவில்லை. உன் வாழ்க்கையைப் பற்றிப் பேச வந்திருக்கிறேன்.....''

''அப்படியானால் என் வாழ்க்கையே தர்க்கத்துக்குரிய பொருளாக இருந்ததாக முதலில் நீங்கள் எண்ணியிருக்க வேண்டும்....''

''அப்படி நான் எண்ணியிருந்தாலும் அது பிழையில்லை தம்பீ! ஆனால் மறுபடியும் ஒன்று சொல்கிறேன். இங்கே இந்தத் தர்க்கத்துக்கும் ஒரு முடிவுண்டு. நீ திருநாங்கூரில் போய்க் கற்றுக் கொண்டிருந்த காலத்தில் இதே போல் ஒரு வைசாக பௌர்ணமைக்கு முன் உன்னைத் தேடிக் கொண்டு வந்ததும் அதன் பின்பு சென்ற திங்களில் நீண்ட

காலத்துக்குப் பின் நீ இந்த நகரத்தில் காலடி வைத்து நுழைந்த முதல் நாளில் இதே படைக்கலச் சாலையின் வாயிலில் என் மகளும் நானும் உன்னைச் சந்தித்ததும் உனது வாழ்க்கைத் தர்க்கத்துக்கு முடிவு காணும் நோக்கத்தோடுதான்.''

''உங்கள் நோக்கத்தைப் போற்றுகிறேன் ஐயா! ஆனால் அதற்காக இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?''

''செய்ய முடியாதது எதையும் நாங்கள் சொல்லவில்லை தம்பீ! நீலநாகரும் நானும் சொல்வதை நீ செய்ய வேண்டும். அது அவசியமானது. பயனுள்ளது....''

''வாழ்க்கையில் பயனுள்ளவை, பயனில்லாதவை என்று எவற்றை எப்படிப் பிரிப்பது என்றே சில சமயங்களில் விளங்குவதில்லை ஐயா! பயனில்லாதவற்றைச் செய்த பின்புகூட அவை பயனில்லாதவை என்று புரிந்து கொள்வதற்கு ஒரு சந்தர்ப்பமாக நேர்ந்த பயன் அவற்றுக்கு இருப்பதாகப் படுகிறது. நீங்களும், நீலநாகரும் மூத்தவர்கள். என்னை நீங்கள் இப்போது என்ன செய்யச் சொல்லுகிறீர்களோ அதைச் செய்வதன் முடிவு எதுவாயிருந்தாலும் அதிலிருந்தும் ஏதாவதொரு அநுபவத்தின் ஞானம் எனக்குக் கிடைக்கத்தான் போகிறது. அதையும் தான் இழப்பானேன்?''

''இப்போது உனக்குக் கிடைக்கப் போகிற அநுபவம் இணையற்றது. உன்னைப் பற்றியது. அதை அறிவதற்கு இங்கிருந்து தெற்கே முப்பது காவத தூரம் கடற் பயணம் செய்ய வேண்டும். நெருங்கி வந்து கொண்டிருக்கிற வைசாக பௌர்ணமி தினத்தன்று நாம் மணிபல்லவத்திற்குப் போய்ச் சேர்ந்துவிட வேண்டும்.''

''என்னைப் பற்றி அறிய நான் எனக்குள்ளேயே அல்லவா பயணம் செய்ய வேண்டும்? என்னைப் புரிந்து கொள்ள நானே முயல வேண்டுமானால் என் மனத்தின் நினைவுகளில் நான் பயணம் செய்வதுமட்டும் போதாதோ?'' என்று கேட்டான் இளங்குமரன்.

''போதாது! நாளைக்கு நீ என்னோடு மணிபல்லவத்துக்குப் புறப்படுகிறாய். இதை நீலநாகமறவரிடமும் சொல்லி விட்டேன். அவர் ஒப்புக் கொண்டிருக்கிறார். நியானம் செய்வதற்கும், ஞானம் பெறுவதற்கும் நீ உன் மனத்துக்குள் நினைவுகளிலேயே பயணம் செய்யலாம். வாழ்க்கையை, அறிந்து கொள்ள அப்படி

தீவுகளில் மட்டும் பயணம் செய்து பயனில்லை தம்பி!''

''பயனின்மையிலும், இன்னதிலே இன்ன காரணத்தால் பயனில்லை என்று பயனில்லாமையைப் புரிந்து கொள்ளுவதாகிய ஒரு பயன் உண்டு என்று அப்போதே சொன்னேனே?'' என்று சொல்லி மறுபடியும் புன்முறுவல் புரிந்தான் இளங்குமரன். அப்போது நீலநாகர் உட்புறமிருந்து அந்தப் பக்கமாக வந்து சேர்ந்தார். அவரும் இந்தத் திட்டத்துக்கு உடன்பாடென்பது இளங்குமரனுக்கு அந்தச் சமயத்தில் புரிந்தது.

''இந்தப் பெரியவர் சொல்வதைக் கேட்டு இதன்படி வைசாக பௌர்ணமைக்குப் போய் வா தம்பீ! இந்தப் பயணத்தில் உனக்கு நிறையப் பயனிருக்கிறது'' என்று வளநாடுடையாரைக் காண்பித்து இளங்குமரனிடம் சொன்னார் நீலநாகர். தன் சம்மதத்துக்கு அறிகுறியாக இருவரையும் வணங்கி விட்டு அப்பால் சென்றான் இளங்குமரன். நீலநாகர் மகிழ்ச்சியோடு சென்றார். பயண ஏற்பாடுகளைக் கவனிக்க வளநாடுடையாரும் சென்றார்.

* * *

**பூ**ம்புகாரில் மறுநாள் பொழுது புலர்ந்தபோது பூம்புகார்த் துறைமுகத்திலிருந்து அவர்களுடைய பயணமும் தொடங்கியது. மணிபல்லவத் தீவைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலால் ஓவியன் மணிமார்பனும் அவன் மனைவியும் கூட அவர்களோடு அதே கப்பலில் புறப்பட இருந்தார்கள். பௌத்த மடத்தைச் சேர்ந்த இந்திர விகாரத்துத் துறவிகளுக்கென்றே புத்த பூர்ணிமைக்கு மணிபல்லவ யாத்திரை செய்வதற்குத் தனியாகச் சென்று கொண்டிருந்த வேறொரு கப்பலில் விசாகையும் அன்றைக்கே புறப்பட்டிருந்தாள்.

நீலநாகர், முல்லை, கதக்கண்ணன் ஆகியோர் கப்பல் துறைக்கு வழியனுப்ப வந்திருந்தார்கள். வளநாடுடையாரும் இளங்குமரனும் புறப்படுகிற நேரம் நெருங்க நெருங்க, இறுகிய மனம் படைத்தவரான நீலநாகரும் அந்தப் பிரிவில் தம் உள்ளம் குழைந்து நெகிழ்வதை உணர்ந்தார். இதே இளங்குமரனைப் பல ஆண்டுகள் திருநாங்கூரில் விட்டிருந்தபோது இந்த வேதனை அவருக்கு இல்லை. இப்போது இருந்தாற் போலிருந்து அவருடைய மனத்தில் ஏதோ ஓர் உணர்வு தவித்து உருகியது.

இளங்குமரன் கப்பலில் ஏறுமுன் அருகிற் சென்று அவரை வணங்கினான். ''போய் வா! ஆல்முற்றத்தில் உடம்பின் வலிமையைக் கற்றுத் தெரிந்து கொண்டாய். திருநாங்கூரில் அறிவின் வலிமையைக் கற்றுத் தெரிந்து கொண்டாய். மணிபல்லவத்தில் போய் உன்னைத் தெரிந்து கொண்டு வா!'' என்று அன்பு நெகிழ்ந்த குரலில் அவனிடம் கூறி வாழ்த்தினார் நீலநாகர்.

இளங்குமரன் கப்பலில் ஏறுமுன் கடைசி விநாடி வரை அவனுடைய கண்களிலிருந்து எதையோ தன்னுடைய கண்களால் முல்லை எதிர்பார்த்துக்



கொண்டே இருந்தாள். அவள் எதிர்பார்த்தது அவனுக்குக் கிடைக்கவில்லை. கதக்கண்ணன் முதலியவர்களிடமெல்லாம் அருகிற் சென்று விடைபெற்றுக் கொண்ட இளங்குமரன் முல்லைக்கு அருகில் வராமலே போய்க் கப்பலில் ஏறிக் கொண்டு விட்டான். ஆனால் அதே நேரத்தில் அவள் சிறிதும் எதிர்பாராத விடைபெறுதல் ஒன்று அவனுக்குக் கிடைத்தது. ஓவியன் மணிமார்பனுடைய மனைவி முல்லையின் அருகில் வந்து அவளிடம் விடைபெற்றாள். ஆத்திரம் ஆத்திரமாக வந்தது முல்லைக்கு. வெளிப்பட அந்த ஆத்திரத்தைக் காண்பித்துக் கொள்ளாமல் மணிமார்பனின் மனைவிக்கு வேண்டா வெறுப்பாய் விடை கொடுத்தாள் முல்லை.

காலை யிளங் கதிரவனின் பட்டொளி பட்டுப் பாய்மரம் மின்னிடக் கப்பல் நகர்ந்தது.

இளங் காற்றும் இள வெயிலும் சேர்ந்து நடுக்கடலில் பிரயாணம் செய்வதற்கு உற்சாகமான சூழ்நிலையை உண்டாக்கியிருந்தன. தன்னுடைய வாழ்வில் ஏற்பட்ட ஒவ்வொரு பெரிய திருப்பமும் பூம்புகாரில் ஏதாவது ஓர் இந்திர விழா முடிந்த பின்போ அல்லது தொடங்கியபோதோ ஏற்பட்டிருப்பதை இப்போது நினைவு கூர்ந்தான் இளங்குமரன். அவனுக்கு நினைவு தெரிந்த பருவத்துக்குப் பின்பு வந்த முதல் இந்திர விழாவின் போது தான் அருட்செல்வ முனிவர் அவனை நீலநாகமறவருடைய படைக்கலச்சாலையில் சேர்த்தார். அதற்குப் பின்பு சில ஆண்டுகள் கழித்து அவன் படைக்கலப் பயிற்சியெல்லாம் முடித்து விட்டு முரட்டு இளைஞனாகத் திரிந்து கொண்டிருந்த போதுதான் சித்திரா பௌர்ணமி இரவில் சம்பாபதி வனத்தில்



அவனை யாரோ கொலை செய்ய முயன்றார்கள். திருநாங்கூருக்குச் சென்றபின் அங்கு ஞானப் பசி தீர்ந்து கொண்டிருந்த சமயத்தில் சில இந்திர விழாக்களைத் தன் அறிவு வேட்கையில் அவனே மறந்திருந்தான். அதன் பின்பு மீண்டும் அவன் பூம்புகாருக்குள் நுழைந்த போது வந்த இந்த ஆண்டின் இந்திர விழாவோ அந்த மாபெரும் நகரத்துக்கு அவனை அறிவுச் செல்வனாக அறிமுகம் செய்து வைத்தது. அவனுடைய ஞானக்கொடி வெற்றிக்கொடியாக உயரவும் வாய்ப்பளித்தது. இந்திர விழா முடிந்ததும் இப்போது மற்றொரு திருப்பமாக மணிபல்லவ யாத்திரையும் வாய்த்தது.

இனி வரப் போகும் அடுத்த இந்திர விழாவைக் கற்பனை செய்து கொண்டே கதிரொளியில் மின்னிச் சரியும் அலைகளைப் பார்த்தான் இளங்குமரன். ஓவியனும், வளநாடுடையாரும் கப்பலில் அவன் அருகில் வந்து நின்று கொண்டிருந்தார்கள். இளங்குமரன் தன்னுடைய நினைவுகள் கலைந்து அவர்கள் பக்கம் திரும்பினான்:

''புறப்படும் போது நீ முல்லையிடம் ஒரு வார்த்தையும் பேச வில்லை போல் இருக்கிறதே, தம்பி!'' என்று அந்த விநாடி வரை அவனிடம் கேட்பதற்குத் தவித்துக் கொண்டே கேட்கவும் கூசி அடக்கிக் கொண்டிருந்த ஒரு கேள்வியைத் துணிந்து கேட்டார் வளநாடுடையார்.

''ஐயா! நீங்கள் கூறுவது வியப்புக்குரிய செய்தியாய் இருக்கிறது. நான் பேசாமல் இருப்பதற்குக் காரணம் ஒன்றும் இல்லை. என்னுடைய மௌனத்தை முல்லையோ, நீங்களோ உங்கள் மேல் எனக்கிருக்கும் வெறுப்பை நான் காட்டுவதாக எடுத்துக் கொண்டு வேதனைப் படக்கூடாது. நான் முல்லையிடம் பேசியிருந்தால் அந்தப் பேச்சுக்கு எப்படித் தனியான அர்த்தம் இருக்க முடியாதோ அப்படியே பேசாமலிருந்ததற்கும் தனியான அர்த்தம் எதுவும் இல்லை.''

''நீ இப்படிச் சொல்லிப் பதில் பேச முடியாமல் என் வாயை அடக்கி விடலாம். ஆனால் என்னுடைய பெண் நீ சொல்கிறாற் போல் நினைத்துக்கொண்டு போகவில்லை. நாம் புறப்படுகிறபோது முல்லையின் முகம் எப்படி இருந்ததென்று நான் பார்த்தேன். நீ பார்க்க வில்லை. ஒருவேளை நீயும் பார்த்திருந்தால் அவள் மனநிலை உனக்குத் தெரிந்திருக்கும்.''

இதைக் கேட்டுத் தன்னையறியாமலே தான் யாரையோ புண்படுத்தியிருப்பது போல உணர்ந்து வருந்தினான் இளங்குமரன். இந்தப் புதிய வருத்தத்தோடு அவன் மறுபடி கரையைப் பார்க்க முயன்றபோது கரை வெகு தொலைவில் மங்கியிருந்தது. அதோடு சேர்ந்து யாருடைய முகமோ அப்படியே மங்கித் தோன்றுவது போலவும் இருந்தது. 'நெருங்கிப் பழகிய பிறருடைய துக்கங்களைக் கரையிலேயே விட்டு விட்டுத் தான் மட்டும் இறங்கி முன்னேறுவதுதான் வாழ்க்கைப் பயணமோ?' என்று எண்ணிய போது அந்த எண்ணத்தின் வடிவிலே இளங்குமரனின் மனச்சான்றே அவனைக்குத்திக் காட்டியது. பூம்புகாரின் கரைக்கும் தனக்கும் நடுவிலுள்ள தொலைவிலே தான் செய்த பயணத்தின் எல்லையெல்லாம் தன்னால் தனக்காகக் கரையில் விடப்பட்ட துக்கங்களின் பரந்த அளவாகத் தோன்றியது அவனுக்கு.

''கடவுளே! நான் எந்தவிதமான நோக்கமும் இல்லாமலே மௌனமாக இருந்து யாருடைய மனத்தையோ துன்புறுத்தி யிருக்கிறேன்! இப்படி என்னை அறியாமல் யாரையும் துன்புறுத்தும் சந்தர்ப்பங்கள்கூட நான் பயணம் செய்யும் வாழ்க்கை வழியில் இனிமேல் நேராமலிருக்கட்டும்....'' என்று இரு கண்களையும் மூடிச் சில விநாடிகள் இறைவனை எண்ணினான் இளங்குமரன். பயணம் தொடர்ந்தது. இப்போது கரை முற்றிலும் மங்கித் தொலைவில் நீண்ட பச்சைக் கோடாகச் சிறுத்துப் பின் தங்கி விட்டது.

இளங்குமரன் என்னும் அழகிய-அறிவு வாழ்க்கை — தன்னுடைய வாழ்வு நாடகத்தின் மூன்றாவது பருவத்திலிருந்து அடுத்த மாறுதலுக்குப் புறப்பட்டது. கடலில் அலைகள் தாளமிட்டன. கரையில் முல்லை தன்னோடு உடனிருப்பவர்களுக்குத் தெரியாமல் தன் கண்ணீரை மறைத்து விடுவதற்கு அரிய முயற்சி செய்து கொண்டிருந்தாள். அவனுடைய வாழ்க்கைப் பயணத்துக்குத் தன்னுடைய கண்ணீரால் விடை கொடுத்தாள் அவள்.

(தொடரும்)






நகுதல் பொருட்டு அன்று நட்டல் மிகுதிக்கண்
மேல் சென்று இடித்தல் பொருட்டு

'சிரித்து மகிழ்வதற்காக அன்று நட்புச் செய்வது; ஒருவரது தவறுகளை முன் நின்று இடித்துக் காட்டவேதான் தோழமை பூணுவது' என்கிறார் தெய்வப்புலவர். அடியிற் காணும் கட்டுரையைப் படிப்பவர்கள் நட்பைப் பற்றிய இவ் விளக்கத்தை மனத்தில் கொள்வார்களானால் பிரதமரின் பிறந்தநாளன்று நமது சிநேகதர்மத்தை நிலைநாட்டிக் கொள்வதாகவே உணர்வார்கள். "Nehru Discovered" என்ற நூலில் நேருஜியைக் 'கண்டுபிடித்து' நமக்குக் காண்பித்துக் கொடுக்கிறார் ஸ்ரீ ஸி. எம். ஸ்ரீநிவாசன் ('சத்தியமேவ ஜயதே') அவர்கள்; அதிலிருந்து சில பகுதிகளையே இங்கு தமிழாக்கித் தருகிறோம்.

—ஆசிரியர்

நேருஜியின் நல்லெண்ணத்தில் நமக்குச் சந்தேகம் இல்லை. அவரது அரசியல் கொள்கையும், பேச்சுக்களும் தீவிரமான திட நம்பிக்கையிலிருந்தே பிறந்தவை. ஆனால் அவை நம் நாட்டு நிலைக்குப் பொருந்தாதவை. அவர் விரும்பும் இலக்குகளுக்கே அவை ஊறு செய்யக் கூடியவை.

ஜவாஹர்லால் நேரு அவர்கள் ஒரு மாபெரும் தேசபக்தர், உணர்ச்சி நிறைந்தவர். ஆனால் அவர் ஒரு ராஜதந்திரியோ, சிறந்த நிர்வாகியோ அல்ல. எளிதில் ஆத்திரமடைபவர் அவர். பிறர் யோசனைகளை ஏற்பவரல்லர். பொதுமக்களோடு தம் இதயம் ஒட்டிச் செல்வதாக அவர் வாசாலகமாகக் கூறுவதும், சுதந்திரப் போராட்டத்தின் போது அவர் நீண்ட காலம் சிறைவாசம் அநுபவித்த வரலாறும்தான் பொதுமக்களை அவர்பால் கவர்ந்திருக்கின்றன. (பக்கம் 29, 127–8)

* * *

விஷயங்கள் ஆழப் பதிவது இளமைப் பருவத்திலே தான். இந்தப் பருவத்தில் நேருஜி இங்கிலாந்தில் வசிக்க நேரிட்டது. அதனால் மேல் நாட்டுப் பொருளாதார முன்னேற்றம் அவரை மிகவும் கவர்ந்து விட்டதில் வியப்பில்லை. அதன் பயனாய், விஞ்ஞான ரீதியில் பொருளாதார முன்னேற்றம் காண்பதொன்றே நமக்கு விமோசனமளிக்கும் என்ற முடிவுக்கு அவர் வந்து விட்டார்.

அறியாமையிலும், வறுமையிலும் ஊறிப்போன மக்களுக்கு அவர்களுடைய பழைய உலகையும், நம்பிக்கைகளையும் கைவிடக் கற்பிக்க வேண்டுமென அவர் கருதலானார்.... நமது முன்னேற்றப் பாதையில் முட்டுக்கட்டையாக இருப்பது மத உணர்ச்சியே எனக் கருதும் உள்ள அமைப்பு அவரை அறியாமலே உருவாகி விட்டது.

"அரசியலில் சமய உணர்ச்சி வளர்வதைக் கண்டு நான் சில சமயங்களில் கலக்கமடைந்தேன். அதை நான் சிறிதும் விரும்பவில்லை. எனினும் எனது காரியத்திலும், எங்கள் இயக்கத்தின் முன்னேற்றத்திலும் நான் பூரணமாக ஈடுபட்டிருந்ததால் இது போன்ற அற்ப விஷயங்களைப்பற்றி—அவை அற்பமெனத்தான் அப்போது எண்ணினேன் – நான் அதிகம் கவலை கொள்ளவில்லை. இந்த அம்சத்தில் காந்திஜியைப் புரிந்து கொள்வது கடினமாக இருந்தது. அடிக்கடி நாங்கள் அவரது காரண மற்ற மோகங்களைப் பற்றி விவாதித்ததுண்டு; ஸ்வராஜ்யம் வந்தபின் இந்தப் பிரமைகளுக்கு ஊக்கமளிக்கக்கூடாது என்று பாதிவிளையாட்டாகச் சொல்லிக் கொள்வோம்" என்கிறார் நேருஜி.

(பக்கம் 6–7)

* * *

காந்தியடிகள் அரசியல் இயக்கத்தில் ஆன்மீகக் கருத்துக்களைச் சேர்ப்பதை நேருஜி ஆமோதிக்கவில்லை. எனினும் மக்கள் காந்திஜிக்குக் கோவில் எடுத்துக் கும்பிடுமளவுக்குப் பக்தி செலுத்துவதை அவர் கண்டார்..... ஆனால்மார்க்ஸீயத்தில் மனப்பற்றுள்ளவர்கள் தங்கள் தலைவர்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதே வழக்கமல்லவா? அதற்கேற்ப



நேருஜியும் தமது தலைவரின் தத்துவம், அரசியல் நடைமுறை இவற்றில் பலவற்றைத் தாம் ஏற்காத போதிலும் காந்திஜியைப் பின்பற்றுவதில் திருப்தி கொண்டார்.

உதாரணமாக, அஹிம்சை என்பதை ஒரு கோட்பாடாகக் கொள்வதில் தமக்கு நம்பிக்கையில்லை என்று அவர் பல முறை வெளியிட்டிருக்கிறார். இந்தியாவின் வறுமை நீக்

> பணம் படைத்தவர்கள் கழுத்துக்கள் எல்லாம் கருக்குக் கயிற்றில் சிக்கிக் கொண்டிருக்கின்றன. அந்தக் கயிற்றை ஆளும் கட்சி கையில் பிடித்துக்கொண்டு, அவர்களை மிரட்டித் திரட்டும் பணத்தை, ஏழைகளின் வோட்டுக்களைப் பெறப் பல வழிகளில் செலவழிக்கத் திட்டம் போடுகிறது.. இத்தகைய சூழ்நிலை நிலவும் போது நேர்மையான தேர்தல் எப்படி நடக்க முடியும்?
>
> —ராஜாஜி

கதர் அபிவிருத்தி ஒரு தீர்வாகும் எனக் காந்திஜி அடிக்கடி வலியுறுத்தி வந்த போதிலும் நேருஜிக்கு அதில் நம்பிக்கையில்லை. சட்ட மறுப்பு என்ற மாளிகையின் மூன்று பாரந் தாங்கி வளைவுகள் எனக் காந்திஜி கருதிய அம்சங்களுக்கு நேருஜி என்றுமே முழு மனத்தோடு விசுவாசம் தெரிவித்ததில்லை. எனினும் அவர் காந்திஜியின் நிர்மாணத் திட்டத்துக்குப் பரிபூரண ஒப்புதல் தெரிவித்தது அதிசயத்திலும் அதிசயமாகும்.

(பக்கம் 14 — 15)

ஃ ஃ ஃ

வாழ்வியல், அரசியல் இரண்டிலுமே நேருஜியின் கருத்துக்கள், கொள்கைகள், தத்துவங்கள் இவற்றை உருவாக்குவதில் மார்க்ஸீயம்தான் மிகவும்வலிமை வாய்ந்த, ஆழ்ந்து பரவிய தனி பொரு சக்தியாக இருந்து வருகிறது. தமது சுயசரிதையில் அவர் கூறுகிறார்:

''நீண்டகாலமாக என்னைச் சோஷலிஸமும், கம்யூனிஸமும் ருஷியாவும் கவர்ந்திழுத்திருக்கின்றன. எதிரிடைக் கருத்துக்களைக் கருணையின்றி நசுக்குவதாலும், எல்லாவற்றையும் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதாலும், தனது கொள்கைகளை அமுல் செய்வதற்காக பலாத்காரத்தைப் பிரயோகிப்பது அநாவசியம் என்று எனக்குத் தோன்றியதாலும் ருஷ்யாவில் காணும் பல விஷயங்களை நான் விரும்பவில்லை. ஆனால் முதலாளித்துவ நாடுகளிலும் பலாத்காரம்,அடக்குமுறை இவற்றுக்குச் சற்றும் குறைவில்லை. சொத்து சேர்த்துக் கொள்வதை அநுமதிக்கலாமென்ற கருத்தின் மீதமைந்த நமது சமூகத்தின் அடிப்படை, அஸ்திவாரம் இவையே பலாத்காரம்தான் என்பதை நான் மேலும் மேலும் உணரலானேன். இருமுறைகளிலும் பலாத்காரம்காணப்படுகிறது. ஆனால்முதலாளித்துவத்தின் பலாத்காரம் அதிலேயே இயற்கையில் உள்ளடங்கியதாகத் தோன்றியது. ருஷியாவின் பலாத்காரமோ அமைதி, கூட்டுழைப்பு, மக்களின் உண்மை சுதந்திரம் இவற்றை இலக்காகக் கொண்டது. எனவே இவற்றைச் சீர்தூக்கிப் பார்த்தபின் என் ஆதரவு முற்றிலும் ருஷ்யாவுக்கே கிடைத்தது. இருளடைந்த, துயரம் தோய்ந்த உலகில் சோவியத் உதாரணம் ஓர் ஒளி விளக்கம், உற்சாகமூட்டும் பிரத்யட்ச உண்மையாகத் தோன்றியது...... (சீர்திருத்தம் செய்வதில்) இன்னும் நிதானமாகச் சென்றால் கிராமப்புறங்களில் உள்ளவர்களுக்கு இப்போது ஏற்படும் இன்னல்களைத் தவிர்க்கலாம். ஆனால், பிற்பாடு நிதானமாக முன்னேற்றம் அடையலாமெனினும் முதலில் எடுத்து வைக்கும் அடி தற்போதுள்ள நியதியிலிருந்து முற்றிலும் பிளந்து கொண்டு போவதாக அமைய வேண்டும். இன்றைய நியதியானது தனது நோக்கத்தை நிறைவேற்றியாகி விட்டது. அது எதிர்கால முன்னேற்றத்துக்கு ஒரு பெரும் தடையாகும்.''

(பக்கம் 21—23)

ஃ ஃ ஃ

அந்த நாட்களில் ருஷியாவுக்கு வெளியேயிருந்த பெரும்பாலான இடதுசாரியினரைப் போலவே நேருஜியும் தம்மை ஒரு சோஷலிஸ்ட் என்று கூறிக் கொண்டார். ஆனால் அது கம்யூனிஸத்தின் மாறுவேஷம் தான். காரணம் மக்கள் கம்யூனிஸம் என்பது நடுங்க வேண்டிய விஷயம் என்று உள்ளுணர்ச்சியாலேயே கருதியதுதான்.

சமூக அமைப்பின் பொருளாதார அம்சத்தில் மட்டுமே நேருஜி அளவுக்கு மீறிக் கவனம் செலுத்துவது மார்க்ஸீயத்தில் அவருக்கிருந்த திட நம்பிக்கையின் இன்னொரு விளைவேயாகும். மத நம்பிக்கை, மதத்திலிருந்து பெற்ற நன்னெறிக் கோட்பாடு இவற்றில் பொதிந்துள்ள விளக்கவொண்ணு வாழ்க்கைத் தத்துவங்களையும், மார்க்ஸ் 'மதத்'துக்கு முரணான கொள்கைகள் மீது எழும்பிய சமூக அமைப்புக்களையும் அவர் குறைவாக மதிப்பிடுவதற்கும் இதுவே காரணம்.

காந்திஜி உயிர் வாழ்ந்த நாட்களில் இருந்ததைவிட அதன் பின்னரே முதலாளித்துவத்தின் மீது அவருக்கு இருந்த காரணமற்ற வெறுப்பு வெளிப்படையாகி வருகிறது...... காந்திஜியின் மறைவுக்குப் பின்புதான் 'சோஷலிஸ பாணி சமுதாயம்' என்ற சூத்திரம் உருவாகியது.

முன்பு நேருஜி காங்கிரஸ் அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட போது அவர் சோஷலிஸத்தைக் காங்கிரஸ் ஏற்குமாறு செய்ய முயன்று, அந்த ஸ்தாபனத்தில் ஒரு பெரும் நெருக்கடியைத் தோற்றுவித்தது இங்கே குறிப்பிட வேண்டியதாகும். காந்திஜியின் ஆதரவுடன் காரியக் கமிட்டிக்குத் தலைமை தாங்கிய பட்டேல், ராஜேந்திர பிரசாத், ராஜாஜி முதலியவர்கள் அப்போது தங்கள் ராஜிநாமாவை அவருக்கு அனுப்பி வைத்தார்கள். ராஜிநாமாக் கடிதத்தில் காணப்படும் சில வாசகங்கள்:

''உங்கள் கருத்துக்களுக்கு இடம் அளிக்க வேண்டும் என்பதில் நாங்கள் இயன்ற அளவுக்கு முயன்று வருகிறோம். எனினும் நமக்குள் ஓர் இணக்கம் பிறக்கவில்லை என்பதையே காண்கிறோம். காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளாத சோஷலிஸக் கொள்கையை இந்த நிலையில் பிரசாரம் செய்வதும், வலியுறுத்துவதும் நாட்டு நலன்களுக்கும், தேசிய விடுதலைப் போராட்டத்துக்கும் குந்தகம் விளைவிக்கும் என்று நாங்கள் கருதுகிறோம். தற்போதுள்ள காரியக் கமிட்டியானது உங்கள் விருப்பத்துக்கு உகந்ததல்ல வென்றும், உங்கள் மீது திணிக்கப்பட்டதாகவும், உங்கள் மேலான கருத்துக்கு விரோதமாகவே அதனை

ஒத்துக் கொண்டதாகவும் நீங்கள் எண்ணுவ தாகவும், பேசுவதாகவும் தெரிகிறது. எனவே நீங்கள் தடையாகக் கருதும் காரியக் கமிட்டி யால் உங்களது வேலை பாதிக்கப்படாமல், உங்களுக்குத் தாராளமான வசதியளிக்கவேண் டும் என எண்ணுகிறோம். உங்களுடைய பேச்சுக்களால் காங்கிரஸ் ஸ்தாபனம் நாடு முழுதும் நலிவு பெற்று விட்டது. இதை ஈடு செய்யும் நன்மை எதுவும் விளையவில்லை என்பதே எங்கள் அபிப்பிராயம். எனவே நாங்கள் காரியக் கமிட்டியிலிருந்து ராஜி நாமா செய்வதென முடிவுசெய்துவிட்டோம்.

(ஒப்பம்)

ராஜேந்திர பிரசாத்
ஸி. ராஜகோபாலாச்சாரி
ஜயராம்தாஸ் தௌலத்ராம்
ஜம்னுலால்பஜாஜ்
வல்லபாய் பட்டேல்
ஜே. பி. கிருபளானி
எஸ் டி. தேவ்

(இக்கடிதம் குறித்துக் குறைப்பட்டுக் கொண்டு நேருஜி காந்தியடிகளுக்கு ஒரு கடி தம் எழுதினர். அதற்குக் காந்திஜி எழுதிய பதிலில், "அவர்களுக்குச் சகிப்பு மனப் பான்மை இல்லை என்று குற்றம் சொல்வதா னல் அதில் உங்களுக்கு மற்றவர்களை விட அதிகம் பங்கு உண்டு" என்று குறிப்பிட் டிருக்கிறர்.)

காந்திஜியின் ரட்சணை இல்லாமல் தாம் இந்திய அரசியலில் இடம் பெற முடியாது என்பதை அறிந்த நேருஜி மிகவும் வேக மாகத் தமது கோட்பாடுகளிலிருந்து அப் போது பின்வாங்கினர்.

(பக்கம் 25 – 27; 58-59)

ஃ ஃ ஃ

முதலாளிகள், விவசாயிகள் இவர்களை விடத் தொழிலாளர்களைக் குறித்து அவரது ஈடுபாடு அதிகமாக இருப்பதற்குக் காரணம், அவரது மார்க்ஸீயக் கண்ணேட்டமே. விக் டோரியா காலத்துமிதவாதம், சர்க்கார் கண் காணிப்பு சிறிதுமற்ற பொருளாதாரம் முத லிய கோட்பாடுகள் இன்று முழுவதும் மறைந்துவிட்டன. எனினும் அந்த மாண்டு போன கருத்துக்களின்மேல் நேருஜிக்கு உள்ள வெறுப்பே அவரது பொருளாதாரக் கொள் கையை உருவாக்கியிருக்கிறது. காலத்துக்கு ஒவ்வாத சித்தாந்தங்கள் அவரைப் பிடித்து ஆட்டுவதன் விளைவாகவேதான் அவரது கண் ணேட்டம் தாறுமாருக உருவாகியிருக்கிறது. குறைகள் மலிந்த திட்டங்கள், திட்ட இலக்கு களை அடைவதில் காணும் தோல்விகள், பரி காரம் செய்ய முடியாத திறமைக் குறைவு, பகிரங்கமான லஞ்ச ஊழல் ஆகியவற்றில் நேருஜியின் கருத்துக்களினல் ஏற்பட்ட விளைவு களைக் காணலாம்.

(பக்கம் 28 – 29)

ஃ ஃ ஃ

முதலாளித்துவ நாடுகளில் மட்டுமே மக் களைச் சுரண்டுவதாகவும், நசுக்குவதாகவும், வறுமை அறியாமை என்ற இரு பாகங்கள் கொண்ட இயந்திரத்தில் அவர்களை நெருக்கி அரைப்பதாகவும் நேருஜி கூறுகிறர். இந்தத் நிலைமைகள் கம்யூனிஸ ஆதிக்கத்திலுள்ள ஆசிய, ஐரோப்பிய நாடுகளில் மேலும் உக்கிரமாக இருக்கின்றன என்பதைக் காண அவர் மறுக்கிறர்.

அவர் ஆப்பிரிக்க விடுதலையில் பூரண நாட் டம் காட்டுகிறர். ஆனல் திபெத்து, போலந்து,




கிழக்கு ஜெர்மனி இவை பற்றி அவருக்கு அக் கறை யில்லை. நடு நிலைமை வகிப்பதாகவும், கூட்டு சேராக் கொள்கையைக் கடைப்பிடிப்ப தாகவும் சொல்லிக் கொண்டாலும் ஐ. நா. வில் அவரும் அவரது பிரதிநிதிகளும் மேற் கத்திய நாடுகளைத் தாக்கும் வாய்ப்புக்களை மட்டும் தான் பயன்படுத்திக் கொள்கிறர்கள். சோவியத் கோஷ்டியுடன் அவர் வேறு பட் டாலும் அதனை வெளிப்படக் கூறுவதில்லை. ராஜ தந்திரம் கலந்த மௌனத்தின் மூலம் தான் அதனை ஊகித்தறிய வேண்டும்!

ஆக, சுதந்திரம் கிடைத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின் இந்த நாடு கம்யூனிஸம், முகமூடியணிந்த சர்வாதிகாரம் என்ற இரண்டு அரக்கர்களுக்கு இடையே மாட்டிக் கொண்டிருக்கிறது.

(பக்கம் 30)

ஃ ஃ ஃ

கடந்த பன்னிரண்டு ஆண்டுக் காலத்தில் அவர் நாட்டின் மீது திணித்துள்ள சீர்திருத் தங்கள், மாற்றங்கள் இவற்றின் எண்ணிக்கை யும், அவை வெளியாகும் வேகமும் திகைப்



பூட்டுகின்றன. காந்திஜி எண்ணியதற்கு மாருக, சட்டங்கள், ஒழுங்கு விதிகள் இவற் றின் மூலமே நிலைமையை மாற்றிவிடலாம் என்று அவர் எண்ணுகிறர் என்பதை இவை நிரூபிக்கின்றன.

(பக்கம் 36)

ஃ ஃ ஃ

ஹைதராபாத் பிரச்னைக்குப் பட்டேல் ஊகச்சிதமாகத் தீர்வு கண்டார். நேருஜியோ காஷ்மீர் பிரச்னையைச் சிக்கலாய்ச் செய்து நம் பலவீனத்துக்கு அதை ஓர் ஊற்ருக ஆக்கி

வருகிறார். பட்டேல் உயிர் வாழ்ந்த காலத்தி லேயே நேரு அவர்கள் காஷ்மீர் விஷயத்தைத் தமது ஆணை எல்லைக்கு உட்படுத்த வேண்டும் என்று உரிமை பாராட்டியதாக வதந்தி உலவி யது. இதனால்தான் போலும், காஷ்மீரானது பிரதமரது வெளிவிவகார இலாகாவின் கீழ் கொண்டு வரப்பட்டது.

(பக்கம் 61 — 2)

ஃ ஃ

ராஜாஜி அவர்கள் பரந்து விரிந்த அடிப் படையில், பகுத்தறிவுக்கு உகந்த முறையில், உணர்ச்சி வசப்படாமல் நேருஜிக்குச் சவால் விடுத்திருக்கிறார். கருத்துக்களையும் கொள்கை களையும் மீதப்படுத்திக் கொள்ளுமாறு நேருஜியை அவர் கோருகிறார். அதே சமயத் தில் நேருஜி என்ற தனி மனிதருக்கு அடிமைப் படாமல் நம்மை விடுவித்துக் கொள்ள வேண் டும் என்று நமக்கும் அறைகூவல் விடுக்கிறார். எவ்வளவுதான் மாறு வேஷத்திலிருந்தாலும், மனத்தைக் கவர்பவர்களாக இருந்தாலும் இந்த நாட்டில் சர்வாதிகாரிகள் தோன்று வார்களானால், அவர்கள் செயலாற்றுவதற்கு அனுமதி அளித்த பொறுப்பு நம் எல் லாரையுமே சாரும். நம்மைக் காப்பாற் றிக்கொள்ளவேண்டு மானால் அது நமது சுய முயற்சியால் தான் முடியும். ஏமாற்றம், மன முறிவு, பேரின்னல் கள் இவையே அகம்பாவம் பிடித்த தலை மையை அடுத்து மக்களுக்குக் கிடைக்கும் விபரீத விளைவுகளாகும். இதுதான் சரித் திரம் செய்யும் எச்சரிக்கை.



1947 மே மாதம் 15ந் தேதி ஹரிஜனில் காந்திஜி கூறியுள்ள சில வாசகங்களை இங்கு காண்போம்:

''என் தலை மீது கவிந்துள்ள குடையைத் தாங்குவது நான்தான். அது பழுதானால் அதை நான் விலக்கி விடுவேன். அதே போலத் தான் பண்டித நேரு இன்று நமக்குத் தலைமை தாங்குகிறார். ஆனால் உண்மையில் அவரைத் தாங்குவது நாம்தான். அவர் தவறான வழியில் சென்றால், 'அடி'யிலுள்ளவர்கள் அவரைச் சிரமமின்றி விலக்கிவிட முடியும்....உண்மை இதுதான்: அடி மட்டத்திலுள்ள மக்கள் அறியாதவர்களாக இருந்தால் அவர்களைப் பிறர் தங்கள் சுயநலத்துக்காகப் பயன்படுத் திக் கொள்வார்கள். ஆகவே தலைமை தவறு செய்கிறது என்றால் அதற்குக் காரணம் அடி மட்டத்தில் ஏதோ பெருங் கோளாறு இருக் கிறது என்பதே. நமது அறியாமை எனும் பலவீனத்தை உதறித் தள்ளுவோமாக.''

(பக்கம் 101 — 2)

ஃ

நம் மக்கள், தங்கள் நலனையும் தங்களது சந்ததியினர் நலனையும் முன்னிட்டு, 'அவசரத் தால் விரயம்தான் விளையும்' என்று பிரதம ருக்கு எச்சரித்து நினைவூட்ட வேண்டியிருக் கிறது. மக்கள் அளிக்கும் வரிப் பணத்தை வாரி இறைத்து வீண் அடிப்பதற்கும், அந்நியச் செலாவணிக் கையிருப்பு அதி வேகமாகத் தேய்ந்து வருவதற்கும் திட்டக் கமிஷன் என்ற கற்றுக்குட்டிகளின் சபைத் தலைவர் என்ற முறையில் நேருஜியும் பொறுப்பாளியாவார். நிதானமாகவும் சீராகவும் சென்றால், இருபத் தைந்து அல்லது முப்பது ஆண்டுகளில் வீண் செலவுகளோ, வரிப் பளுவோ, பணவீக்கமோ இல்லாமல் என்ன சாதிக்கலாமோ அதையே பதினைந்து ஆண்டுகளுக்குள் செய்து முடிக்க முயல்கிறார் நம் பிரதமர்.

நம் காலத்திலேயே எல்லாவற்றையும் முடித் துக் கீர்த்தி பெற வேண்டும் என்பதில் அவ ருக்குள்ள பொறுமையின்மை நம் நாட்டின் துர்ப்பாக்கியமாகும். இதனாலேயே சற்றும் அவசியமில்லாத, எதிர்பாராத இன்னல்களை யெல்லாம் மக்கள் அடைய வேண்டியிருக் கிறது.

(பக்கம் 119—20)

ஃ ஃ ஃ

பதின்மூன்று ஆண்டுகளாக நடைபெற்று வரும் தமது நிர்வாகத்தில் பிரதமர் நேருஜி மேலும் மேலும் தவறுகள் செய்தபடியிருக் கிறார். அவர் மிகவும் உணர்ச்சிவசப்பட்ட வர் என்பதே அவரிடமுள்ள பெரும் குறை. இதனால் அவர் தீர ஆலோசியாமலே, கொள் கைகளை வெளியிடுகிறார். காரியசாதகமற்ற விஷயங்களைச் செய்யப் போவதாக அறிவிக் கிறார். பிறகு அதனைக் காரியத்தில் செய்து காட்ட முயற்சி செய்கிறார். இதனால் நாட்டுக் குப் பெரும்நஷ்டம் ஏற்பட்டபின் இறுதியாகக் காணும் விளைவோ அவர் எதிர்பார்த்ததற்கு முற்றிலும் மாறுபட்டதாக இருக்கிறது.

1952-க்குப் பின் உணவுப் பொருள்கள் இறக்குமதி செய்யப்படமாட்டா என்று அவர் கூறினார். 'கறுப்பு மார்க்கெட்காரர் களையும், பண்டங்களைப் பதுக்குபவர்களையும், வரி தராமல் ஏமாற்றுபவர்களையும் அருகில் உள்ள மரத்தில் தூக்குப் போடுவேன்' என்றார். ஆனால் நாம் இன்னும் உணவில் தன்னிறைவு பெறவில்லை. முன்பைவிட அதிக மாக உணவுப் பண்டங்களை இறக்குமதி செய் கிறோம். கறுப்பு மார்க்கெட்காரர்களும், பதுக்குபவர்களும், வரி ஏய்ப்பவர்களும் இப் போதும் இருக்கத்தான் செய்கிறார்கள்.




அதோடு காங்கிரஸ் நிதிக்கு நன்கொடை வழங்கும் காங்கிரஸ் காரர்களாக இருந்து விட்டால் அவர்கள் முன்னிலும் செழிப்பாக இருக்கிறார்கள்.

ஆந்திரக் கிளர்ச்சியின் போது முதலில் பிரதமர் அதற்கிணங்கவில்லை. இதனால் ஆந்

திரர்களின் உணர்ச்சி தீவிரமாயிற்று. ராஜ்ய புனரமைப்புக் கமிட்டி நியமித்து ஆந்திர ராஜ்யப் பிரிவினைக் கோரிக்கையை நிறைவேற்றினார். அதைத் தொடர்ந்து இன்னமும் கிளர்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

(பக்கம் 127, 132)

ஃ ஃ ஃ

நாட்டு நிர்வாகத்தில் சிக்கனம் வேண்டும் என்று காந்திஜி விரும்பினார். இது ஏழை நாடானபடியால் வெள்ளைக்கார அதிகாரிகளுக்காக பிரிட்டிஷ் ஆட்சி நிர்ணயித்த தரத்தை நாம் நீடிக்கக் கூடாது என்று கருதினார். எனினும் நாமோ அதே பிரிட்டிஷ் அதிகார வர்க்க அமைப்பைத்தான் இன்னும் பின்பற்றி வருகிறோம். பொது நிர்வாகம் என்பது தனி மனிதர்களின் பிரத்தியேக விஷயமல்ல என்பதை மக்கள் உணராதவரை க்ஷேமகர ராஜ்யமாக இந்த நாடு முன்னேற வாய்ப்பே கிடையாது.

பிரதமரின் வெளி விவகார இலாகாவின் நிர்வாகம் நிலைபெற்ற ஊழலாகிவிட்டது. இந்தியாவின் கௌரவத்தை ஒட்டி நிறுவப்பட்டுள்ளதாகச் சொல்லப்படும் ஸ்தானீகராலயங்கள் என்ற வலைப் பின்னலுக்காக ஏராளமான தொகை செலவிடப்படுகிறது. இவற்றில் பெரும்பாலானவை மக்கள் தரும் வரிகளைக் கொண்டு நமது பிரதமரின் நண்பர்களுக்கு இடமளிக்கும் உல்லாஸலிருகங்களாகவே உள்ளன.

காரணம் கூறாமலேயே டாக்டர் ஜான்மத்தாய் (நிதிமந்திரி பதவியை) ராஜிநாமா செய்தார். அவரைப் பிரதமர் தூண்டியபோது அவர் கூறினார்: ''இவ்விஷயத்தில் (தண்டச் செலவு செய்வதில்) சில மிகப் பெரிய குற்றவாளிகள் பிரதமரின் நேரடிக் கண்காணிப்பிலுள்ள இலாக்காக்களில் உள்ளவர்கள்தான். நமது சிக்கன இயக்கத்தை இது மிகவும் பலவீனமுறச் செய்தது. இதைச் செயலாக்குவது எனக்குப் பெரும் பிரயாசையாகி விட்டது.''

(பக்கம் 129 – 31)

ஃ ஃ ஃ

முன்னாள் நிதி மந்திரி ஸ்ரீ ஸி.டி. தேஷ்முக் அவர்கள் உயர் பதவி வகிப்போரிடம் காணப்படும் லஞ்ச ஊழல் பற்றிப் பிரதமருக்கு எழுதினார். அவை பற்றி மூகாந்திரங்களைத் தமக்கு முதலில் தெரிவிக்க வேண்டுமென நேருஜி விரும்பியபடியே சில புகார்கள் அவர் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டன. ஆனால் அவரோ குற்றம் சுமத்தப்பட்ட அதிகாரிகளுக்கே இந்தப் புகார்களை அனுப்பி வைத்து விட்டார். பலன்: ஊழல் குறித்துத் தகவல் அளித்தவர் சங்கடத்தில் சிக்கிக்கொண்டதும், ஊழல் புரிந்த அதிகாரி பாதிக்கப்படாமல் இருந்ததும்தான்.

இதிலிருந்து வெளிப்படையாக லஞ்ச ஊழல் பற்றி விசாரிக்க அவருக்கு இஷ்டமில்லை என்றே தோன்றுகிறது. வெளிப்பட விசாரித்தால் காங்கிரஸ் கட்சியே குற்றவாளிகளுக்கு இடமளிக்கிறது என்ற இழுக்கு அம்பலமாகி விடுமோ என்ற பயம்தான் இதற்குக் காரணம். (பக்கம் 132–33)

பிரம்மாண்டமான திட்டங்கள், விரைவில் விளைவுகளைக் காண்பது குறித்த வெற்று வாசகங்கள் - இவை பிரதமரை எளிதில் கவர்வதாகத் தெரிகின்றன. பொதுமக்களுக்கு விஷய ஞானம் அளித்து, அவர்களது உற்சாகத்தைப் பெற்றால்தான் நிலையான தொழில் முன்னேற்றம் காண முடியும்; கம்யூனிஸ நாடுகளில் கூறப்படும் துரித முன்னேற்றம் வெறும் கற்பனையே என்பது உலக நாடுகள் அறிந்ததாகும். இந்தத் துரித முன்னேற்றப் பணியை ஒப்படைக்கவும் தகுதி பெறுதவர்களையே தேர்ந்தெடுத்திருக்கிறார் நம் பிரதமர். இந்த நாட்டினர் நம்பிக்கையைச் சிதைக்கும் வகையில் அந்நிய நிபுணர்கள்தாம் அவரை ஆரம்பத்திலிருந்து ஆட்கொண்டிருக்கிறார்கள்.



1947 டிஸம்பர் 7-ந் தேதி ஹரிஜனில் காந்திஜி எழுதினார்:

''நம்முடைய பிரதம மந்திரி மெத்தப் படித்தவர்; வரலாற்று வல்லுநர்; உயர்ந்த எழுத்தாளர்: ஆனால் உழவு, உழவு செய்வது இவை பற்றி அவருக்கு ஒன்றுமே தெரியாது. எனினும் நாட்டு மக்களில் என்பது சத விகிதத்துக்கும் மேற்பட்டவர்கள் உழவர்களே.''

அடுத்த இதழிலேயே அவர் கூறினார்:— ''இன்று நாம் காணும் சுதந்திரம் என்னை மூச்சுவிட முடியாமல் திணற அடிக்கிறது. இது மெய்யானதல்ல; நிலையானதும் அல்ல.''

(பக்கம் 133–7)

ஃ ஃ ஃ

கடந்த பதின்மூன்று ஆண்டுகளாக நீதி பரிபாலனத் துறைக்குக் கடிவாளமிட்டு வருகிறார் நேருஜி. அது ஆய்ந்து கண்ட முடிவுகளை அலட்சியப்படுத்தி அதனுடைய மதிப்பைப் பறித்து விட்டார். நாம் புரட்சிகரமான காலத்தில் வாழுகிறோம் என்பது ஒன்றே இதற்கு அவர் கூறும் காரணமாகும். புரட்சி செய்கிறோம் என்ற பெருமைக்காகவே புரட்சியைப் போற்றிப் பெரிதுபடுத்துவதை அநுமதித்து விட்டோமானால், விமோசனத்துக்கு வழியின்றி நாட்டு அமைப்புக் குலைந்து போக வேண்டியதுதான்...

தனி நபர்கள் சொத்தை ஆர்ஜிதம் செய்து நஷ்டஈடு தரும் பிரச்னையை எடுத்துக் கொள்ளலாம். எந்த நாகரிகமான சர்க்கார் அமைப்பிலும் இந்த நஷ்டஈடு விஷயம் நீதிமன்ற விசாரணைக்குட்பட்டதாகவே கருதப்படுகிறது. ஆனால் நமது பிரதமரோ பார்லிமெண்டைக் கொண்டு இந்த அதிகாரத்தை நீதிபரிபாலனத் துறையிடமிருந்து பறித்து நிர்வாகத்திடம் அளிப்பதற்குச் சட்டம் செய்திருக்கிறார்.

நீதி மன்றங்கள் சர்க்கார் நடவடிக்கைகளை விசாரிப்பதற்கில்லை; சர்க்காரின் கைப்பாவைதான் அவை என்ற கம்யூனிஸ சித்தாந்தத்தை நோக்கி நேருஜி வெளிப்படையாகவே செல்கிறார். *(பக்கம் 138—9)*

* * *

கிழக்கு மேற்கு வல்லரசுக் கோஷ்டிகளிடையே நடைபெறும் கெடுபிடிப் போரானது நேருஜியுடைய சுவர்க்கத்தின் உச்சியிலுள்ள ஆனந்த சாம்ராஜ்யமாகும். அதில் தனியொரு தாரகையாகச் சுடர்விட்டு ஒளிர வேண்டும் என்றே அவர் வெகுநாட்களாக முயன்று வருகிறார். கூட்டு சேராக் கொள்கை என்ற பெயரில் உலவும் நமது கொள்கை ஒரு மோசடியாகும். உலகை இரு கூறுகப் பிரித்த எல்லா நெருக்கடிக் காலங்களிலும் அவர் கம்யூனிஸ்ட் கோஷ்டிகளுடனேயே கூட்டு சேர்ந்திருக்கிறார்; நடுநிலைமைக் கொள்கையைக் கேலிக் கூத்தாக்கியிருக்கிறார்..... சீனவை ஐ.நா.வில் அனுமதிக்க வேண்டுமென்பவர் ஜெர்மனியின் உரிமைகளை அலட்சியம் செய்கிறார். காங்கோ, அல்லது அரபு நாடுகள் ஐக்கியப்பட வேண்டுமென்பவர் ஜெர்மனி பிளவுபட்டிருப்பது பற்றி நேரடியாகக் குறிப்பிடுவதில்லை. காங்கோவை பெல்ஜியம் கிளறினால் உறக்கமிழந்து தவிக்கும் அவர் கிழக்கு ஐரோப்பாவிலும், திபெத்திலும் சோவியத் கோஷ்டி நிலைநாட்டியுள்ள மயான அமைதியைப் போற்றுகிறார்.

அப்படியானால், மேற்கு நாடுகள் நம்மை 'நல்லபடி'யாக வைத்திருந்து நமக்கு நன்கொடைகளும், கடன்களும், உதவிகளும் வழங்கி வருவதில் ஏன் ஆர்வம் காட்டுகின்றன என்ற கேள்வி எழுகிறது. அவற்றின் நோக்கத்தில் சிறிதும் சிக்கலில்லை. நம்முடைய ஒத்துழைப்புடனேயே நம் நாட்டுக்குள் தங்கள் காலை ஊன்றிக் கொள்வதற்கு அவை முயல்கின்றன. மானியம் வழங்கும் அந்நிய நாடுகளுக்கு இந்த நாட்டைக் குத்தகை அளித்து விட்டோம்.

கடன் கொடுப்பவரிடம் கடன் வாங்குபவர் எவ்விதத்தில் மதிப்புணர்ச்சியை உண்டாக்க இயலும்? அதுவும், தனது அசல் வட்டி இரண்டையுமேதான் திருப்பிப் பெற முடியாமல் போகலாம் என்று கடன் கொடுத்தவர் அறிந்திருக்கும்போது? நம்மைவிடச் சக்தி வாய்ந்த நாடுகள் ஒன்றோடொன்று மோதிக் கொள்வதைப் பயன் படுத்திக் கொள்வதால் நம்முடைய உண்மைப் பலம் எப்படிப் பெருகும்?

நம்முடைய இரகசியங்களை நாமே காத்துக் கொள்வோம்; குறைவாகப் பேசுவோம். உலகை யெல்லாம் திருத்தும் தேவ தூதர் நாம் என்ற மயக்கத்தை விட்டு, பிறநாடுகளின் சச்சரவில் ஈடுபடுவதைத் தவிர்ப்போம். நம்முடைய சின்னஞ்சிறு வீட்டில் தோட்டம் போட்டு, நம் மக்களுக்காகவே உழைப்போம். ஒழுக்கத்தை அடிப்படையாகவும், எளிமையை நோக்காகவும் கொண்டு யாவருடைய இசைவான கருத்தையும் பெற்றுச் செயலாற்றுவோம். உலகெல்லாம் நம்மை நாடும்படி செய்தார் காந்திஜி. இந்தியாவின் குரலே சத்தியத்தின் குரலாகப் போற்றப்பட்ட நாள் அது. இப்போதோ நாம் நம் மதிப்பை மிகவும் குறைத்துக் கொண்டு விட்டோம். அவகாசமிருக்கும் போதே நாம் விழிப்படையா விட்டால், இந்நாடு அதற்குத்தக்க பலனை அனுபவிக்க வேண்டியிருக்கும்.

*(பக்கம் 152-4)*

* * *

கட்டாக்கிலுள்ள 'ராஷ்டிர பாஷா' என்ற பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீ அனுசூயா பிரசாத் பாடக் என்பவருக்கு காந்தி அடிகள் ஹிந்தியில் ஒரு கடிதம் எழுதியுள்ளார். அது இக்கட்டுரைக்குத் தகுந்த முடிவுரையாகும். நேருஜியின் தலைமையில் நடைபெற்ற நிர்வாகத்தால் மகாத்மாவின் மனம் எப்படி நொந்து துடித்தது என்பதை அறியும் போது நம் இதயம் கசிகிறது:

''சுதந்திரம் பெறும் முன்பு நான் எவ்வளவோ ஆசைகளைப் போற்றி வளர்த்து வந்தேன். அவை யெல்லாம் இன்று எங்கே? முன்பு நூற்றிருபது ஆண்டுகள் வாழ வேண்டுமென விரும்பிய நான் இன்று அந்த ஆவலை விட்டு விட்டேன். என்னை விரைவிலேயே தம்மிடம் அழைத்துக் கொள்ளுமாறு ஆண்டவனுக்கு நான் விண்ணப்பம் போட்டிருக்கிறேன். இந்த முடிவுக்கு வருவதற்கு முன்னால் நான் எவ்வளவு மன நோவுபட்டிருப்பேன் என்பது உங்களுக்குத் தெரியாது. முன்பு நான் சொல்வதை யெல்லாம் காது கொடுத்துக் கேட்ட தலைவர்கள், இப்போது பதவிக்கு வந்தபின் என் விருப்பங்களை அவமரியாதை செய்யத் தொடங்கி விட்டார்கள். வயதுக் கோளாறு என்று அவற்றைக் கூறுகிறார்கள். நான் சொல்வதை எள்ளி நகையாடுகிறார்கள். எனவே இங்கு இனியும் தங்கியிருப்பது உசிதமல்ல என்று எனக்குப் பட்டுவிட்டது......

''நானும் அவர்களைப் போலவே நடந்து கொண்டால் கடவுளுக்குத் துரோகமிழைத்தவனுவேன். எனவேதான் அவர்கள் சங்கத்தை விட்டு வெளியே வந்து விட்டேன். நான் எல்லாவற்றையும் காண்கிறேன். ஆனால் காலம்தான் என்ன நடக்க வேண்டுமோ அதனை முழுதும் நடத்தி வைக்கும். நானல்ல. விதி வேலை செய்யத் தொடங்கி விட்டால் எல்லாவற்றையும் ஒரே நாளில் முடித்துவிடும்; அப்போது இந்தத் தலைவர்கள் வாயைப் பிளந்தபடி நிற்க வேண்டியதுதான். என்ன நடந்தது என்று அவர்களுக்குப் புரிந்துகொள்ளக்கூட முடியாது. உங்களுடைய கடமை, கருமத்தைப் புரிவதுதான்; பலனைக் குறித்த எண்ணங்களை ஆண்டவனுக்கு விட்டுவிடுங்கள்; உங்கள் முயற்சியில் வெற்றி கிடைக்க வேண்டுமென வாழ்த்துகிறேன்'' என்கிறார் காந்திஜி அக்கடிதத்தில். பலனைக் கருதாது இன்று கருமத்தில் இறங்கியுள்ள எல்லோருடைய வெற்றிக்காகவும் அடிகள் கூறிய வாழ்த்தாகவே இதனைக் கருதலாமல்லவா?

---

Nehru Discovered: by C. M. Srinivasan ("Satyameva Jayate"); Aiyar & Co., 2, Sadasivier St., Gopalapuram, Madras-6; Price Rs. 3.

# புகையும் பாறைகள்



வேலூரைத்தாண்டிச் சென்றுகொண்டிருந்தது 'டிலக்ஸ் பஸ்'. முன்புறம் டிரைவருக்கு அருகே தண்ணீர் நிரப்பி வைத்திருந்த 'எவர்ஸில்வர்' அடுக்கை அணுகித் தாகத்தைத் தணித்துக் கொண்டு திரும்பினேன்.

முதல் 'ஸீட்'டில் ஒரு வாரப் பத்திரிகையை வெறித்து நோக்கியவாறு அமர்ந்திருந்தது—பாண்டியன்தான்!

''சபாஷ், பாண்டியா!'' என்றேன் நான் உரக்க.

முப்பத்தைந்து தலைகள் நீண்டன, நெளிந்தன, ஒடிந்தன. பாண்டியனுடைய தலை மட்டும் நிமிரவேயில்லை. ''பத்திரிகை நடத்துகிறார்களாம், பத்திரிகை!'' என்று அவன் கடுகடுத்தான்.

அவனுக்குப் பக்கத்தில் காலியாக இருந்த இடத்தில் அமர்ந்தேன்.

''இதோ பாருடா! நேற்று வரை சினிமா ஸ்டார்கள் சோப்பும் பவுடரும்தான் விற்றுக் கொண்டிருந்தார்கள்; இன்று பத்திரிகையும் விற்க ஆரம்பித்து விட்டார்கள்! வெட்கக்கேடு!''

அவன் சுட்டிக் காட்டிய பக்கத்தில் அழகி ஒருத்தி அந்தப் பத்திரிகையின் பழைய பிரதி ஒன்றை மார்புறத் தழுவிய படியே வைக்கோல் போரில் ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டிருந்தாள்.

பாண்டியன் பத்திரிகையை எட்டு துண்டாகக் கிழித்து ஜன்னலுக்கு வெளியே எறிந்தான். காற்றில் காகிதத் துண்டுகள் வெகுதூரம் படபடத்துப் பறப்பதைப் பின்புறக் கண்ணாடி வழியே காண முடிந்தது.

நான் பெருமூச்சு விட்டேன். பாண்டியனுடைய இந்தப் போக்கு என்றைக்குத்தான் மாறுமோ? இப்படிப்பட்ட ஒருவன் எந்தப் பத்திரிகையில் எந்த முதலாளிக்குக் கீழ் வேலை பார்க்க முடியும்? என்றைக்கு அவன் நாலு காசு சேர்ப்பது? வாழ்நாள் முழுதும் ஒரு 'பிரீ லான்ஸ் ஜர்னலிஸ்ட்' ஆகவே விளங்க வேண்டியதுதான். ஒட்டுப் போட்ட ஜிப்பாவும் ஒட்டி உலர்ந்த வயிறுமாகக் காலத்தை ஓட்ட வேண்டியதுதான்!



மேட்டூரில் அலுமினியத் தொழிற்சாலை ஒன்றுக்கு அடிக்கல் நாட்டு விழா. அதில் கலந்து கொள்ளத்தான் அடியேனுள்பட நிருபர்கள் பலர் சென்றுகொண்டிருந்தோம். விழா நடைபெற்ற விவரங்களைக் கூறி உங்கள் பொறுமையைச்

குட்டிகிருஷ்ணன்



சோதிக்க நினைக்கவில்லை. ரசமான நிகழ்ச்சிகள் சில மறு நாள்தான் நடைபெற்றன!

சென்னை திரும்பும் வழியில் ஒகநக்கல்லைச் சுற்றிப் பார்த்து விட்டுப் போவதென்று ஏற்பாடு. மலைப்பாங்கான பிரதேசத்தில் சென்று கொண்டிருந்த பஸ் ஓரிடம் வந்ததும் நின்றது.

இறங்கினேன்.

கடல்போல் அகன்ற நதி தீரத்தில் அலையற்ற அமைதி குடி கொண்டிருந்தது. பாயுமிடமெல்லாம் பொன் கொழிக்கச் செய்யும் பரந்த மனப்பான்மையுடன் நம்பினோரைக் காக்கும் கடவுளாகக் கம்பீரமாகக் காட்சி தந்தாள் காவிரி அன்னை.

திரும்பினேன்.

தழைத்து வளர்ந்த மரங்களின் இலைகளால் வடிகட்டப்பட்டு வெளிவந்த கதிரொளி மையல் கொண்ட மேனிக்குத் தங்க மூலாம் பூச, களிப்பு மிக எய்தி, கள்ளச் சுழிப்புடன் கலகலவென்று முத்து நகை சிந்தி, நாயகனைக் காணப்போகும் ஆர்வத்தால் நாணமின்றி நடை பயின்றாள் காவிரிக் கன்னி.

நடந்தேன்.

அதட்டி உருட்டும் போது, தன்னைட ஒலிக்க ஓடி வந்து கால்களைப் பிஞ்சுக் கரங்களால் கட்டித் தழுவி மனத்தைப் பஞ்சாக்கிச் சிதற அடிக்கும் சிங்காரச் சிறு பெண்ணாய் என்னைச் சூழ்ந்தாள் காவேரி.

விரைந்தேன்.

பூமண்டலத்தையே பிளக்கும் நோக்கத்துடன் விழுவது போல அருவியாகி 'ஹோ' வென்ற பேரிரைச்சலுடன் நிலத்தை வேகமாகத் தாக்கிப் பின்னரும் சீற்றம் தணியாது வீறு கொண்டெழுந்து பாறைகள் மீது முட்டிமோதி நீர்த் திவலைகள் வெண் புகையாக மேலெழும்ப அதிலே வானவில்லின் வர்ண ஜாலம் காட்டி வீராங்கனையாகத் தோற்றமளித்தாள் சக்தி காவேரி. பிரமித்தேன்.

''மந்திரிகளின் பேச்சையும் புள்ளி விவரங்களையும் கேட்டுக் குழம்பிய மூளையை, அருவியில் தலையைக் காட்டித் தெளிவித்துக் கொண்டு வருகிறேன்'' என்றான் பாண்டியன்.

நானும் அவனைப் பின்தொடர்ந்து சென்றேன். பின்னர் எல்லாருமாக விருந்தினர் விடுதியை அடைந்தோம்.

இளைப்பாறிக் கொண்டிருக்கையில் திண்ணைப் புறத்திலிருந்து பாட்டொலி கேட்டது. பத்திரிகையாளர் பலர் அங்கு வரப் போவதை அறிந்து நாலு வார்த்தைகளாவது நம்மைப் பற்றி எழுத மாட்டார்களா என்ற நோக்கத்தில் தாங்களாகவே செய்து கொண்ட ஏற்பாடாக இருக்க வேண்டும்.

பாடகி பிரபலமடையக் கூடும் என்ற நம்பிக்கையைப் பாட்டு அளிக்கவில்லை. சாரீரம் சுகமில்லை. சுருதியும் சேரவில்லை. இரண்டொரு கீர்த்தனங்களும் சில சினிமாப் பாட்டுக்களுமாக அவள் மாறிமாறிப் பாடிக் கொண்டிருந்தாள்.

பச்சை பச்சையான வார்த்தைகளை அவள் லஜ்ஜை இல்லாமல் பாடியது எனக்கு அருவருப்பைத் தந்தது. திரைப்



படத்தில் சிலவற்றை நாம் மன்னிக்க முடி கிறது. அங்கே மானிடர்களின் நிழலைத்தான் காண்கிறோம். ஆனால் நேருக்கு நேராக ஒரு பெண் அமர்ந்து, 'மதனு, ராஜா, வாராயோ! இன்பம் தாராயோ!' என்பது போல ஏதே னும் உளறினால் எப்படி அதைச் சகித்துக் கொண்டிருப்பது?

முகத்தைச் சுளுக்கிச் செவிகளையும் பொத் திக் கொண்டேன். பாண்டியனுக்கோ கோபமே பொத்துக் கொண்டு வந்து விட்டது.

''நிறுத்து!'' என்று கூச்சல் போட்டான்.

ஏதாவது கலாட்டாவாகிவிடப் போகிறதே என்று எனக்குப் பயம். பாண்டியனை ஆசு வாசப்படுத்தும் நோக்கத்துடன் அவன் தோள் களைப் பற்றியபோது உணர்ச்சி மிகுதியில் அவன் தசை நார்கள் முறுக்கேறிப் பம்மிக் கொண்டிருப்பது தெரிந்தது.

அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து நின்ற அந்தப் பெண்—

பிரமாதமான அழகியல்லதான். இளம் வயது. உலகம் புரிந்தும் புரியாமலுமுள்ள ஒரு பருவம். உடலின் செழுமையைக் கண்டு ஏமாந்து விடாமல் வதனத்தை உன்னிப்பாகக் கவனித்தால் உலக அனுபவமில்லாதவள் என் பது தெளிவாகும். முதிர்ச்சி புலப்படாத அந்த முகத்தின் கதுப்புக் கன்னங்கள் 'குப்'பென்று கன்றிச் சிவந்துபோக அவள் விழிகளை உருட் டித் திருதிருவென்று அனைவரையும் நோக்கிய படி திண்ணை மீது நின்றாள்.

பின்னால் தம்பூராவை மீட்டிக் கொண்டிருந் தவர் சர்வ ஜாக்கிரதையாக அதைக் கீழே இறக்கி வைத்து விட்டுப் பரக்கப் பரக்கக் கழுத்தை மேல்துண்டால் துடைத்துக் கொண் டார். பாண்டியனுடைய முதுகிலே தட்டிக் கொடுத்து இப்பால் இழுத்துவர நான் பட்ட பாடு பெரும்பாடாகி விட்டது.

நவநாகரிகமாக அலங்கரித்துக் கொள்ள முயன்று அனுபவமின்மையால் அசல் பட்டிக் காடாக விளங்கிய அந்தப் பெண்ணை வெறித் துப் பார்த்தவாறே என் பின்னோடு வந்தான் பாண்டியன்.

''அவரவர்கள் இஷ்டம். எல்லாவற்றிலும் நீ ஏன் தலையிடுகிறாய்?'' என்றேன் நான் பொறுமையிழந்து.

''ஒருத்தி வீணுகக் கெட்டுப் போவதைப் பார்த்துக்கொண்டு குட்டிச் சுவராக நிற்கச் சொல்றியா?''

''இரண்டு சினிமாப் பாட்டுக்களைப் பாடி விட்டால் உடனே கெட்டுப் போய் விட்ட தாக அர்த்தமா?''

''அதன் ஆரம்பம்'' என்றான் பாண் டியன். ''உனக்கு ஒரு எழவும் புரியாது. எதிரே வைரக் கடுக்கனும் வழுக்கைத் தலையும் வெற்றிலைப் பெட்டியுமாக உட்கார்ந்திருக்கிற ஆசாமியை உனக்குத் தெரியுமா?''

''தெரியாது.''

''எனக்குத் தெரியும்!''

இந்தச் சமயத்தில் திண்ணையிலிருந்து பேச் சுக் குரல் கேட்டது. ''இந்தப் பயல்களுக்கு என்ன ஸார்? பட்டணத்து சபாக்களிலே 'ஓசி'யில் கச்சேரி கேட்டுவிட்டு வருகிறான்கள். நாட்டுப்புறத்துக்கு வந்து 'ஹா ஹா' எல் லாம் பாழாய்ப் போச்சு!' என்று குதிக்கிறான் கள். இந்தப் பக்கங்களில் தேங்காய் மூடிக் கச்சேரியானாலும் சரி, பத்து ரூபாய் தட் டிலே வைத்துக் கொடுப்பதானாலும் சரி, குழந்தை ஒரு கீர்த்தனை பாடுவதற்குள்ளே சபையிலே இருந்து 'சினிமாப் பாட்டு!' என்று கூக்குரல் எழுகிறது. ஜனங்களுடைய ரசிகத் தன்மை அப்படி இருந்தால் நாங்கள் என்ன செய்ய முடியும் சுவாமி? சினிமாப் பாட்டு தெரியாதவளும் ஒரு பாடகியா என்று கேட் கிறார்களே?''

''டேக்கிறுன; விட்டுத் தள்ளுங்களென் கிறேன்! இதோ பாருங்க; இந்த வட்டாரத்தி லேயே அஞ்சு பத்துக்குப் பாடிக்கிட்டிருந் தால் முன்னுக்கு வர முடியாது. பட்டணத் துக்குப் புறப்பட்டு வாங்க. ஒரு மாசத்துக்கு ஓட்டல்லே ரூம் எடுத்துக்கிடுங்க. சபா காரிய தரிசிகளை யெல்லாம் போய்ப் பாருங்க; பத்திரிகையாசிரியர்களை யெல்லாம் பேட்டி காணுங்க; கையிலே 'பாஸ்போர்ட் ஸைஸ் போட்டோ'க்கள் பத்து இருக்கட்டும். மேலே ஏதாவது வசதி தேவைன்னு நான் செய்து தரேன்....''

''போச்சு, போச்சு!'' என்றான் பாண் டியன் என்னிடம். ''வேறு வினையே வேண் டாம்!'' என்றான்.

பஸ் புறப்படுவதற்குத் தயார் என்று அறி விக்கும் வகையில் ஹாரனை அடித்தார் டிரைவர்.

''தங்கமான மனசு உங்களுக்கு, க்ஷேமமா யிருக்கணும்'' என்று பெண்ணின் தகப்பனார் வழுக்கைத் தலையனை வாழ்த்தியதைக் கேட் டுக் கொண்டே பஸ்ஸை நோக்கி நடந்தோம்.

'டிலக்ஸ் பஸ்' நகர்ந்தது.

பாண்டியன் விருந்தினர் விடுதியின் திண் ணைப் பக்கமாகக் கண்ணோட்டம் செலுத் தினான். அதனை எதிர்பார்த்தே, அவன் பார்வையில் படும்படியாகத் தூணைப் பிடித் துக் கொண்டு நின்று கொண்டிருந்தாள் அந்தப் பெண். அவள் தகப்பனாரும் அவர் நண்பரும் அந்யோந்யமாகத் தோள்மேல் கைபோட்டு இழைந்தது பாண்டியனுடைய கண்டத்திலிருந்து உருமலை வரவழைத்தது.

''பாயும் வேகத்தில் ஆற்று நீர் பாறைகளைத் தாக்கும் போது வெண்மையான மேகச் சுருள் லாக ஆள் உயரத்துக்கு நீர்த் துளிகள் சிதறுவ தைக் கவனித்தீர்களா? இந்த அபூர்வக் காட்சிதான் இந்த இடத்துக்கு ஒகேனக்கல் என்று பெயர் வரக் காரணம். கன்னடத்தில் ஒகேனக்கல் என்றால் புகையும் பாறைகள் என்று அர்த்தம்!'' பின்னும் யாரோ வியாக்யானம் செய்து கொண்டிருந்தார்.

புகையும் பாறைகளை விட்டுப் பிரிந்து போய்க் கொண்டிருந்தாலும் புகையும் நெஞ்சமொன்று என்னருகிலேயே இருப்பதை உணர்ந்தேன்.

இது நடந்து இரண்டு மாதங்களுக்கு மேலாகி விட்டன. பாண்டியன் ஏதோ ஒரு சினிமாவுக்குக் கதை, வசனம் எழுதிக் கொண் டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். சினிமாப் பாட்டு பாடியதற்காக அந்தப் பெண்ணிடம் அவன் கொண்ட கோபம் நினைவுக்கு வந்தது.

அடுத்தாற்போல் ஏதோ ஒரு டீபார்ட்டியில் அவனைச் சந்திக்க நேர்ந்தபோது சிரித்துக் கொண்டே இதைப்பற்றிக் கேட்டேன். அவன் என்னைத் தனியே அழைத்துப் போய்க் கூறிய விவரங்கள் என்னைப் பேராச்சர்யத்தில் ஆழ்த்தின.

இன்று நடந்து நாளை மறந்துவிட வேண்டியதுதான் என்று நான் கருதிய சம்பவமே பாண்டியனுடைய மனத்தில் அழுத்தமாகப் பதிந்து விட்டிருப்பதை உணர்ந்தேன். திரைக் கதை எழுத ஒப்புக்கொண்டதுடன் அதன் வெளிப்புறக் காட்சிகளை ஓகநக்கல்லிலேதான் எடுக்க வேண்டும் என்று கூறிச் சூழ்நிலையை நேரில் ஆராய்ந்து வரப் படாதிபதியின் செலவில் மறுபடியும் அங்கே போனானாம்.

''சரோஜா பாடிக் கொண்டிருந்தபோது நான் குறுக்கிட்டதில் அவளுக்கு வருத்தமில்லையடா; அவள் அதை வரவேற்றாள்!'' என்றான் பாண்டியன்.

''அப்படியென்று அவள் உன்னிடம் சொன்னாளா, என்ன?''

பாண்டியனுடைய முகம் சட்டென்று வாடியது. ''இல்லை, அவளைச் சந்திக்கவேயில்லை நான். ஆனாலும் அவள் மனம் எனக்குத் தெரியும்!''

''ஏதேது! ஒரு மாதிரியாகப் பேசுகிறாயே?'' கண் சிமிட்டிக் கேட்டேன் நான்.

''அக்கம் பக்கத்தில் விசாரித்ததில் சரோஜாவும் அவள் தகப்பனாரும் சென்னைக்குத்தான் வந்திருப்பதாகத் தெரிந்தது. அவர்களைத் தான்தேடிக்கொண்டிருக்கிறேன் இப்போது.''

''அந்த வழுக்கைத் தலையனிடம் போய்க் கேட்பதுதானே?''

''அவனைப் பார்க்காமல் இருப்பேனா? அந்த அயோக்கியனை நம்பித்தான் அவர்கள் புறப்பட்டு வந்திருக்கிறார்கள். நான் கேள்வி மேல் கேள்வி போட்டுக் குடைய ஆரம்பித்ததும் அவன் பயந்து போய்த் தனக்கு அவர்களைப் பற்றி ஒன்றுமே தெரியாதென்று ஒரே போடாகப் போட்டுவிட்டான். ஏதோ பேச்சு வாக்கில் சொல்லி வைத்தானும் சென்னைக்கு வருமாறு. தக்கசமயத்தில் விழித்துக் கொண்டு அவனிடமிருந்து அவர்கள் தப்பிச் சென்றிருக்கலாம்.''

''என்னவோ அப்பா அந்தப் பெண்ணைப் பற்றி நீ இவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்வது எனக்குச் சம்மதமில்லை'' என்றேன்.

''அனாவசியமாகத்தான் படுகிறது.''

''நமக்கு எதற்கு வம்பு என்று எதிலுமே பட்டுக் கொள்ளாமல் ஒதுங்குபவன் ஒன்னாம் நம்பர் கோழை'' என்று சூடு கொடுத்தான் பாண்டியன். ''சரி யென்று தீர்மானித்த பிறகு செயலாற்றத் துணிவு வேண்டும்.''

டீ பார்ட்டி முடிந்து சொற்பொழிவுகள் ஆரம்பமாயின. 'ஷார்ட் ஹாண்ட்' நோட்டுப் புத்தகத்தையும் பென்சிலையும் கையில் எடுத்தேன்.

சுமார் ஒரு மாதம் கழிந்திருக்கும்.

காரியாலயத்துக்கு டெலிபோன் செய்தான் பாண்டியன். ''கண்டு பிடித்து விட்டேன்'' என்று கிறீச்சிட்டான்.

''எதை?'' என்றேன் வியப்புடன்.



பிலிப்ஸ் இந்தியா ஸ்தாபனத்தின் விற்பனை மானேஜர் திரு வி. ஆர். லக்ஷ்மிரதன் அவர்களின் புதல்வி சௌ. சித்ராவுக்கும் திரு சுப்பிரமணியம் அவர்களுக்கும் சென்னையில் அக்டோபர் 19ந் தேதி விமரிசையாக விவாகம் நடந்தேறியது. சென்னை நகரப் பிரமுகர்களும், தொழிலதிபர்களும் இந்தத் திருமணத்துக்கு விஜயம் செய்து சிறப்பித்தனர்.

---

''உன் மூளையை! போடா, போ! சரோஜாவைத்தானடா சொல்கிறேன்!''

''பலே! பலே! எங்கே இருக்கிறாள்?''

''வேறு எங்கே இருப்பாள்? எல்லாம் வீட்டிலேதான்!''

''என்ன? என்ன?''

''ஏன், தம்பி! வாயைப் பிளந்து அதிசயப்படுகிறாய்? வாயேன் வீட்டுக்குச் சாயங்காலமாக. சாவகாசமாகப் பேசலாம்.''

''அவசியம், கண்டிப்பாக, நிச்சயமாக வருகிறேன்'' என்றேன்.

பாண்டியனும் அவன் தாயாரும் இரண்டோ மூன்றோ அறைகள் கொண்ட ஒரு போர்ஷனில் குடியிருந்தார்கள். இப்போது திரைப்படத் தொழிலில் புகுந்து கையில் கொஞ்சம் பணம் புரளுவதால் விரைவிலேயே வேறு நல்ல இடத்துக்குப் போனாலும் போகலாம்.

முன்னறையில் முன்பு எப்போதோ ஏலத்தில் வாங்கிய அதே மேஜை, கை ஒடிந்த நாற்காலி இவற்றோடு போராடிக் கொண்டிருந்தான் பாண்டியன். எழுதிக் கொண்டிருந்தவன் என்னைக் கண்டதும் ''வா தம்பி'' என்றபடியே அன்புடன் கையைப் பற்றி அழைத்துப் போய் மூட்டைப் பூச்சிகள் நிறைய வாசம் செய்யும் பிரம்பு நாற்காலியில் உட்கார வைத்தான்.

அந்த உபத்திரவத்தைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் அமர்ந்திருக்கச் செய்தது அவன் கூறிய கதை.

சினிமாவுக்கு எழுத ஒப்புக் கொண்ட பாண்டியனிடம் அவசரம் என்றும் ஒரே மாதத்தில் கதையைப் பூர்த்தி செய்து தரவேண்டும் என்றும் நிபந்தனை விதித்தார் படாதிபதி.

'சரி' யென்று ஒப்புக் கொண்ட பாண்டியனால் அந்த இருட் குகையில் அடைந்து கிடந்து

எழுத முடியவில்லை. அதோடு, கல்யாணமாகி அவனுக்கென்று குழந்தைகள் இல்லை என்றும் அக்கம்பக்கத்து வீட்டிலுள்ள வானரங்களெல்லாம் வாலைச் சுருட்டிக் கொண்டு இருக்கின்றனவா? பாடாய்ப் படுத்தி வைத்தன பாண்டியனை.

ஓட்டலில் அறை எடுத்துக் கொண்டு ஒரு மாத காலம் பகல் பொழுதெல்லாம் தங்கி எழுதிவிட்டு இரவு மட்டும் வீடு திரும்புவது என்று திட்டமிட்டான் பாண்டியன். அதற்காகும் செலவைத் தாம் ஏற்றுக் கொள்வதாய்ப் படாதிபதியும் வாக்களித்தார்.

பெட்டி படுக்கை ஏதுமின்றிச் சிறிய தோல் பையை மட்டும் கட்கத்தில் இடுக்கிக் கொண்டு வந்து ஒரு மாத காலத்துக்கு அறை வேண்டும் என்று கேட்ட பாண்டியனை 'ஓஷன் வைட் லாட்ஜ்' மானேஜர் ஒரு மாதிரியாகப் பார்த்தார். நோட்டுப் புத்தகத்தை எடுத்துக் கொடுத்துப் பெயரும் விலாசமும் எழுதச் சொன்னார். சென்னையிலேயே வசிப்பவன் தான் என்று கண்டு கொண்டதும் பொருள் பொதிந்த புன்னகை உதிர்த்தார். அதை யொன்றும் கவனியாமல் சாவியை வாங்கிக் கொண்டு தன் அறைக்குப் போய்ச் சேர்ந்தான் பாண்டியன்.

சற்று நேரத்தில் ஓட்டல் ஆள் ஒருவன் கண்ணாடி ஜாடியில் குடிக்க நீர் எடுத்து வந்தான். மேஜை ஓரமாக அதை வைத்துவிட்டுத் தயங்கி நின்றான்.

நீட்டிய கரத்திலே இருபது காசுகளை வைத்த பிறகும் அவன் நகரவில்லை.

''நீங்கள் தப்பாக எடுத்துக்கிடப்படாது. எட்டாம் நம்பர் அறையிலே தங்கியிருக்காங்க. அவங்க கேட்கச் சொன்னதன் பேரிலேதான் கேட்கிறேன். அந்தப் பெண்ணும் அவருக்கு உறவு முறைதானும்.......''

''வெளியே போ!'' என்றான் பாண்டியன்.

பிரமித்துப் போனான் அந்த ஆள். அவனுக்கு இது புது அனுபவம். பல்லைக் காட்டி இளிப்பவர்களைத்தான் அவனுக்குப் பழக்கம்.

''போடா, வெளியே!''

தன்னைத் தவறாக ஒருவன் எடை போட இடம் அளித்து விட்ட காரணத்தால் சுய வெறுப்பு மிகுந்தது பாண்டியனுடைய இதயத்தினுள்ளே. இரண்டு மணி நேரப் போராட்டத்துக்குப் பிறகும் கதையில் இரண்டு வார்த்தைகள் உருவாகவில்லை. கதவைப் படாரென்று அறைந்து சாத்திப் பூட்டிக் கொண்டு வீடு திரும்பினான்.

மறுபடியும் அந்தப் பக்கமே எட்டிப் பாராமல் இருந்திருக்கலாம் அவன். ஆனால் பாண்டியன் தோல்வியை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. 'உறுதியற்ற நெஞ்சினனல்ல நான். உலகத்தின் மட்டரகமான ஆசாபாசங்கள் என் உள்ளத்தை அலைக்கழிக்க விடமாட்டேன். அதே சூழ்நிலையில் சிந்தனையை ஒருமுகப் படுத்தி என்னால் வெற்றி காணமுடியும். என் தூய தன்மையை அந்த ஓட்டல்காரர்கள் உணரட்டும்; உணர்ந்து வருந்தட்டும்; வருந்தித் திருந்தட்டும்!'

மானேஜரையும் அவன் அறைக்கு வந்து ஏதோ உளறிய அந்த ஆளையும் அங்கே காணவில்லை. 'தூரத்தில் என் தலையைக் கண்டதுமே பயந்து ஒளிந்து கொண்டார்கள் போலும்!' அவர்களுக்குப் பாடம் கற்பித்து விட்ட பெருமிதம் தலைகாட்டத் தொடங்கியது பாண்டியனுடைய நெஞ்சுக்குள்ளே.

'எட்டாம் நம்பர் அறையாம், எட்டாம் நம்பர் அறை! அது எங்கே இருக்கும்? இதே மாடியில்தானா அல்லது இரண்டாவது மாடியிலா? எங்கே இருந்தால் என்ன? அதற்கு மிக அருகில் போய் நின்றால்கூட என் மன உறுதியைக் கடுகளவும் குறைக்க முடியாது!'

திடீரென்று அவனுக்கு இந்த எண்ணத்தைத் தனக்குத் தானே உண்மை என்று நிரூபித்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது. விடுவிடு வென்று மாடிப் படிகளில் ஏறினான். அறையின் எண்களைப் படித்துக் கொண்டே நடந்தான். ''பதினொன்று, பத்து, ஒன்பது, எட்டு.......''

நின்றான் பாண்டியன்.

உள்ளே இருந்து மெல்லிய பேச்சுக் குரல் கேட்டது. கதவு தாளிட்டிருந்தது. கதவா அது? பாபம் என்னும் கொடிய விலங்கு! சிறுவர் கதைகளில் வரும் பயங்கர மிருகம். அதன் தீ நாக்குகள் அவனைச் சூழ்ந்தன; சுட்டுப் பொசுக்கவில்லை. கோரைப் பற்கள் அவனைக் கண்டதுண்டம் செய்து விடவில்லை; கூரிய நகங்கள் ஒரு சிறிய கீறலைக் கூட உண்டாக்கவில்லை.

இறுமாப்பு அவன் இதயத்தை நிறைத்தது. 'பிழைத்துப் போ!' என்று அந்தக் கொடிய விலங்கைப் பெருந்தன்மையுடன் ஒதுக்கி விட்டுத் தன் அறைக்குத் திரும்பினான். பெருமிதச் செருக்கில் நிமிர்ந்து உட்கார்ந்து எழுதினான், பக்கம் பக்கமாக.

மூன்றாம் நாள் அவன் தன் அறைக் கதவைத் திறக்கையில், சற்றுத் தூரத்தில் மாடிப் படிகளருகே கருநாகப் பின்னலொன்றுஅசைந்தாடுவது ஓரக் கண்களுக்குத் தட்டுப்பட்டது. சட்டென்று திரும்பினான் பாண்டியன்.

அவள்தான்; அவளேதான்!

ஒரே ஒருகணம் சரோஜாவின் கண்கள் வியப்பினால் விரிந்து அவனை விழுங்கின. மௌனமான இதழ்த் துடிப்பிலே அவள் இதயம் பேசியது. அடுத்து வெட்கம் அவளைச் சூழ மாடிப் படிகளில் விருட்டென்று ஏறிச் சென்று விட்டாள்.

செருப்பைக் கழற்றி விட்டுப் பாண்டியன் ஓசைப்படாமல் பாய்ந்தான். அவனுக்கு ஒரே எண்ணம், ஒரே சிந்தனை! கடவுளே என்னைச் சோதிக்காதே! அப்படி இருக்கக் கூடாது; கூடவே கூடாது!

கடைசிப் படியில் காலடி எடுத்து வைத்து, திருப்பத்தில் சுவர் ஓரமாக ஒண்டி நின்ற படியே கழுத்தை மட்டும் நீட்டினான். அவள் நுழைந்து சென்றது —

எட்டாம் நம்பர் அறைதான்!

ஊழிக் காலமே வந்து விட்டது போல, பாண்டியனுக்கெதிரே உலகமே தகர்ந்து, தூள் தூளாகிக் கொண்டிருந்தது. தள்ளாடித் தள்ளாடித் தன் அறைக்கு வந்து சேர்ந்தான். மேஜையில் கரங்களைஊன்றி, முகத்தை அவற்றில் புதைத்து விம்மி விம்மி அழுதான்.

நீண்ட நேரம் கழிந்து; நெஞ்சம் வரண்டு கண்ணீரும் வற்றிவிட்ட பிறகு, எழுந்தான்.

"...சந்தேகமேயில்லை, இது பின்னி துணி தான்!.."

"அவர்களின் லஸ்டலின் — அருமையான ஷர்ட்டிங், கவர்ச்சியான தோற்றம், மென்மை, நீடித்த உழைப்பு இவை நிறைந்தது .. வேறு என்ன வேண்டும்? பல வருஷங்களாக நான் இதைத் தான் அணிந்து வருகிறேன். என்னைக் கேட்டால் பின்னி துணிகளை விடச் சிறந்தது வேறு கிடையாது."

# பின்னியின்

# லஸ்டலின்




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணப்படும் அனுமதி பெற்ற கடைகளிலிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்கவும்.

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்

உரிமையாளர்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

JWT/BC-L-1232a

இப்போது அவனுக்குப் பச்சாத்தாபம் இல்லை, வருத்தமில்லை, வெறுப்பில்லை, கோபமுமில்லை—

வெறி; மிருகத்தனமான வெறி.

எட்டாம் நம்பர் அறையின் கதவைப் படபடவென்று அறைந்தான் பாண்டியன். அது திறந்து கொள்ள வாசலை அலங்கரித்தாள் சரோஜா. பண்புக் குறைவாகக் கதவைத் தட்டியவர் மீது பொங்கிய சினம் பாண்டியனைக் கண்டதும் மகிழ்ச்சியாக மாறியது.

''வாருங்கள், அப்பா கடைத் தெருவுக்குப் போயிருக்கிறார். வருகிற நேரம்தான்.''

அவள் நெஞ்சில் கரம் பதித்து முரட்டுத்தனமாய்ப் பின்னால் தள்ளினான் பாண்டியன். தானும் உள்ளே நுழைந்தான்.

அவன் கண்களில் தாண்டவமாடியது என்னவென்று அவளுக்கு விளங்கவில்லை.

''சொல்லு!'' என்று பதறினான் பாண்டியன். ''எவ்வளவு ரூபாய் தேவை, சொல்லு'' அவன் குரல் நடுங்கியது. திரைப்படத்துக்கு வாங்கிய அட்வான்ஸ் தொகை நோட்டுக்களாக அவன் விரல்களுக்கிடையே சிக்கிக் கசங்கிக் கொண்டிருந்தன.

அவளுக்குப் புரியவில்லை.

புரிய வைத்தான் பாண்டியன்.

புரிந்து கொண்டதும் கணப் பொழுது கூடத் தயங்கவில்லை சரோஜா. நளினமான அந்தக் கரம் சாட்டையைச் சொடுக்கியது போல மின்னல் வேகத்தில் நெளிந்தது. பாண்டியனுடைய கன்னத்தைச் சுளீரென்று தாக்கியது. அடுத்துத் தார்க் குச்சியாக மாறி அவள் நகங்கள் அவன் முகத்தில் பதிந்து குத்திக் கிளறின.

''கயவர்கள்!'' என்று காறி உமிழ்ந்தாள் சரோஜா. ''எல்லா ஆண்களும் ஒரே மாதிரிதான்; எல்லாரும் கயவர்கள்தான்!''

அவமானம் தாங்காமல் அங்கிருந்து தலை தெறிக்க ஓடினான் பாண்டியன்.

மறு நாள் வெட்கத்தை விட்டு அவளிடம் மன்னிப்புக் கோர அவன் முற்பட்ட போது ''நீங்கள் அப்படி நடந்து கொள்வீர்கள் என்று நான் நினைக்கவே இல்லை'' என்றாள் சரோஜா. 'நீங்கள்' என்ற சொல்லில் அவள் அழுத்தம் கொடுத்து உச்சரித்ததில் பாண்டியனிடம் அவள் கொண்டிருந்த காதல், வைத்த நம்பிக்கை, ஏற்பட்ட ஏமாற்றம் எல்லாம் தொனித்தன.

இந்தக் கட்டத்தில் பாண்டியன் கதையை நிறுத்தி விட்டான்.

உள் அறையிலிருந்து வெளிப்பட்ட சரோஜா இரண்டு டம்ளர் காப்பியை வைத்து விட்டுப் போனாள்.

அதே சமயம், ''மாப்பிள்ளைத் தோழரும் வந்தாச்சு போலிருக்கே'' என்ற குரல் கேட்டது. திரும்பினேன். சரோஜாவின் அப்பா குடையை மடக்கிக் கொண்டிருந்தார். ''கல்யாண அழைப்பிதழை அச்சுக்குக் கொடுத்து விட்டு வந்தேன். வழியில் மழை பிடித்துக் கொண்டது'' என்றார்.

எனக்கு என்னவோ போலிருந்தது. நிலை கொள்ளாமல் தவித்தேன். பெரியவர் அப்பால் போன பிறகு, ''என்னதான் இருந்தாலும் நீ இப்படி அவசரப்பட்டிருக்க வேண்டாம், பாண்டியா!'' என்றேன்.

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

''ரொம்பவும் நம்பிக்கை வைத்திருந்த உன்னிடம் அவளுக்கு ஏற்பட்ட ஏமாற்றம், அடியாக உன் கன்னத்தில் விழுந்தது. அது உன்னை ஒரு பாபச் செயலிலிருந்து காத்தது.''

''ஆமாம்.''

''அதற்கு நன்றி தெரிவிக்கும் விதத்தில் நீ அவளுக்கு வாழ்க்கைத் துணைவனாகத் துணிந்து விட்டாய். ஆனால் அவள் அந்த எட்டாம் நம்பர் அறையில் தங்கி இருந்ததும் அந்த அறையிலிருப்போரைப் பற்றி ஓட்டல் ஆள் மூலம் நீ கேள்விப்பட்டதும் மறுக்க முடியாத உண்மைகள்தானே?''

''அப்பாடா!'' என்று பெருமூச்சு விட்டான் பாண்டியன். ''தம்பீ! எங்கே நீ இந்தக் கேள்வியைப் போடாமல் இருந்து விடுவாயோ என்று பயந்து கொண்டே இருந்தேன். நீயும் என்னைப் போலவே ஏமாந்தது எனக்கு மன நிம்மதியளிக்கிறது. என் நிலையில் இருந்த எவனும் அதே விதத்தில் தப்பர்த்தம் செய்து கொள்வான் என்ற எண்ணம் நொந்து போன உள்ளத்துக்குச் சாந்தி தருகிறது.''

''புரியும்படி சொல், பாண்டியா!''

''தூரத்தில் நான் வருவதைப் பார்த்ததுமே ஓட்டல் மானேஜரும் அந்த ஆளும் தலைமறைவாகப் போய்விட்டதாக எண்ணி இறுமாப்படைந்தேனல்லவா? அது தவறு.''

''பின்னே என்ன நடந்தது?''

''சரோஜாவிடம் அடி வாங்கிக் கொண்டு திரும்பிய அன்று மாலை இரண்டு போலீஸ்காரரும் ஒரு இன்ஸ்பெக்டரும் வீடு தேடி வந்தார்கள். ஓஷன் ஸைட் லாட்ஜ் ரிஜிஸ்தர் புத்தகத்தில் என் பெயரும் விலாசமும் இருந்தனவாம். சாட்சி சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்.''

''சாட்சியமா, எதற்கு?''

'' 'முந்தா நாளிரவு அந்த ஓட்டல் மானேஜரையும் வேறு சிலரையும் கைது செய்தோம். அவர்கள் நடத்தை குறித்துச் சாட்சி கூற வேண்டும்' என்றார்கள்.''

நான் குபீரென்று சிரித்தேன். ''கம்பீ என்னுபவர் காலி செய்த அதே எட்டாம் நம்பர் அறைக்கு சரோஜாவும் அவள் தகப்பனாரும் வந்து சேர்ந்தார்களாக்கும்!''

''ஆமாம், தம்பீ!'' என்றான் பாண்டியன் பரிதாபமாக. ''மறுநாள் முதல் ஓட்டல் நிர்வாகத்தை முதலாளி தாமே சொந்தப் பொறுப்பேற்றுக் கவனிக்கத் தொடங்கி இருக்கிறார். மானம் போகாதிருக்க இரவு நடந்தனவற்றை யெல்லாம் நன்றாக மூடி மறைத்துமிருக்கிறார். நான் ஏமாந்தேன்.''

''ஐயோ பாவம்!'' என்று கூறிச் சூள் கொட்டினேன் நான் பரிகாசமாக. ''எப்படியோ உன் மனப் புகைச்சலெல்லாம் நீங்கியதா இல்லையோ?''

''இன்னும் இரண்டு நாளில் ஒகநக்கல் போகிறோம். அந்தப் புகையும் பாறைகளுக்குப் பக்கத்திலிருந்து எழுதினால் கதை, வசனமெல்லாம் 'ஜிலு ஜிலு'வென்று அமைந்து விடும் பார்! கல்யாணமும் அங்கேதான். கண்டிப்பாக வந்துவிடு!'' என்றான் அவன்.

''அப்பனே! சரோஜா கொடுத்த அடி உன் ஆணவத்துக்கு விழுந்த அடியாக நினைத்துக் கொள்!'' என்று போகிற போக்கில் ஒரு குட்டு கொடுத்தேன் நண்பன் பாண்டியனுக்கு.



# பணி மகளிர்க்குப் புது விடுதி

வசுமதி ராமசாமி

இருபதாண்டுகளுக்கு முன்பு மருத்துவ மனைகளில் திடீரென்று மருத்துவப் பணி மகளிர் (நர்ஸ்) பற்றாக்குறை ஏற்பட்டது. நோயாளிகள் எண்ணிக்கைக்கு ஏற்றபடி பெண் நர்ஸ்கள் இல்லாததனால் ஆண் நர்ஸ்களையும் நியமிக்கலாமென்று டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் அவர்கள் யோசனை தெரிவித்தார்கள். ஒரு பிரபல பத்திரிகையில் ஆண் நர்ஸ்கள் கையில் தட்டுக்களை ஏந்தி வருவது போலவும், எழுந்திருக்க முடியாமல் படுத்திருக்கும் நோயாளிகள் அவர்களைக் கண்டதும் அலறி அடித்துக் கொண்டு ஓடுவது போலவும் கேலிச் சித்திரம் போடப்பட்டிருந்தது. இது அந்தக் காலம்.

இன்று அது நினைவுக்கு வருகிறது. நிறைய மருத்துவ மனைகள் கட்டி வருகிறோம். விஞ்ஞானம் வளர்ந்து வருகிறது. ஆயுதச் சிகிச்சை, ரேடியக் கதிர்ச் சிகிச்சை என எவ்வளவோ முன்னேற்றம் ஏற்பட்டுள்ளன. வியாதிக் கிருமிகளைக் கொன்று, நோயாளிகளைக் குணமாக்கப் புது மருந்துகளையும் பல மேதைகள் கண்டு பிடித்து வருகிறார்கள். ஆனால் இவை யெல்லாம் செயற்கை முறையில் நோயாளிகளின் உடல் நிலையை மட்டும் குணப்படுத்தும் சாதனங்களே. இயற்கையான முறையில் நோயாளிகள் மன நிலையும் ஆரோக்கியம் பெற மருத்துவப் பணிமகளிரின் சேவைதான் இன்றி யமையாதது.

இன்று மருத்துவமனைகள் ஏராளமாக இருக்கின்றன. ஆனால், பணிமகளிர் பற்றாக்குறை அதிகரித்துக் கொண்டிருக்கிறது. இப் பணிமகளிர் பற்றாக்குறையை ஓரளவு குறைக்க ஆந்திர மஹிளாசபா முன் வந்திருப்பது பாராட்டத்தக்கது. அடையாறு பிரிட்ஜ் ரோடிலுள்ள பிரசவ ஆஸ்பத்திரிக் கட்டிடத்தை யொட்டி நர்ஸ்களுக்கென ஒரு ஹாஸ்டல் அக்டோபர் 21-ந் தேதி ஆரம்பிக்கப்பட்டது. மேற்கு வங்கப் பிரதம மந்திரி திரு பி. ஸி. ராய் அவர்கள் இந்தக் கட்டிடத்தின் கல் நாட்டு விழாவுக்காக வந்திருந்தார்கள். ஆம்; முற்றிலும் உண்மை. ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகு இந்த ஒரு விழாவுக்கெனவே திரு பி. ஸி. ராய் வந்து விட்டுச் சிறப்பித்துச் சென்றார். இந்த விழாவுக்குத் துணை வேந்தர் திரு லட்சுமணசுவாமி முதலியாரவர்கள் தலைமை தாங்கினார்கள்.

ஸ்ரீமதி துர்க்காபாய் தேஷ்முக் அவர்கள் தம்முடைய வரவேற்புரையில், ஆந்திர மஹிளா சபையின் தோற்றம், வளர்ச்சி, சபை ஆற்றும் பலவிதமான பணிகள் எல்லாவற்றையும் விவரமாக எடுத்துச் சொன்னார். ஸ்ரீமதி துர்க்காபாய் தேஷ்முக் பேச ஆரம்பித்தால், கேட்டுக் கொண்டிருக்கும் சபையோர் இப்படி அப்படித் திரும்ப முடியாது. திறந்த வாயை மூட மறந்து விடுவோம். கோவையாகப் புள்ளி விவரங்களுடன், திருத்தமாக, உணர்ச்சியுடன், மொழியில் தனிப்பட்ட சக்தியுடன் மணிக் கணக்கில் தங்கு தடையின்றிப் பேசுவார்கள். பிரசவ ஆஸ்பத்திரிக் கட்டிடம் ஏற்பட்ட வரலாறு, அரசாங்கத்தாரிடம் எந்தத் தேதியில் எவ்வளவு மான்யம் கிடைத்தது என்பதையெல்லாம் தெளிவாகக் குறிப்பிட்டார். மேலும், வளரும் பாரதத்துக்கு நர்ஸ்கள் எவ்வளவு முக்கியமானவர்கள் என்பதை அழகாக எடுத்துக் கூறினார். அவர்களுக்குப் பயிற்சி நிலையம் எவ்வளவு அவசியம் என்பதையும், அவர்கள் களைப்பாறவும், தங்கவும் சௌகரியங்கள் கொண்ட விடுதிகளின் முக்கியத்துவத்தைப் பற்றியும் சொன்னார்கள். இந்தக் கட்டிடத்துக்கு அரசாங்கம் 1,60,000 ரூபாய் மான்யம் அளித்திருப்பதையும் தெரிவித்தார்கள்.

சென்னை ராஜ்யத்தில் பெண்கள் சமூக நலத்துக்குப் பாடுபடுவதை திரு பி. ஸி. ராய் அவர்கள் பாராட்டினார். வங்கத்தில் ஆண்களோடு பெண்களும் பங்கெடுத்துக் கொண்டு உழைக்க முன்வரவில்லை என்று குறைப்பட்டார்.

'நர்ஸ் வேலை செய்வது மிகச் சிறந்த பணி. நல்ல முறையில் பணியாற்ற அவர்களுக்கு இடவசதி அவசியம்' என்ற கருத்தைத் தெரிவித்தார் தலைவர் திரு ஏ. எல். முதலியார்.

பணிமகளிர்க்கென ஏற்பட்டிருக்கும் இந்த விடுதியைப் பயன்படுத்திக் கொண்டு, சமூக சேவை செய்யப் பல மகளிர்கள் முன்வர இப்பொழுது அரிய தொரு வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. தேச நலனையும் தேக நலனையும் பாதுகாக்கும் பொறுப்பை அவர்கள் ஏற்றுக் கொள்வார்களானால், அதுவே நாட்டுக்குச் செய்யும் பெரிய தொண்டாகும்.

ஸ்ரீமதி கிருஷ்ணாராவ் வந்தனோபசாரம் சொன்னார். சில கலை நிகழ்ச்சிகளுடன் கூட்டம் இனிது முடிந்தது.

# அநுமகரத்வஜா

ஷட்குண மகரத்வஜா
சக்தி வாய்ந்தது



சுத்தமான ஷட்குணத் தங்கத் தினல் மிகவும் சிறிய அளவில் ஆனல் பிரமாத சக்தி வாய்ந்த தாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத் திரை வடிவம் ஆக்கப்பட்டிருக் கிறது. உபயோகிப்பதற்கு மிக வும் சுலபம். மற்ற மகரத்வஜங் களை விடச் சக்தி வாய்ந்தது.

O★O

14 மாத்திரைகள்
ஒரு புட்டியில் அடங்கினது
(7 முழு அளவுகள்)

O★O

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா - பம்பாய் - கானபூர்

*சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள் :*

ஆர். எல். கௌடர் & கம்பெனி
59 பந்தர் தெரு :: சென்னை -1

*ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள் :*

சத்ய நாராயணு பார்மஸி
குமரி தெரு. விஜயவாடா -1 & விஜயநகரம்

---

மக்கள்
பலரும்
விரும்புவது

# தங்கபஸ்பம் புகையிலை

M/s. N. ஆறுமுகம் பிள்ளை
காரைக்குடி

BS

# வாழும் வர்ணனைகள்

## 10. ஜெயகாந்தன்

### ஹார்பர் சங்கு

மதராஸ் ஹார்பருக்கு எதிரே, ஓர் ஏற்றுமதி இறக்குமதிக் கம்பெனியின் மாடிப்படிக்குக் கீழே உள்ள வளைவு தான் அந்தக் கிழவியின் வாசஸ்தலம். படிகளின் மேல் யாராவது ஏறிச் சென்றால் தலையில் மிதிப்பது போல் சப்தம் கேட்கும். அவள் அதையெல்லாம் பொருட்படுத்துவது இல்லை. அவளுக்கு அந்தச் சப்தமெல்லாம் கேட்காது. அவள் காதுகளுக்கு ஒரே ஒலிதான் பரிச்சயம் உண்டு. அதை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா?

'பம்...பம்ப்ஹு'... அதுதான் கப்பலின் சங்கொலி! — கிட்டத்தட்ட ஒரு சிங்கத்தின் கர்ஜனைபோல் குமுறிக் கிளம்பிக் காற்றில் கலந்து விம்மி விகசிக்கும் அந்த லயமற்ற, குறுகிய, அழுத்தலான- ஒரே அடியில் தலை சிதறி உயிரிழக்கும் ஒரு மிருகத்தின் கடைசிப் பிளிறலைப் போன்ற அந்தச் சப்தம்தான் அவளுடைய செவிகளுக்குப் பரிச்சயமானது! அவள் அங்கேயே வாழ்வதால் அந்தக் கடூரமான ஓசை அவள் செவிகளுக்குப் பழக்கப்பட்டு விட்டது என்பதல்ல; அந்த ஓசையைக் கேட்டுக் கொண்டே இருப்பதற்குத்தான் அவள் வேறு எங்கும் போகாமல் அங்கேயே இருக்கிறாள்.

'பம்...பம்ப்ஹு...'... அந்தச் சப்தத்தைக் கேட்டு நாம் செவியைப் பொத்திக் கொள்வோமா என்பது வேறு விஷயம். அதை நாம் ரசிக்கவும் செய்வோமென்றால் நிச்சயம் அதன் பின்னே ஏதோ ஒன்று, நமக்குப் பிடித்த நாம் லயித்த சம்பவம் அல்லது கற்பனை எதுவோ ஒன்று நினைவின் பசுமையில் உறைந்திருக்கிறது என்றுதான் அர்த்தம்.

### அச்சாபீஸ்

'டிரிங்....டிரிங்.... டிரிங்....' மை பிளேட் சுற்றுகிறது. 'சர்ர்... சர்ர்..சக்' மை ரோலர்கள் மேலும் கீழும் ஓடுகின்றன. 'டங்....டட் டங்க்' இம்ப்ரெஷன்! டடக் - டடக் - டடக் - டடக் மூங்கில் குச்சி போன்ற ஒரு கால் பெடலை மிதிக்கிறது — ஆம்! அந்த இயந்திரத்தின் உயிர் அதில்தான் இருக்கிறது. இந்தச் சப்த சம்மேளனத்தின் அர்த்தம்?— இருண்ட குகை போன்ற அந்தச் சிறிய அச்சக்கூடம் இயங்கிக் கொண்டிருக்கிறது என்பதுதான்.

அந்த அச்சக்கூடத்துக்கு வயசு இருபதுக்கு மேல் ஆகிறது. அங்கே நடக்கிற சராசரி வேலை கலியாணப் பத்திரிகைதான். சமயா சமயங்களில் 'பில் புக்'குகள், 'லெட்டர் பேடு' கள், விஸிட்டிங் கார்டுகள், இத்தியாதி வேலைகளும் இடம் பெறும். அங்கிருப்பதெல்லாம், அந்த 'டிரெடி'லைத் தவிர நாலைந்து 'ஜாப் டைப் கேஸ்'களும் ஒரு சிறிய 'கட்டிங் மிஷி'னும் தான்! — சின்ன பிரஸ்தானே? அப்படி, என்ன பிரமாத லாபம் கிடைத்துவிடப் போகிறது? ஆனால் பிரஸ்ஸின் முதலாளியான முருகேச முதலியார் மட்டும் இருபது வருஷங்களுக்குப் பின் எப்படியோ தமக்கென்று ஒரு சின்ன வீடு கட்டிக்கொண்டு விட்டார். கம்பாஸிட்டர்—பைண்டர்—மெஷின்மேன் எல்லாம் — அதோ டிரெடிலின் அருகே நின்று 'வதக் வதக்' கென்று காலை உதைத்துக் கொண்டிருக்கிறானே விநாயகமூர்த்தி — அவன்தான். மாதம் இருபது ரூபாய்க்குப் பஞ்சமில்லை. சில சமயங்களில் முதலியாரின் 'மூடு' நன்றாக இருந்தால் டீ குடிக்க,'நாஸ்டா' பண்ண என்ற பேரில் கிடைக்கும் 'எக்ஸ்ட்ரா' வரும்படியையும் சேர்த்தால் நிச்சயம் மாதம் முப்பது ரூபாய்க்கு மோசமில்லை!

### முதுமை

கிழவனுக்கு வயசு கணிக்க முடியாது. நிர்ணயம் என்ற அளவுகோலுக்கு உட்படாமல் தப்பித்து, விசுவரூபம் காட்டுவது போன்ற தோற்றம். தலை வறண்டு கிடந்தது. முகம் நரைத்திருந்தது. நெற்றிச் சதை சுருங்கி இருந்தது. நரை மயிர் செறிந்து புருவ விளிம்புகள் கனத்துத் தொங்கியதால் விழிகளில் பாதிதான்—அதுவும் இலேசான வெண்மை மட்டும் — வெளியே தெரிந்தது. மூக்குத் தண்டுக்கு



இரு புறத்திலும் ஆழக் கீறின மாதிரி இருக்கிற சுருக்கங்கள் எங்கே ஆரம்பித்து எங்கே முடிகின்றன என்று தெரியாதபடி தொள தொளத்த கன்னத்துச் சதைகளும் தாடியும், முகம் முழுதும் கனிந்து கிடந்தன. இவை எல்லாவற்றையும் வெற்றி கொண்டு அவனது அகன்ற கூரிய நாசி கம்பீரமாக மேலெடுத்து நின்றது. கிழவன் நல்ல உயரம்; நீளநீளமான கால்களும், கைகளும், இருந்தாலும் முதுகு மட்டும்—இரண்டு தோள் பட்டைகளும் சந்திக்கும் இடத்தில்—அளவுக்கு மீறிக் கூனிப் போய்விட்டது. அத்துடன் கால்களும், கைகளும் திசைக் கொன்றாகத் திரும்பி முறுக்கிக் கொண்டிருந்தன. உலர்ந்து போன திராட்சையின் மேல்தோல்மாதிரி சரீரமெல்லாம் சருமம் சுருங்கிப் போய் வரி வரியாய் அலை அலையாய்க் கோடு கீறியிருந்தது. அவற்றின் ஊடே உயிரின் மினுமினுப்பு....ஆம். அவன் பழுத்த பழம் மட்டுமல்ல....உலர்ந்த பழம்!

## ஒரு பிரமுகர்

அது ஒரு கிராமத்துச் சாலை! அந்தச் சாலையிலே ஒரு பாழ் மண்டபம். பாழ் மண்டபத்துக்கு எதிரே ஒரு வேல மரம். அந்த வேல மரத்தின் தயவில், அதைப் பற்றிப் படர்ந்திருக்கிறது ஏதோ ஒரு காட்டுக் கொடி. காட்டுக்கொடி தண்டு முற்றித் தலை கிழடு தட்டி விட்டதால் ஒரு பழுப்பு இலை மட்டும் உதிராமல் பூமியை நோக்கி வரம் கேட்கிறது.. தண்டின் வேர்ப் பகுதியை ஒட்டி வேல மரத்தில் ஒரு பொந்து. பொந்து வாயிலில் பழுப்பு இலைக்கு நேர் கீழே ஒரு சிறு மண்ணுருண்டை. மீசையை நீவி விட்டுக் கொண்டு கம்பீரமான ஆகிருதியுடன் வெளியே வந்தது ஒரு பெரிய கட்டெறும்பு!

''உலகத்தைப் பார்த்து ரொம்ப நாளாச்சு'' என்று முனகிக் கொண்டே ஏகாந்தமான வனத்தில் தன்னிச்சையுடன் திரியும் ஒரு சிங்கத்தைப் போல், தலையை ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்குத் திருப்பி உலகத்தை நோட்டம் விட்டது எறும்பு.

## நிறங்கள்

உலகில் பெயரிடப்பட்டுள்ள நிறங்கள் மிகக் குறைவானவை தானே! பெயரில்லாத, இன்னொரு முறை அதே கலவையில் காண முடியாத, கண்டாலும் பெயர் சொல்ல முடியாத நிறங்கள் அனந்தம். சாசுவதமான எத்தனை எத்தனையோ நிறங்களுக்குக் கூடப் பெயரில்லையே....

குழந்தையின் உதட்டோரத்தில் என் மார்பில் சுரந்த அன்பின் தூய வெண்மை, ஈரம் பரந்திருக்கிறது. குழந்தையின் தலைமுடி....என்ன மிருது! கறுமையும் செம்பட்டையும் கலந்து — இது என்ன நிறம்? இரண்டு பொருள்கள் கலந்தால் இரண்டின் இரண்டு தன்மையும் பூரணமாய் மாற்றமடைந்தோ, இரண்டின் இரண்டு தன்மைகளும் சேரும் அதிக பட்சக் கலப்பின் அதிக பட்சச் சாயலினாலோ, இரண்டும் — இரண்டுமற்ற மூன்றாவதாய், மூன்றாவது பொருளாய், அல்லது தன்மையாய் ஜனிக்கிறது. இந்த ஜனன நியதி பிரகிருதிப் பொருள்கள், யாவற்றிற்கும் முக்கியமாய் நிறங்களுக்கு நிறைய உண்டு என்று எனக்குத் தோன்றுகிறது.

## மருள்மாலை

ஏற்றக் கிணற்றருகே வடியாமல் நின்றிருந்த நீர்க்குட்டையில் காக்கைகள் மூழ்கியெழுந்து சிறகை விரித்துச் சிலுப்பிக் கொண்டிருந்தன. காற்று மந்தகாசமாக வீசிக் கொண்டிருந்தது. வானம் இரத்தச் சேறு போல் குழம்பிக் கிடந்தது. முதல் நட்சத்திரம் கூட உதயமாகி விட்டது. காக்கைகள் கூடு நோக்கிப் பறந்தன. யுத்த காலத்தில் விமானங்கள் அணிவகுத்துச் செல்வதைப் போல் வெள்ளைக் கொக்குகளின் கூட்டமொன்று வானத்தில் ஒரே நேராகப் பறந்து சென்றது.

## தவலோகம்

அந்த இளம் உள்ளம் ஏகாந்தத்தை நாடித் தவித்தது. அவன் கற்பனையில் ஒரு தவலோகமே விரிந்தது. ...ஹிமவானின் சிகரத்தில், பனிச் செதில்கள் பாளம் பாளமாய், அடுக்கடுக்காய் மின்னிப் பளபளக்கும் அந்தப் பாழ் வெளியில், மேகம் திரண்டு ஒழுகுவது ஹிமவானின் புத்திரி கோதிவிடும் வெண் கூந்தல் கற்றை போல் வீழும் நீரருவியில், அதன் அடிமடியில் ஓங்காரமாய் ஜபிக்கும் பிரணவ மந்திர உச்சாடனம் போன்ற நீர்வீழ்ச்சியின் இரைச்சலில், சிவனின் புகழ் பாடும் எண்ணிறந்த பறவை இனங்களின் இன்னிசையில்.... எதிலுமே மனம் லயிக்காமல், பற்றுமல், உலகத்தின் அர்த்தத்தையே தேர்ந்த பெருமிதத்தில் தெளிவில் மின்னிப் புரளும் விழிகளை மூடி, இயற்கையின் கம்பீரத்துடன் நிஷ்டையில் அமர்ந்திருக்கிறாரே அந்த ரிஷிக் கிழவர்...... அவர்தான் லோக குரு.

# திருமூலர் தவ மொழி

## ராஜாஜி - சோமு

### 31

நம்முடைய முயற்சி எத்தனை பெரிதாயினும் எம்பெருமானுடைய அருள் ஒன்றே நமக்கு எல்லா நலன்களும் தரவல்லது என்பதைப் பாடுகிறார் திருமூலர்.

பிரான்அருள் உண்டுஎனில்
உண்டுநற் செல்வம்

[நற்செல்வம்—தீதற்ற முறைகளில் வரும் செல்வம்.]

பிரான்அருள் உண்டுஎனில்
உண்டுநல் ஞானம்

எம்பெருமான் அருள் கிட்டுமானால் குறை நீங்கிய ஞானம் உண்டாகும்.

பிரான்அரு ளில்பெரும்
தன்மையும் உண்டு.

எம்பெருமான் அருள் ஏற்படுமானால், நம்முடைய பண்புகள் உயர்தன்மை யடையும். அதன் பயனாக,

பிரான்அரு ளில்பெரும்
தெய்வமும் ஆமே

மனிதனுக்குத் தெய்வ நிலையும் சித்தித்து விடும்! மனிதப் பண்புகள் உயர்ந்து பூரணம் பெற்றுத் தெய்வ நிலையையே அடைவோம். எம்பெருமானே குருவாகவும் வருவதாகக் கொண்டு, குருவின் அருளையே தெய்வத் திருவருளாகக் கொள்ளவேண்டும் என்பது முனிவரின் கருத்து.

பிரானருள் உண்டெனில்
உண்டுநற் செல்வம்
பிரானருள் உண்டெனில்
உண்டுநல் ஞானம்
பிரானரு ளில்பெருந்
தன்மையும் உண்டு
பிரானரு ளில்பெருந்
தெய்வமும் ஆமே!

இத்தகைய அருளாற்றல் நமக்குக் கிட்டும்படி செய்கிற ஒரு குரு நமக்கு வாய்ப்பதும் தெய்வத் திருவருளினால்தான். அந்தத் திருவருள் கிடைக்காத மனிதர்களின் நிலை என்ன என்பதைப் பாடுகிறார் முனிவர்.

அஞ்ஞானத்தை நீக்கித் தெய்வ ஒளியைக் காட்டுகிற குருமார்களைச் சென்றடையாமல், அறிவிலிகளைச் சார்ந்து நின்று மனிதர்கள் தங்கள் வாழ்நாளை வீணாக்கித் துன்பத்தில் விழுகிறார்களே என்று அனுதாபத்தோடு பாடுகிறார் திருமூலர்.

குருட்டினை நீக்கும்
குருவினைக் கொள்ளார்

[குருடு—அகக்கண் இல்லாமை அதாவது அஞ்ஞானம். குருட்டினை—அஞ்ஞானத்தை.]

அறியாமையை நீக்கியருள்கிற ஆசாரியனை நாடுகிறார்களில்லை.

குருட்டினை நீக்கும்
குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக்
குருவினைக் கொள்வர்

அஞ்ஞான இருளைக் களைந்து ஒளியைக் காட்டுகிற குருவினைக் கொள்ளாமல், அறியாமையை நீக்கத் தெரியாதவர்களை அடைந்து கெடுகிறார்களே என்று வருந்துகிறார் முனிவர். இனி இவர்களுடைய நிலை எப்படியிருக்கிறது என்பதை ஓர் உவமையின் மூலம் விளக்கிச் சொல்லுகிறார்.

குருடும் குருடும்
குருட்டாட்டம் ஆடி

[குருடும் குருடும்—ஒரு குருடன் இன்னொரு குருடனை வழிகாட்டியாகக் கொண்டு, குருட்டாட்டம் ஆடி—பாதையிலே தடுமாறிச் சென்று.]

குருடும் குருடும்
குழிவீழு மாறே

[குழி விழுமாறே—குழியில் விழ வேண்டியதுதான்; அது போலவே மக்கள் உண்மை உபதேசிகளைப் பெறுமல் அழிகிறார்கள்.]

குருட்டினை நீக்கும்
குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக்
குருவினைக் கொள்வர்
குருடும் குருடும்
குருட்டாட்டம் ஆடிக்
குருடும் குருடும்
குழிவீழு மாறே!

உபநிஷத்தில் இதே பொருள் கொண்ட மந்திரம் உண்டு.

தந்த்ரம்ய மாணாஹ பரியந்தி மூடா
அந்தேன இவ நீயமானா
யதா அந்தாஹ.

# உங்கள் சிந்தனைக்கு...

### தெருவில் ஒட்டியிருக்கும் சில வர்ண விளம்பரங்கள் மினுமினுப்பது ஏன்?

அதற்குக் காரணம் இதுதான்: அவற்றில் கால்சியம் சல்பைடு, குவினைன் சல்பேட், புளோரசின் போன்ற பொருள்கள் கலந்திருக்கின்றன. இந்தப் பொருள்கள் சூரிய ஒளியிலுள்ள ஊதா நிறத்துக்கு அப்பாலுள்ள கண்ணுக்குப் புலனாகாத புற ஊதாக் கதிர்களை (ultra violet rays.)



உறிஞ்சிக் கொண்டு அவற்றைக் கண்ணுக்குப் புலனாகும் வர்ணங்களாக மாற்றித் தங்களை வெளியிடுகின்றன. அதுவே தகதகப்புக்குக் காரணம்.

### பாச்சை உருண்டையைப் பெட்டியில் போட்டால் சில மாதங்களில் காணாமல் போய் விடுகிறதே ஏன்?

கட்டியாகத் திட நிலையில் உள்ள பொருள்கள் திரவ நிலைக்கு உருகிப் பிறகே வாயு நிலைக்கு மாறும். ஆனால் சில பொருள்களோ திடநிலையிலிருந்து நேராக ஆவியாகின்றன. அதாவது அவை உருகுவதில்லை. திரவ நிலையை அடைவதில்லை. அந்த வகையைச் சேர்ந்தவை தான் பாச்சை உருண்டை (நாப்தலின்), சூடம் முதலியன. அவை ஆவியாகிப் பெட்டி முழுதும் கண்ணுக்குத் தெரியாமல் பரந்து விடுகின்றன. முடிவில் பெட்டியிலிருக்கும் சட்டைகள் மீது அந்த வாசனை ஏறி விடுகிறது.

### எரியும் விளக்கை ஊதினால் அணைந்து விடுகிறதே ஏன்?

எரியும் திரியைச் சூழ்ந்திருக்கும் காற்று ஒரு குறிப்பிட்ட சூட்டில் இருந்தால்தான் திரி எரிகிறது. வாயினால் ஊதும்போது செல்லும் காற்று திரியின் சூழ்ப்புறத்தின் சூட்டை எடுத்துக் கொண்டு அதைக் குளிர்விக்கிறது. உடனே சுடர் அணைந்து விடுகிறது.

### அலுமினிய 'டிபன் பாக்'சில் தயிர் சாதத்தை எடுத்துச் செல்வது நல்லதல்ல ஏன்?

அலுமினியப் பாத்திரத்தில் உப்புத் தண்ணீர் விட்டு வைத்திருந்தால், அலுமினியம் மெதுவாக அதில் கரைகிறது. அலுமினியம் கரைய, பாத்திரத்தில் பள்ளங்கள், வடுக்கள் உண்டாகின்றன. நாளடைவில் அது ஓட்டையாகி விடும். அலுமினியம் ஹைட்ராக்சைடு என்ற கூழ் போன்ற பொருள்



இதில் உண்டாகிறது. தயிர் சாதத்தில் அல்லது உணவில் இருக்கும் உப்பு இம்மாற்றத்தைப் பாத்திரத்தில் தோற்றுவிக்கும்.

### ஹைட்ரஜன் பலூன் விற்குமிடங்களில் நெருப்புடன் செல்லக் கூடாது ஏன்?

ஹைட்ரஜன் வாயுவைச் சேகரித்து அதன் அருகில் எரியும் தீக்குச்சியை எடுத்துச் சென்றால் அது 'டப்' பென்று வெடிக்கிறது. ஹைட்ரஜன் வாயு விஷமல்ல. ஆனால் தீ இருக்கும் போது அபாயம் நிறைந்தது. ஹைட்ரஜன் வாயு இலேசாக இருப்பதனால் அதை நிரப்பி ஆகாய விமானங்கள்



முதலில் செய்தார்கள். அவை எரிந்து விட்டன. ஹைட்ரஜன் பலூன் விற்கும் இடங்களில் தீயுடன் நிற்பதும் ஆபத்து.

### கதிர் வீசும் பொருள்களைக் கண்டு பிடித்தது யார் தெரியுமா?

ஜான் பெக்குரல் என்பவர். இவர் ஒரு நாள் ஒரு யுரேனியத் தாதுப் பொருளைத் தாளில் சுற்றி மேஜைமீது வைத்து விட்டுப் போய் விட்டார். மேஜையினுள் புகைப்படம் பிடிக்கும் தாள்கள் இருந்தன. தற்செயலாக அந்தப் புகைப்படம் பிடிக்கும் தாளை அவர் கழுவியபோது அதில் யுரேனிய தாதுப் பொருளின் வடிவம் தெரிந்தது. யுரேனிய தாதுப்பொருள் கதிர் வீசுகிறது என்று கண்டார்.

### நம் வீட்டில் புழங்கும் 'எவர்சில்வர்'..

1913-ம் ஆண்டில் துப்பாக்கியின் பாகங்கள் செய்ய ஒரு நல்ல கலப்பு உலோகத்தை நாடி, பிரியர்லி என்பவர் பல உலோகக் கலவைகள் தயாரித்தார்.



அதில் ஒன்று கருக்காமல், துரும் பிடிக்காமல், பளபளப்புடன் இருந்தது. அதில் பதினெட்டு சதவிகிதம் குரோமியம் கலந்திருந்தது. அப்படித்தான் எவர்ஸில்வர் தோன்றியது. இன்று சுமார் முப்பத்தொன்பது எவர்சில்வர்—ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்—வகைகள் இருக்கின்றன.

### டெலிவிஷனை முதலில் கண்டு பிடித்தது....

டெலிவிஷனை முதன் முதலில் கண்டு பிடித்தவர் ஜான் லோகி பெயர்டு என்பவர். அவர் வறுமையில் வாடினார். உடல் நலமில்லாமல் துன்பப்பட்டார். சாதாரண சாமான்களைக் கொண்டு சுமார் ஐந்து ரூபாய் அடக்க விலையில் டெலிவிஷன் பெட்டியை 1925-ல் தயாரித்தார்.

1932-ல் சுமார் 10,000 டெலிவிஷன் பெட்டிகள் உபயோகத்தில் இருந்தன. ஓரிடத்தில் நிகழும் நிகழ்ச்சியை வேறோரிடத்தில் அப்படியே பார்ப்பதும் கேட்பதும்தான் டெலிவிஷன்.

தொகுத்தவர்: உதயமூர்த்தி

# புடவையோ புடவை!



''இந்த 'பார்டர் பிராப்ளம்' ரொம்ப மோசமாகி வருகிறதே!''
'' 'சீனு' பார்டரா?''
''இல்லே சார்! புடவை பார்டர்!''



''இந்தாம்மா! என் கை'குட்டை என்று சொல்லக்கூடாதுன்னு ஒரு மரக்கை தயாரித்து விட்டோம்!''
''அது சுத்தமா ஒரு முழம் இருக்காதுபோலிருக்கேடாப்பா!''



''அடிக்கடி வர முடியவில்லை. நடமாடவே முடியல்லே!''
''என் சம்சாரமும் அப்படித்தான் சொல்லு. பட்டுப் புடவை வாங்கிக் கொடுத்தா உடனே நடமாடுறுள்.''



''ஆயிரம் உயிர்களை வதைச்சு ஒரு பட்டுப் புடவை செய்யறாங்க!''
''ஆயிரம் இல்லே சார்! ஆயிரத்து ஒண்ணுன்னு சொல்லுங்க! என்னையும் சேர்த்து!''



''என் உடல் நல்லா இல்லையா?''
''நான் புடவையைப் பத்தித்தான் சொன்னேன். உங்கள் உடம்பை இல்லே....''



புடவை விற்பனைக்காரர்: ஏம்மா! உங்ககிட்டே அதிக விலை சொல்லி நாங்க என்ன மூட்டையா கட்டிண்டு போகிறோம்!



''ஏண்டாப்பா! ஏதோ ஸினிமா பேர் வச்ச புடவை வந்திருக்காமே! பேர் ஞாபக மில்லே. ராப்பட்டினிக்காரா கட்டிக்கிற புடவைமாதிரி...!''
'' 'பாலும் பழமும்' தானே?''



''எவர்ஸில்வர் பாத்திரக்காரருடன் வந்து புடவை பார்க்கிறேனே?''
''பின்னும் அவர் நல்ல சரிகை இல்லே என்று சின்னப் பாத்திரமாகக் கொடுக்கிறார்!''

சாமா

# வெற்றிபெற்றோர்

## மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்



## அதிர்ஷ்டக் குழந்தை விழா

இதோ! நீங்கள் ஆவலுடனும், ஆர்வத்துடனும் எதிர்பார்த்துக்கொண்டிருந்த அற்புதச் செய்தி! மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் அதிர்ஷ்டக் குழந்தை விழாவின் முடிவுகள்! இறுதி நாளான செப்டம்பர் 14, 1961க்கு முன்பே ஒரு லட்சத்து ஐம்பதினாயிரம் மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் உபயோகிக்கும் அதிர்ஷ்டக்காரர்கள் இவ்விழாவில் கலந்துகொண்டனர். ஆயிரமாயிரம் நன்றியுள்ள தாய்மார்கள், மானேர்ஸ் கிரைப் மிக்சரைப்பற்றி ஆர்வமுடனும் அன்புக் கடிதங்கள் அனுப்பினர். மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் அவர்களுடைய மழலை அரும்புகளை ஆரோக்கியத்துடனும் உற்சாகத்துடனும் பராமரிக்கிறது.

**தேர்வுக் குழுவினர் தேர்ந்தெடுத்த அதிர்ஷ்ட நேரம், தேதி, வருடம்:**



**இரவு 10 மணி, 19 நிமிடங்கள், 29-10-1959**

**முதல் பரிசு:** மாதம் ரூ. 46 வீதம் 7 வருடங்களுக்கு *

குழந்தை ஜயலட்சுமி (பிறந்த நேரம் இரவு 10 மணி 55 நிமிடங்கள், 29—10—1959)
c/o திரு. கே. எஸ். நாகராஜ், பி. எஸ்ஸி., 41, சாமயோகன்புரம், பெங்களூர் 21.

**2—வது பரிசு:** மாதம் ரூ. 29 வீதம் 7 வருடங்களுக்கு *
கலந்துகொண்ட இருவர் பெறுகின்றனர்

(i) குழந்தை பெர்ஸிஸ் (பிறந்த நேரம் இரவு 9 மணி 37 நிமிடங்கள், 29—10—1959)
c/o திருமதி ஜே. ஏ. சன்ஜனா, செர்ஜண்ட் மேனுவல், பர்ரோ ரோட், பம்பாய்—1.

(ii) குழந்தை ராஜ்குமார் (பிறந்த நேரம் இரவு 9 மணி 37 நிமிடங்கள், 29—10—1959)
c/o திரு. ஜி. மணி, 40, அச்சுதராயமுதலி தெரு, பெங்களூர்—5.

**3—வது பரிசு:** மாதம் ரூ. 22 வீதம் 5 வருடங்களுக்கு
கலந்துகொண்ட இருவர் பெறுகின்றனர்.

(i) குழந்தை டி. பி. புருஷோத்தம் (பிறந்த நேரம் இரவு 9 மணி 30 நிமிடங்கள், 29-10-1959)
c/o திரு. டி. பி. கங்குலெப்பா, வீட்டு எண் 136 / 1 பிரகாசம் தெரு, திருப்பதி, சித்தூர்மாவட்டம்,

(ii) குழந்தை சரோஜபாலா (பிறந்த நேரம் இரவு 9 மணி 30 நிமிடங்கள், 29—10—1959.)
c/o திரு சந்திரசிங் வாகேலா, பெத்தாபூர், கலோல் தாலுக்கா, வடக்கு குஜராத்.

* இவை முழுதும் செலுத்தப்பட்டுள்ள தாழ்த்திப்பெறும் ஆண்டு சவு இன்ஷ்யூரன்ஸ் பாலிசிகள் (Deferred Annuity Life Insurance Policies) மூலம்.

மற்ற 100 குழந்தைகள் ரூ. 5 அரசாங்கப் பரிசுப் பத்திரங்களை பாராட்டுப் பரிசுகளாகப் பெறுகின்றனர். அஞ்சல்மூலம் அவர்களுடைய அதிர்ஷ்ட முடிவுகள் அறிவிக்கப்படுகின்றன.

மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் தயாரிக்கும் ஜெப்ரி மானேர்ஸ் லிமிடெட் கம்பெனியார் இந்த அதிர்ஷ்டக் குழந்தைகளுக்குத் தங்கள் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கின்றனர். இத்துடன் அதிர்ஷ்டக் குழந்தை விழாவில் கலந்துகொண்ட எல்லா மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் குழந்தைகளுக்கும் தங்கள் நல்வாழ்த்துக்களை உரித்தாக்குகின்றனர். ஆம்! இந்த மழலை அரும்புகளும் அதிர்ஷ்டம் செய்தவைதான்! எப்படித் தெரியுமா? இந்தக் குழந்தைகளின் அன்னைமார்கள் இவர்களுக்கு மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் அளித்து இவர்களை சீராகவும் சிறப்பாகவும் பராமரிக்கின்றனர்.



**ஜெப்ரி மானேர்ஸ் கம்பெனி லிமிடெட்.**

ASP. GM-FA-7A



# புது வெள்ளம்

### அத்தியாயம் இருபத்தொன்பது

## கலை, காசு, காதல்

மேஜை மீது முருகையன் எடுத்து வைத்த வேர்க் கடலைகளை நொடிப் பொழுதில் ரசித்துச் சுவைக்கத் தொடங்கினான் குருசாமி. கடலைகளை மளமளவென்று உள்ளே தள்ளிக் கொண்டே பேச்சுக்களை அதே வேகத்தில் வெளியில் தள்ளினான். முருகையனைத் தூண்டித் துருவி அவனைப் பற்றிய விவரங்கள் முழுவதையும் தெரிந்து கொண்டான்.

''சரிதான், நாம் இரண்டு பேர்களுமே இப்போது முதலாளிகளாகிவிட்டோம். நீங்கள் கடலை வியாபார முதலாளி; நான் கலை வியாபார முதலாளி!'' என்றான் சிரித்துக் கொண்டே.

''முதலாளியா?''

''ஆமாம்; முதலாளிகளிடம் போய் முட்டி மோதிப் பார்த்து விட்டு இப்போது நானே ஒரு முதலாளியாகி விட்டேன். திரைப்படக் கம்பெனி முதலாளிகளில் சிலர் என்னை உள்ளே விடவேயில்லை. சிலர் முகம் நன்றாக இல்லையென்றார்கள், இன்னும் சிலர் என் உருவம் திரையில் விழாதென்றார்கள். இன்னும் சிலரோ எனக்கு நடிக்கவே தெரியாதென்று சாதித்து விட்டார்கள். யோசனை செய்து பார்த்தேன். மேலும் முயற்சி செய்தால், 'நான் மனிதன் தானா?' என்கிற சந்தேகத்தை எனக்கே ஏற்படுத்தி விடுவார்கள் என்கிற பயம் வந்துவிட்டது. என்னைப் போல் திரைப் படக் கம்பெனிகளுக்குப் படையெடுத்து வந்து முற்றுகையிட்ட சிலரை வைத்துக் கொண்டு ஒரு நாடகப் படை திரட்டி விட்டேன். நான் இப்போது ஒரு கூட்டுறவுக் கலைக்கூடத்தின் நிர்வாக முதலாளி!'' என்றான் குருசாமி.

''எப்படியாவது நன்றாக இருந்தால் சரி'' என்று தன் மகிழ்ச்சியைத் தெரிவித்த முருகையன், ''இதற்கெல்லாம் பணத்துக்கு என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

''பணமா! பணம் இருந்தால் நாங்கள் ஏன் பட்டணத்துக்கு வருகிறோம்?'' என்றான் குருசாமி.

''நாடகம் உருவாகி அதை அரங்கேற்றும் வரையில் செலவுக்கு என்ன செய்வீர்கள்?''

''அதை யெல்லாம் கேட்காதீர்கள்! கடவுளுக்கே வெளிச்சம்!'' என்று கூறிக் கலகல வென்று சிரித்தான் குருசாமி.



அகிலன்

''ஒவ்வொருவரும் கிடைத்த இடத்தில் சாப்பிடுவதாகவும் அகப்பட்ட இடத்தில் தூங்குவதாகவும் ஓர் உடன்பாடு செய்து கொண்டிருக்கிறோம். ஒரே ஒரு கூரைக் கொட்டகையை மாத்திரம் கடனில் மாத வாடகைக்கு எடுத்திருக்கிறேன். அங்கே பானை நிறையக் குழாய்த் தண்ணீர் உண்டு. அதைக் குடித்துக் கொண்டு ஒழுங்காய் ஒத்திகை நடத்த வேண்டியது. நாடகம் நடத்தப்பட்டு, அதில் பணமும் வந்தால், செலவு போக மீதமிருப்பதை எல்லாரும் பகிர்ந்து கொள்ளுவோம்.''

வியப்போடு குருசாமியைப் பார்த்தான் முருகையன். ''என்ன, பார்க்கிறீர்கள்! வசூலாகா விட்டால் என்ன செய்வதென்று கேட்கிறீர்களா? ராத்திரியோடு ராத்திரியாக ஊரை விட்டுக் கிளம்பிவிட வேண்டியது.''

''நல்ல கூட்டுறவு இது குருசாமி!''

''அண்ணா! எங்களால் சும்மாயிருக்க முடியவில்லை. மேடையில் ஏறி நின்று மனிதர்களுடைய முகங்களில் கலகலப்பு ஏற்படுத்தினால்தான் எங்களுக்குத் தூக்கமே வரும். அதற்காகத்தான் இந்த ஏற்பாடு. பசியில் கூட்டுறவு; பட்டினியில் கூட்டுறவு; கவலையில் கூட்டுறவு. இதுவே எங்கள் கூட்டுறவுக் கலைக் கூடம். வேறு எந்தப் பிழைப்பும் எங்களுக்குத் தெரியாது; பிழைக்கவும் வழியில்லை.''

நகைச்சுவைக் கலைஞனின் துணிவைக் கண்டு நகைப்பு வந்தது முருகையனுக்கு.

''நிலக்கடலை ருசியாக இருக்கிறதே! சூடாக வறுத்திருக்கிறீர்களே! எங்கே, இன்னும் கொஞ்சம் இப்படித் தள்ளி விடுங்கள்!''

கூட்டுறவுக் கலைக்கூடத்தின் நிர்வாக முதலாளி இப்போது கலையைவிடக் கடலையில் கண்ணாக இருப்பதைக் கண்ட

கொண்டேன். மகாத்மா காந்தி எதற்காகக் கடலை சாப்பிடுகிறார் என்பது இப்போதுதான் தெரிகிறது. எல்லாரும் அவரைப் போல் கடலைக்குத் திரும்பினால், பாரதி பாடியிருக்கிறாரே அந்தத் 'தனியொருவனுக்குணவில்லை யெனில்' என்ற சிக்கலையே நாட்டில் தீர்த்துவிடலாம் போல் இருக்கிறது!''

''நடிப்பதற்குப் பெண்கள் வேண்டுமே, என்ன செய்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டான் முருகையன்.

''பெண்கள் தொல்லைதான் பெருந்தொல்லையாக இருக்கிறது, அண்ணா!'' என்றான் குருசாமி. ''முன்பெல்லாம் இந்த ரசிகர்கள் நான் பெண் வேஷத்தில் வந்தால் கூடக் கை தட்டி ரசித்தார்கள். இப்போதெல்லாம் பெண்களே வந்தால்கூட, அவர்கள் பெண்களைப் போல் இல்லாவிட்டால், கை தட்டி உள்ளே போகச் சொல்லுகிறார்கள். அழகான பெண்களை நான் எங்கே தேடிப் பிடிப்பது? அவர்கள் எப்படி எங்கள் கூட்டுறவின் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்படுவார்கள்? நடிக்க வருவதற்கு முன்னால் காசு கேட்டுத் தொலைக்கிறார்களே!''

''சிரமமான காரியந்தான்'' என்றான் முருகையன்.

''சிரமம் என்றால் வாய் விட்டுச் சொல்லிக் கொள்ள முடியாத சிரமம். அப்படியே பெண்களிடம் கடன் சொல்லி அவர்களைக் கெஞ்சிக் கூத்தாடி நடிப்பதற்கு அழைத்துக் கொண்டு



முருகையன், 'இது ருசியில்லை — பசி தான்' என்பதைத் தெரிந்து கொண்டான். முறுக்கு, சுண்டல், கடலை, பட்டாணி முதலிய பொருள்கள் உடனே மேஜையை அலங்கரிக்கத் தொடங்கின. இந்தே நிமிஷங்களில் அவை மறைந்த மாயமும் தெரிய வில்லை.

''இன்னும் கொஞ்சம்....?''

''வேண்டாம்! வேண்டாம்! நேற்றையக் கணக்கு, இன்றையக் கணக்கு, நாளையக் கணக்கு இந்த மூன்று நாள் கணக்கையும் உங்களிடம் முடித்துக்

வருகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். பெண்கள் அழகாக இருந்தாலும் ஆபத்து; அழகாக இல்லாவிட்டாலும் ஆபத்து. அழகாக இருந்தால் சில பிள்ளைகள் ரகசியமாகத் தங்கள் காதல் ஒத்திகைக்குப் போட்டி போட ஆரம்பித்து விடுவார்கள். அழகாக இல்லாவிட்டாலோ யாரும் நாடக ஒத்திகைக்கு வந்து சேர மாட்டார்கள். காசில்லாத

கூட்டுறவு முயற்சி கலவரத்தில் கலந்துவிடக் கூடாதே என்ற கவலை எனக்கு.''

''அப்படியா? இதெல்லாம் எனக்குத் தெரியாது'' என்றான் முருகையன்.

''தெரிந்து கொள்ளாத வரையில் நல்லதுதான்; என்றாலும் தெரிந்து கொள்ளுங்கள். முதலாளிகளிடம் கட்டுப்பாடும் கண்டிப்பும் இல்லாவிட்டால், நாடகம் மேடையேறுவதற்கு முன்பே உள்ளுக்குள் பல உண்மை நாடகங்கள் நடந்து விடும். எங்கள் உலகமே ஒரு தனி உலகம், அண்ணா! காதல் கத்திரிக்காய் என்று சொல்லுகிறார்களே, அதிலெல்லாம் எனக்கு நம்பிக்கையில்லை. மேடைகளில் நாங்கள் ஆவியுருகக் காதலிப்போம்; ஏழு பிறவிகளுக்கும் பிரிய மாட்டோம் என்று சொல்லுவோம். திரை விழுந்தவுடன் உள்ளே போய் விழுந்து விழுந்து சிரித்துக் கொள்வோம்.''

''நிர்வாக முதலாளி! இப்போது என்னதான் செய்யப் போகிறீர்கள்?''

''முதலில் என்னுடைய சக நடிகர்களுக்குக் காதலின் அபாயத்தைப் பற்றி நீண்டதொரு சொற்பொழிவு நடத்தி அவர்களுக்கு எச்சரிக்கை செய்து வைத்திருக்கிறேன். 'காதல் நடிப்புக்கு; கலை காசுக்கு; காசு வாழ்வுக்கு' என்பது எங்கள் நாடக மன்றத்தின் குறிக்கோள். தெரியாத்தனமாக யாராவது ஒருவன் காதலித்து விட்டால், அதற்குஅவன்கட்ட வேண்டிய வரிப் பணத்தையும் கட்





அமெரிக்காவிலுள்ள கத்தோலிக்க சேவா சங்கத்தினர் ஒரு லக்ஷம் பவுண்ட் பால் பவுடரைச் சென்னை நகர சபைப் பள்ளிகள் மதிய உணவுத் திட்டத்துக்காக வழங்கியுள்ளனர். சென்னை ஜெகந்நாதபுரம் உயர்தர ஆரம்பப் பாடசாலையில் மந்திரி ஸ்ரீமதி லூர்தம்மாள் சைமன் இந்தப் பால் பவுடர் வழங்கும் பணியை ஆரம்பித்து வைத்தார். படத்திலே கத்தோலிக்க சேவா சங்கத்தின் டைரக்டர் மதியா ஈ. மார்லிக்கு மாணவியொருத்தி பூமாலை சூட்டி மகிழ்வதைக் காணலாம்.

டிக் காட்டியிருக்கிறேன். ஒரு கணப் புன்னகை கிடைத்தால் அதற்கு ஒரு முழம் மல்லிகைப் பூவாவது வாங்கிக் கொடுக்க வேண்டும்! புன்னகையிலிருந்து வளர்ந்து பேச்சுக்கு வந்துவிட்டாலோ, கடற்கரை, காப்பி ஹோட்டல், சினிமாக் காட்சி இதற்கெல்லாம் மூலதனம் வேண்டும்! கூட்டுறவு போட்டிக் களமாக மாறி விடும் என்பதைச் சொல்லியிருக்கிறேன். காதல் மயக்கத்தைக் கட்டிப் போடுவதற்கு எங்களிடமே பசி மயக்கம் என்ற போலீஸ்காரன் இருக்கிறான். காதலாம் காதல்! காசு தேட முடியாதவன் காதலித்தால் அது அவனுக்கே பச்சைத் துரோகம்; ஆத்மத் துரோகம்!''

சவுக்கடிகளைப் போல் 'சுரீர் சுரீ'ரென்று குருசாமியின் சொற்கள் முருகையனின் நெஞ்சுக்குள் விழுந்தன. முருகையனைப் போல் குருசாமி கல்லூரிப் படிப்பு இல்லாதவன்தான். ஆனால் வாழ்க்கையின் கசப்பான அனுபவங்கள் என்ற ஆசிரியர்களிடம் அவன் பயின்ற கல்வி, ஒரு வகையில் தன் கல்வியை விடப் பயனுள்ளவை என்று முருகையனுக்குத் தோன்றியது. 'சித்திராவைப் பற்றி நினைப்பது பச்சைத் துரோகமா? அது ஆத்மத் துரோகமா? காசில்லாதவன் காதலைப் பற்றி ஏங்குவது அவனையே அவன் ஏமாற்றிக் கொள்ளுவது போல்தானா?'

தலையைக் கவிழ்த்துக் கொண்டு நீண்டதொரு பெருமூச்சு விட்டான் முருகையன். இதைக் குருசாமி புரிந்துகொண்டவன் போல், ''ஓ! உங்களுக்கு அந்த அண்ணியின் நினைவு வந்துவிட்டதா?'' என்று கூறிச் சிரித்தான். ''உங்கள் விஷயமே தனி, அண்ணா! அண்ணியின் கடைக்கண் பார்வை உங்கள்மேல் விழுந்திருப்பது லட்சுமி தேவியின் கருணை கடாக்ஷம் அண்ணா! இந்தத் தகர டப்பாவைத் தூக்கி யெறிந்து விட்டு அவர்களிடம் போய்ச் சேருங்கள். கழுத்தில் ஒரு முடிச்சைப் போட்டு விட்டுக் கையில் பெட்டிச் சாவியை வாங்கிக் கொள்ளுங்கள்!''

அந்தப் பேச்சை உடனடியாக மாற்ற வேண்டுமென்று தோன்றியது முருகையனுக்கு. ''நீங்கள் என்ன காரணமாய் இங்கே வந்திருக்கிறீர்கள் என்று சொல்லவில்லையே?'' என்று கேட்டான்.

''மறந்தே போய் விட்டேன், பார்த்தீர்களா? உங்களை இந்த வீட்டில் சந்தித்தது எனக்கு ஒரு வகையில் உதவியாக இருக்கும் போல் தோன்றுகிறது. நீங்கள்தான் அந்த உதவியைச் செய்ய வேண்டும்.''

முருகையன் ஒன்றும் புரியாமல் அவனை ஏறிட்டுப் பார்த்தான். ''என்னவென்று சொல்லுங்கள்; முடிந்ததைச் செய்கிறேன்.''

''குமாரி சுகுணா என்று இங்கே ஒரு பெண் இருக்கிறாள். பார்ப்பதற்கும் அவ்வளவு மோசமில்லை; நடிப்பும் சுமாராக இருக்கிறது; குணத்திலும் கோளாறில்லை என்று கேள்விப்பட்டேன். ஆனால் பணத்தில் மட்டும் அவள் குறியாக இருக்கிறாள்.''

சிரித்தான் முருகையன். ''அவள் சாப்பிட வேண்டாமா?''

''எங்களுடைய கம்பெனி உண்ணாவிரதக் கம்பெனி என்பதை அவளிடம் எடுத்துச் சொல்லி விட்டேன். ஒவ்வொரு நாடகத்துக்கும் முப்பது ரூபாய் முன் பணம் வேண்டுமென்று கேட்கிறாள். நான் நாடகம் முடிந்தவுடன் இருபது ரூபாய் தருவதாகச் சொல்லி

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!** "ஆஸ்மோஸ்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!** கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபில்லின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபில்லின் பூரண தன்மையை அடைந்து ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத் பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அநுபவங்கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தாரால் தயாரிக்கப்படுகிறது!




வேறு எந்த பற்பசையிலும்
இதைவிட அதிக வீரிய குளோரோபில்
இல்லை — குழந்தைகள் அதன்
பெப்பர்மின்ட் வாசனையை மிகவும்
விரும்புகிறார்கள்!




CTPA-G-10 TAM.

# ஒரு கிரிக்கெட்காரரின் மதிப்பு...

## ஹௌ இஸ் தாட்!

அம்பயர் அந்த அப்பீலை அனுமதித்தவுடன் காதைத் துளைக்கும் ஆரவாரம் அந்த ஸ்டேடியத்தை அதிரச்செய்தது.

ஆட்டக்காரர் திரும்பத் தன்னுடைய கோட்டிற்குள் (Crease) வருவதற்குள் [illegible] மிகவும் துரிதமாகப் பெய்ல்ஸ் கட்டைகளை வீழ்த்திவிட்டான்

வேகம், வலிமை, பொறுமை, குறிதவறாமை... ஆகிய இக்குணங்கள் அவனிடம் எப்பொழுதும் காணப்படுகிறது... அவனுடைய இக்குணங்கள் கிரிக்கெட் ஆட்டக்காரர்களின் மதிப்பை உயர்த்துகிறது. மிகவும் கடினமான நாளில், அவனைக் களைப்பில்லாமல், சுறுசுறுப்பாக இருக்கச் செய்வது ஸாத்தேயின் சுவையான, சத்துள்ள பிஸ்கட்டுகள்தான்.

ஸாத்தே பிஸ்கட்டுகள்.




# ஸாத்தே பிஸ்கெட்ஸ

ஸாத்தே பிஸ்கட் அண்டு சாக்லெட் கம். லிட்., பூனா-2

விட்டேன். அவள்கூட என் வார்த்தையை நம்பி விடுவாள் போலிருக்கிறது. அவள் தகப்பன்தான் நந்திபோல் குறுக்கே நிற்கிறான்.''

''அது நியாயந்தானே? நடித்தவளைத் திருப்பி அனுப்புவதற்கு வண்டிச் சத்தம் கூடக் கொடுக்காமல் நீங்கள் கிளம்பி விட்டால் என்ன செய்வது? வசூலாகா விட்டால் இரவோடு இரவாக ரயிலேற வேண்டும் என்று நீங்கள் தானே என்னிடம் சொன்னீர்கள்?''

''அண்ணா! இந்தப் பெண் விஷயத்தில் மட்டுமாவது நான் சொன்ன சொல்லைக் காப்பாற்றி விடுகிறேன். என்னுடைய நாடகத்துக்கு இந்த உதவி உங்கள் உதவியாக இருக்கட்டும். நீங்கள் பொறுப்பெடுத்துக் கொண்டு ஒரே ஒரு நாடகத்திலாவது அவளை நடிக்கச் சொல்லுங்கள்.''

''எனக்கு அவள் பெயரே நீங்கள் சொல்லித்தான் தெரியும். இந்த வீட்டிலிருக்கிறேனே தவிர, அவள் முகத்தைக் கூட நான் பார்த்ததில்லை. நான் என்ன செய்ய முடியும்?''

''நீங்கள் என்னோடு வந்து அந்த நந்திக் கிழவனிடம் ஒரு வார்த்தை சொல்லுங்கள், போதும். 'சற்றே அசைந்து கொடும் பிள்ளாய்' என்று ஒரே ஒரு சொல் சொல்லுங்கள்.''

முருகையனுக்கு இந்த உதவியை அவ்வளவு எளிதாகச் செய்ய முடியும் என்று தெரியவில்லை. தயங்கினான்; யோசித்தான்; குழம்பினான்.

அப்போது யாரோ வெளியிலிருந்து வந்து வீட்டுக்குள் நுழைந்தார்கள். நுழைந்தவள் சாந்தா என்பதைக் கண்டவுடன், ''இருங்கள், வந்து விட்டேன்'' என்று சொல்லிவிட்டு, அவளைப் பின்பற்றி விரைந்து சென்றான் முருகையன்.

'யாரோ ஒரு பெண்ணைக் கண்டவுடன் நண்பனையும் மறந்துவிட்டு அப்படி ஓடுகிறாரே, இவர்!' என்ற நினைவு தான் குருசாமிக்கு எழுந்தது.

### அத்தியாயம் முப்பது

# அலையும் நிலவும்

''சாந்தா!.......சாந்தா!''

குரலைக் கேட்டுத் திரும்பிய சாந்தாவுக்கு, பின்னால் தொடர்ந்துவரும் முருகையனைக் கண்டவுடன் வியப்புத் தாங்கவில்லை. முதன் முறையாக இப்போது தான் அவன் பெயரைச் சொல்லி அவள் அழைத்திருக்கிறான். அவனுடைய முகத்தைப் பார்ப்பதற்கே அவளுக்குப் பரிதாபமாக இருந்தது.

''உங்களிடம் ஒரு விஷயம்.....''

இதற்குள் சாந்தா தன் வீட்டுக்குள் வந்து விட்டதால், ''வாருங்கள், உள்ளே வந்து சொல்லுங்கள்!'' என்று தன் அறையிலிருந்த நாற்காலியைச் சுட்டிக் காட்டினாள். அந்த அறையில் வேறு யாருமில்லை. முருகையனுக்கு உள்ளே நுழைவதற்குத் தயக்கமாக இருந்தது.

''ஒன்றுமில்லை....வந்து....''

சொல்ல வந்ததை அவன் சொல்ல முடியாமல் தவிப்பதைக் கண்ட சாந்தாவுக்குச் சிரிப்பு வந்தது. ''வந்து நிதானமாய்ச் சொல்லுங்கள். என்ன விஷயம்?''

உள்ளே நுழைந்தவன் நாற்காலியில் உட்காராமல் மேலும் கீழும் பார்த்தான். ஒரு பெண்ணின் உதவியை நாடுவதற்காக மற்றொரு பெண்ணிடம் தயவை எதிர்பார்க்க வேண்டிய நிலை அவனுக்கே தர்மசங்கடமாகத் தோன்றியது. சாந்தாவுக்கோ ஒன்றுமே புரியவில்லை.

''மழை பெய்து விட்டதால் விற்பனை இல்லை என்று சொல்ல வருகிறீர்களா? அதனால் என்ன கெட்டுப் போகிறது? அண்ணியிடம் சொல்லி வீட்டிலேயே அதை விருந்து வைத்துச் சரிக்கட்டி விடலாம். அதற்காகவா கவலைப்படுகிறீர்கள்?''

ஏற்கனவே விருந்து தொடங்கிவிட்டது என்பதை அவன் சொல்ல வில்லை. ''வேறொரு முக்கியமான உதவி உங்களால் ஆக வேண்டியிருக்கிறது; அதை எப்படிச் சொல்வதென்று தெரியாமல்....'' என்று சொற்களை அரையும் குறையுமாக விழுங்கிக் கொண்டு தடுமாறினான்.

சாந்தா அவனைத் தவறாக நினைக்கவில்லை. அவனிடம் அளவற்ற இரக்கம் தான் அவளுக்கு ஏற்பட்டது. தவியாய்த் தவிப்பவனைக் கண்டு அவள் கலகல வென்று சிரித்து விட்டு, ''என்ன உதவி என்று சொல்லுங்கள்; முடிந்தால் கட்டாயம் செய்கிறேன்'' என்றாள்.

''அடுத்த வீட்டு நடிகை கருணாவால் எனக்கு...இல்லை, இல்லை....என்னுடைய நண்பருக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருக்கிறது. நீங்கள் நினைத்தால் அதை.....''

''என்ன சொன்னீர்கள்?'' என்று சற்றுக் கடுமையுடன் கேட்டாள் சாந்தா. அவளுடைய குரலின் வேகம்

அவன் கூற வந்த விஷயத்தைத் தொண்டைக்குள்ளாகவே நிறுத்தி வைத்து விட்டது. முகத்தில் அவனுக்குக் 'குப்' என்று வேர்த்துக் கொட்டியது.

''உங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் வேண்டாம்; நான் என் நண்பரிடம் சொல்லித் திருப்பி அனுப்பிவிடுகிறேன். என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்று நாற்காலியிலிருந்து சரேலென்று எழுந்தான் முருகையன். உடனே அங்கிருந்து கிளம்பினால் போதுமென்றாகிவிட்டது அவனுக்கு.

''இதோ, பாருங்கள்! நீங்கள் எதை என்னிடம் புரியும்படி பேசினீர்கள்? எது எனக்குப் பிடிக்க வில்லை என்று தெரிந்து கொண்டீர்கள்? எதைப் போய் உங்கள் நண்பரிடம் விளக்கிச் சொல்லப் போகிறீர்கள்?'' என்று கேட்டாள் சாந்தா.

துணிவை வரவழைத்துக் கொண்டு முருகையன் சாந்தாவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். இவ்வளவு நெருக்கத்தில் இருந்து கொண்டு அதை அவன் இதற்கு முன்பு பார்த்ததில்லை. அதன் உறுதி கலந்த பரிவைக் கண்டவுடன் அவன் மனம் தெளிவு பெற்றது. அன்பு கனிந்த உரிமையோடு அவளது விழிகள் அவனை நோக்கின.

முருகையன் தான் கூறவந்த செய்தி களைத் தெளிவாய்க் கூறி, கேட்க வந்த உதவியையும் தாராளமாய்க் கேட்டு வைத்தான். குருசாமியைப் பற்றி அவளிடம் நல்ல முறையில் கூறினான்.

''இதற்குத்தானா இவ்வளவு தயங்கினீர்கள்?'' என்று கேட்டு விட்டு, வெளியில் வந்து கருணாவுக்குக் குரல் கொடுத்தாள் சாந்தா. கருணா ஓடி வந்து, முருகையன் இருப்பதைக் கண்டவுடன் தலையைக் கவிழ்த்துக் கொண்டு நின்றாள்.

''குருசாமி உன்னிடம் ஏதோ நாடக விஷயமாய்ப் பேசினாராம். அவரை இவருக்குத் தெரியுமாம். இவரை எனக்குத் தெரியும்; என்னை உனக்குத் தெரியும். இப்போது நீ என்ன சொல்கிறாய்?''

''நீங்கள் என்ன சொன்னாலும் சரி, அக்கா!''

''அவர் பணம் கொடுக்காவிட்டால் அதை நான் கொடுக்க ஒப்புக் கொண்டதாக உன் அப்பாவிடம் இப்போதே போய்ச் சொல்லி விடு. நீ அவருடைய நாடகத்தில் கட்டாயம் நடிக்கிறாய்!''

முருகையனுக்குச் சாந்தாவிடம் ஏற்பட்டிருந்த மதிப்பு இன்னும் ஒரு படி உயர்ந்தது. ''சரி, அவள் அப்பாவிடம் சொல்லுவாள்; நீங்கள் உங்கள் நண்பரிடம் சொல்லி விடுங்கள்'' என்று முருகையனுக்கும் உடனே விடை கொடுத்தாள் சாந்தா. நன்றி சொல்வதற்குக் கூட மறந்து விட்டுக் குருசாமியிடம் ஓடி வந்தான் அவன்.

''கருணா உங்கள் நாடகத்தில் நடிக்கிறாள்....''

''வெற்றி! வெற்றி! இனி எங்கும் வெற்றி! எதிலும் வெற்றி!'' என்று ஆனந்தக் கூத்தாடி முடித்தான் குருசாமி. கலைஞனின் குழந்தை உள்ளத்தில் ஏற்பட்ட குதூகலம் முருகையனின் மனத்தையும் பூரிப்படையச் செய்தது.

''அண்ணா! உங்களை நான் முதலில் தப்பாக நினைத்து விட்டேன். 'என்னடா இது, யாரோ ஒரு பெண்ணைக் கண்டவுடன் இப்படித் திடீரென்று நம்மைக் கைகழுவி விட்டுப் பின்னால் ஓடுகிறாரே!' என்று நினைத்து....'' குறும்புத்தனமாய்ச் சிரித்தான் குருசாமி.

''அப்படி ஓடிப் போய் அவளிடம் சொல்ல முடியாமல் தவித்து, எப்படியோ ஒரு வழியாய்ச் சரி செய்து கொண்டு வந்திருக்கிறேன்.''

''பாவம்! நீங்கள் பட்ட பாட்டை உங்கள் முகம்தான் சொல்லுகிறதே!-இருங்கள், உள்ளே போய் அந்த நந்தியிடம் இரண்டு வார்த்தைகள் பேசி அதை நன்றாய்க் குளிப்பாட்டி விட்டு வருகிறேன். இப்போதெல்லாம் சாமி வரம் கொடுத்தால் போதாது; பூசாரி தான் முக்கியம்.''

சற்று நேரத்துக்கெல்லாம் முருகையனுக்கு நன்றி கூறிவிட்டு மகிழ்ச்சியோடு திரும்பினான் குருசாமி. மழையினால் வியாபாரம் பாதிக்கப்பட்டதுகூட முருகையனுக்கு ஒரு பொருட்டாகத்தோன்றவில்லை. மற்றவர்களுக்குச் சின்னஞ்சிறு உதவிகள் செய்வதனால் ஏற்படும் ஆனந்தம் அவன் உள்ளத்தில் நிரம்பி வழிந்துகொண்டிருந்தது.

**ம**று நாள் மழை பெய்ய வில்லை. வானம் நீலம் பாய்ந்து கிடந்தது. கிழமையும் ஞாயிற்றுக்கிழமை. ஆகவே கடற்கரை, மனிதர்களின் கூட்டத்தால் மலர்க் காடு போல் விளங்கியது. வெள்ளை உடை உடுத்த ஆண்களும், வண்ண நிறங்களில் உலவிய பெண்களும் குழந்தைகளும், ஒரே உயிர்த் துடிப்புடன் அலைமோதிக் கொண்டிருந்தார்கள் மணல்வெளியில்.

முருகையன் அன்றைக்குப் பம்பரம் போல் சுற்றியலைந்து, முதல் நாள் செய்யாத விற்பனையையும் சேர்த்துக் கவனித்தான். ஒரே வேளையில் இரண்டு மூன்று பக்கங்களிலிருந்து அவனுக்கு அழைப்பு வந்தது. அங்குமிங்குமாக உற்சாகத்துடன் நடந்து திரிந்தான்.

"இந்தாப்பா! உன்னிடம் 'பொட்டடோ சிப்ஸ்' இருக்கா? 'கேஷ்யூநட்ஸ்' இருக்கா?" என்று ஆங்கிலமும் தமிழும் கலந்த மொழியில் அவனிடம் கேட்டாள் ஒரு பெண். உருளைக் கிழங்கு வறுவலும் அவனிடம் இல்லை; முந்திரிப் பருப்புக்களும் இல்லை.

என்றாலும், அங்கே ஐந்தாறு பெண்கள் ஒன்றாகக் கூடி அமர்ந்திருந்ததால், தன்னிடம் உள்ள வேறு பொருள்களை விற்பனை செய்யலாம் என்ற எண்ணத்துடன் அவர்களுக்கு மத்தியில் போனான் முருகையன். தன்னிடமுள்ள பண்டங்களின் பட்டியலை வியாபாரரீதியில் ஒரு மூச்சக் கூறி முடித்தான்.

"சிப்ஸ் இல்லேன்னா, போயேன்பா!" என்று கத்தினாள் ஒரு பெண்.

திடுக்கிட்டுக் குரல் வந்த திசையில் திரும்பினான்; அவளும் அப்போதுதான் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். யாரது? யாரது?...

வெகு வேகமாகக் கால்கள் மணலில் பதிவது தெரியாமல் நடந்தான் முருகையன். திரும்பிப் பாராமல் நடந்தான். கொந்தளிக்கும் அலைகடலுக்குள்ளே புகுந்து செல்வது போன்ற பிரமை அவனுக்கு.

பிறகு எந்த வியாபாரமும் அவன் செய்யவில்லை. அவனுக்குத் தலை சுற்றியது; மயக்கம் வந்தது; ஒரு படகின் மறைவில் போய்த் 'தொப்'பென்று குப்புற விழுந்தான். மணலில் கடல் நீருக்குப் பதிலாகக் கண்ணீர் பாய்ந்தது.

தான் மிக மிகத் தாழ்ந்தவனாகப் போய் விட்டது போல் அவனுக்கோர் எண்ணம். செய்யக் கூடாத குற்றத்தைச் செய்து விட்டது போல் ஒரு தவிப்பு. மணலில் புதைத்த முகத்தை வெகு நேரம் திருப்பவே இல்லை.

நேரம் சென்றது. கடலுக்குள்ளிருந்து பெரியதொரு வட்டக் கோளமாக நிலவு கிளம்பியது. அப்போதும் முருகையன் எழுந்திருக்கவில்லை.

"அத்தான்!"

குரல் மெய்யான குரலாக இருக்க வேண்டுமே என்று அவன் துடித்தான். ஆனால் குரலோ திரும்பத் திரும்ப ஒலித்தது. பிறகு ஒரு பெண் அவன் அருகில் வந்து மணலில் அமர்வதையும், அவள் மென் கரம் அவன் தோளைப் பற்றி உலுக்குவதையும் அவன் உணர்ந்தான்.

"அத்தான்! என்ன இது?"

சித்திரா மட்டுமே அவனருகில் இப்போது இருந்தாள். அவளுடைய தோழிகள் யாரையும் காணவில்லை. அலைகள் பொங்கியெழுந்தன; நிலவு பொன்னைப் பொழிந்தது. (தொடரும்)

# நார்டன்




## சைக்கிள்கள்

கரடுமுரடான பாதைகளில்
சொகுசாய் ஓட அட்மிரல்





ஹிந்த் சைக்கிள்ஸ் லிமிடெட், ஓர்லி, பம்பாய்—18.

ASP/HC/177

ஹிந்த் பிரேம்களும் போர்க் கம்பிகளும் உறுதிக்கும் பலத்துக்கும் இன்று அகில இந்தியப் புகழ் பெற்றுவிட்டன. 'ஹிந்த்' சைக்கிள் பிரேம்களும் போர்க்குகளும் உறுதியோடும் பலத்தோடும் சிறந்து விளங்குவதால் எண்பது சத விகிதத்துக்கு மேல் ரிக்ஷாக்களில் உபயோகப் படுத்துகிறார்கள். இதற்குக் காரணம் இந்தியன் ஸ்மெல்ட்டிங் அண்டு ரிபைனிங் கம்பெனியார் தயாரித்தளித்துள்ள பித்தளை ஸோல்டரிங்கினால் உறுதியாகப் பற்றவைத்திருப்பதுதான்!

*ஸோல் ஆர்கனைஸர்கள் :*

**பி. கே. ஜாபி & கோ., 99, நைனியப்ப நாயக்கன் தெரு, சென்னை-3**

---



# வட்டமேஜை

## மந்திரியின் மாறுபாடான உவமை

மந்திரி சி. சுப்பிரமணியனார் காஞ்சீபுரம் பொதுக் கூட்டத்தில் காங்கிரஸ்காரர்களைப் பாண்டவர்களுடனும், ராஜாஜியைப் பீஷ்மர் துரோணர்களுடனும் ஒப்பிட்டுக் கூறினார்.

மகாபாரதக் கதை பூலோகத்தில், பாரத நாட்டில் பாமர ஜனங்கள் வரை எட்டியுள்ள ஓர் இதிகாசம். அதை ஒரு மந்திரி இப்படி மாற்றிப் பேசியிருப்பது வியப்பைத் தருகிறது. பீஷ்மர், துரோணர் முதலியோர் கௌரவர்களை விட்டுப் பிரிவதற்குக் காரணம் செஞ்சோற்றுக் கடன். ராஜாஜி காங்கிரசுக்கு இவ்வாறு கடன்பட்டிருக்கவில்லை. ஏனெனில் சோறூட்டிக் காங்கிரஸை வளர்த்தவர்களிலேயே அவர் ஒருவர்.

திருதராஷ்டிரன் — பாண்டு குடும்பம் ஒன்று சேர்ந்து இருந்ததுபோல் சீரும் சிறப்புமாகச் சிறந்திருந்தது காங்கிரஸ். கருமத்தின் கட்டுப்பாட்டில் திருதராஷ்டிரன் குடும்பத்திலிருந்து பாண்டவர்கள் பிரிந்தது போல் பின்பு பிளவுபட்டது காங்கிரஸ். பாண்டவர்கள் போல் பிரிந்த சில பண்புள்ள பெரியோர்கள் 'சுதந்திர'க் கட்சியை உருவாக்கினர்.

பாண்டவர்களுக்கு உற்ற தோழனுகவும், ஆன்ற ஆசானுகவும், ஊக்குவிக்கும் அமைச்சனுகவும் கிருஷ்ண பரமாத்மா விளங்கினர். அது போல் ராஜாஜி பிரிந்து வந்த பெரியோர்களின் பிரியமான பற்றுக்கோலாக விளங்குகிறார். எஞ்சியுள்ள காங்கிரஸ்காரர்கள் கௌரவர்களாக நிற்கின்றனர். காங்கிரஸ் கட்சியில் பரிவு கொண்டு பிரிய மனமற்று, கட்சியின் குறைகளை நீக்கப் பாடுபடும் பெரியோர்களும் இருக்கின்றனர். பீஷ்மராகவும், துரோணராகவும். அவர்களை வேண்டுமானுல் மந்திரி கூறலாம்.

நான் பாண்டவர்களுக்கு உடன்பிறந்த சகோதரனென்று தெரிந்தும், அவர்களுடன் சேர முடியாமல் தவித்த கர்ணனைப் போல், தாம் ராஜாஜியால் முன்னுக்குக் கொண்டு வரப் பட்டவர் என்று சொல்லிக் கொள்ளும் மந்திரி அவர்கள் இவர்களுடன் (சுதந்திரக் கட்சியுடன்) சேர முடியாமைக்கு வருந்துகிறாரோ! இந்த உவமை அவருக்குப் பொருத்தமாகவும், அதிகப் பெருமை தரக் கூடியதாகவும் இருக்கும்.

சென்னை
27-10-61

அ ருக்மிணி

## பரிதாப நிலை

சென்னை மேற்கு மாம்பலத்தில் கேசவப் பெருமாள் நகர் நூற்று ஐம்பது கல் வீடுகளையும் இருநூறு குடிசைகளையும் கொண்ட ஏழை மக்கள் வாழும் பகுதியாக 1956-ம் வருடத்திலிருந்து ஏற்பட்டது. இங்கு சுமார் மூவாயிரம் மக்கள் வாழ்கிறார்கள். நிலை இப்படியிருந்தும் இந்தமாதிரி ஓர் இடம் இருப்பதே சென்னை மாநகராட்சிக்கும் சென்னை அரசாங்கத்துக்கும் 1960-ம் வருடம் வரையில் தெரியாமல் இருந்து வந்ததென்றால் இந்த நிலைமை என்னவென்று கூறுவது?

இந்த வட்டாரத்தில் உருப்படியான ரோடு ஒன்றுகூடக் கிடையாது. பல குட்டைகளில் தண்ணீர் நிற்பதையும் அதன் மூலம் கொசு வளர்ச்சி அடைவதையும் காணலாம்.

காலரா, அம்மை, மலேரியா போன்ற கொள்ளை நோய்களை எந்த நேரமும் காணலாம். அந்த மாதிரி துரதிர்ஷ்டவசங்கள் நேர்ந்தால் வியாதியஸ்தர்களை அழைத்துச் செல்லக்கூட வசதி கிடையாது. மழைக்காலத்தில் நிலை வெகு பரிதாபம். சாக்கடை நீரிலும், சேற்றிலும் மக்கள் நீந்திச் செல்வதைக் காணலாம்.

எல்லாவற்றுக்கும் பிரதானமாகத் தெரு விளக்குகளே கிடையாது. இவையெல்லாம் எடுத்துக் கூற ஸ்தல ஸ்தாபன மந்திரியைப் பேட்டி காணச் சென்றால் பேட்டி கிடைக்க வில்லை. மனுப் போட்டால் பதில் கிடையாது.

ஆனால் 'மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்குள் ஒவ்வொரு கிராமத்துக்கும் ரோடும் விளக்கும் போடுவோம்' என்று காங்கிரஸ் பேரிகை கொட்டுகிறது. இதை நாங்கள் என்னவென்று கூறுவது?

"கூட்டத்திற்கூடி நின்று
கூவிப் பிதற்றலின்றி
நாட்டத்திற் கொள்ளாரடி கிளியே!
நாளில் மறப்பாரடி!"

என மகாகவி பாரதியார் சொன்னதுதான் நினைவுக்கு வருகிறது.

சென்னை
31-10-61

வா. ரா. சீனிவாசன்

## கல்வி இலாகா கவனித்து விட்டது

சென்ற இதழில் 'கல்வி இலாகா கவனிக்குமா?' என்ற தலைப்பில் ஒரு கடிதம் வெளிவிட்டோமல்லவா? அந்த இதழ் வெளியாகு முன்பே கல்வி இலாகாவானது கடிதத்தில் கண்டிருந்த குறையைக் கவனித்துப் பரிகாரம் அளித்து விட்டது என்று அதனை எழுதிய (மாஜி) 'பாதிக்கப்பட்ட ஆசிரியர்' தெரிவிக்கிறார். செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கும் பழைய சம்பளமே கிடைக்கச் செய்திருக்கிறார்கள் என்று அவர் அறிவிக்கிறார். மகிழ்கிறோம்.

— ஆசிரியர்

## மார்க் விஷயம் ஒரு ரிமார்க்

எஸ். எஸ். எல். ஸி. தேர்வுக்குப் பெற வேண்டிய மார்க்குகளை மாற்றி அமைத்ததால் பல மாணவர்களுக்குப் பெரும் இன்னல் நேர்ந்துள்ளது. புதிய ஏற்பாட்டின்படி தமிழுக்கு இருநூறு மார்க்; தமிழில் தேர்ச்சி பெற்றால் தான் பரீட்சையில் தேறியதாகக் கருதப்படும். இதே சமயம் ஹிந்தி அல்லது சமஸ்கிருதம் படிப்பவர்கள் அந்த மொழிப் பரீட்சையில் வாங்கும் மார்க்குகள் மொத்தத்தில் சேராது என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. இதனால் முதலிலிருந்து சிறப்புத் தமிழ் படிக்காமல், பொதுத் தமிழ் மட்டுமே படித்து வந்த மாணவர்களுக்கு மிகுந்த சிரமம் உண்டாகியுள்ளது. எனவே மொத்த மார்க்குகளை ஐந்நூறாகக் குறைத்தாலோ, அல்லது சம்ஸ்கிருத, ஹிந்தி மார்க்குகளை மொத்தத்தில் கூட்டினாலோ தான் இம்மொழிகளைக் கற்போருக்கு நீதி வழங்க முடியும்.

புதுக்கோட்டை
31-10-61

பத்மா

# தமிழ் கூறும் நல்லுலகம்

எஃகுத் தொழில் நகரமாகிய ரூர்கேலாவில் வாழும் தமிழர்கள் சமீபத்தில் ரசிகரஞ்சனி சபா என்ற ஒரு கலை ஸ்தாபனத்தை நிறுவியிருக்கின்றனர். இயல், இசை, நாடகம் ஆகிய முக்கலைகளைப் பரப்புவதே சபாவின் நோக்கமாகும். கலை நிபுணர்களைக் கொண்டு கச்சேரிகள் நிகழ்த்தித் தமிழர்களும் மற்றும் பலரும் ரசித்து மகிழ ஏற்பாடு செய்யப் போகின்றனர்.

அக்டோபர் ஐந்தாம் தேதி குமாரி கமலாவின் நாட்டியம் நடைபெற்றது. கமலா குழுவினரின் நடனத்தைத் தமிழ் மக்களும், தென்னகத்தோரும், மற்றும் ஜெர்மானிய நிபுணர்களும் கண்டுகளித்தனர்.

* * *

அக்டோபர் இருபத்திரண்டாம் தேதி மாலை ஆறு மணிக்குக் கார்க்கி இராம மந்திரத்தில் பூனா சரஸ்வதி வித்தியாலயா யூனியன் உயர்நிலைப்பள்ளிச் செயலாளர் திரு எஸ். ஆர். சபாபதி அவர்கள் தலைமையில் பம்பாய் கோரேகான் தமிழ்ச்சங்கத் தலைவர் திரு ஓ. க. வே. மணியம் அவர்கள் "கர்ணனும் கும்பகர்ணனும்" என்னும் பொருள் பற்றிச் செவிக்கினிய அரியதோர் இலக்கியச் சொற்பொழிவு நிகழ்த்தினார். பாரத நாட்டுப் பழம்பெரும் இதிகாசங்களாகிய இராமாயணம், மகா பாரதம் இவ்விரண்டிலிருந்தும், கர்ணன், கும்பகர்ணன், இவர்களின் ஒன்றுபட்ட தர்மங்கள் மாறுபட்ட கொள்கைகள், அரும் பெரும் குணாதிசயங்கள் — இவை பற்றி விரிவாகவும், அழகாகவும் தகுந்த மேற்கோள் கொண்டு பேசினார். கடைசியில் கலாமந்திரத்தின் செயலாளர் திரு க. சுவாமிநாதன் அவர்கள் நன்றி நவிலக் கூட்டம் இனிது முடிந்தது.

* * *

கல்கத்தா சௌத் இந்தியா கிளப்பின் முப்பத்தைந்தாவது ஆண்டு விழா சென்ற மாதம் விமரிசையாக நடைபெற்றது. செங்காலிபுரம் பிரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்கள் சபையின் வளர்ச்சியையும் சேவையையும் பாராட்டிப் பேசினார். 22-ந் தேதி அங்கத்தினர்கள் தினத்தன்று, கிளப்பின் ஆதரவில் நடைபெற்ற பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. அங்கத்தினர்களும், அவர்களது குழந்தைகளும் கலந்து கொண்ட கேளிக்கை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. முக்கியமாக ஏழு வயதுச் சிறுவன் தேவன் பக்கவாத்தியங்களுடன் சிறு கச்சேரி செய்தது வியக்கத் தக்கது. மற்றும் குமாரிகள் ஜெயம், கப்புலக்ஷ்மி ஆகியோரின் குரலிசையும், பேபி சித்திரலேகாவின் நடனமும் பாராட்ட வேண்டிய அம்சங்களாகும்.

23-ந் தேதி கிளப் அங்கத்தினர்களே பங்கு கொண்டுள்ள "நந்தனார்" நாடகமும் விமரிசையாக நடைபெற்றது.

உங்களுடைய

# அழகு

## மங்குகிறதா?

...அப்படியானால்
உடனே ஆவன
செய்யுங்கள்.

உங்களின் விலை மதிக்கமுடியாத அழகை எவ்விதத்திலும் காப்பாற்ற நீங்கள் விரும்புகிறீர்கள். ஆனால் உங்கள் கூந்தல் நரைக்கத் தொடங்கியவுடன் அழகும் குன்றிவிடுகிறது. அழகை இழந்தபின் எல்லாவற்றையும் இழந்தது போல்தான். இல்லை, இந்நிலை உங்களுக்கு ஏற்படக்கூடாது. ...உங்கள் கூந்தல் தன் செழுமையை ஒருக்காலும் இழக்கக்கூடாது. அதுவும், சிறந்த நறுமணம் கமழும் கூந்தலைக் கருமையாக்கும் தைலமான "லோமா" எளிதில் கிடைக்கும்போது "லோமா" சாதாரணமான கூந்தலைக் கருமையாக்கும் தைலமல்ல. அது கூந்தல் அலங்காரத்திற்கு சிறந்த தைலமாகும். லோமாவில் சேர்க்கப்பட்டிருக்கும், வனத்துடன் போஷாக்கு அளிக்கும் பொருள்கள், உங்கள் கூந்தலை மிருதுவாகவும், அழகாகவும், அடர்த்தியாகவும், வளரச்செய்கிறது. லோமாவை உபயோகிப்பதால் உங்கள் அழகு ஒருபோதும் மங்காது...
உண்மையிலேயே அழகு வளருகிறது.




**லோமா**

அதன் தரத்திற்காக
உலகெங்கிலும்
விரும்பப்படுகிறது.

பூரண ஏஜெண்டும் ஏற்றுமதியாளர்களும்:
**எம். எம். கம்பாத்வாலா**
அகமதாபாத்-1 (இந்தியா)

ஏஜெண்டுகள்:
**ஸி. நரோத்தம் & கம்பெனி**
பம்பாய்—2.

சென்னை ஏஜெண்டுகள் ஜே பாலபாய் கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜெண்டுகள் செருன் கதீர் கோ., 41, 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

# பாட்டியம்மா

"அடியே, அம்மாக்கண்ணு....!"

"இந்தா பாட்டி! எம் பேரு தனமின்னு எத்தனை தடவை சொல்றது? பேரு தெரிய லேன்னு 'நர்ஸ்'ஸின்னு கூப்பிடேன்."

"கோவிச்சுக்காதே பேத்திப் பொண்ணு. பேருலே என்னம்மா இருக்குது? ஒத்தரை யொத்தர் கூப்பிட்டுக்கிறதுக்குத்தானே. எம் பேரு என்னுன்னு எனக்கு ஞாபகமில்லே. எல்லாரும் 'பாட்டியம்மா'ன்னுதான் கூப்பிட றாங்க. அதைப்பத்தி நான் வருத்தப்படவா செய்யறேன்?"

"பாட்டி! நிஜமாகவே உம்பேரு உனக்குத் தெரியாதா?"

"பின்னே, பொய்யா சொல்றேன். இப்ப எனக்கு வயசு எழுபதுக்குக் கூடவே யிருக் கும். அவர் போயி முப்பது வருஷமாவது. இருக்கும் போதும் அவர் என்னைப் பேரு சொல்லிக் கூப்பிட்டதில்லே. 'அடியே...'ன்னு தான் கூப்பிடுவார். சில சமயம் 'ஏண்டி...'ம் பார். மத்தவங்களும் 'பாட்டி'ன்னே பேரு வச்சுட்டாங்க. அதனாலே...,எங்க அப்பா, அம்மா எனக்கு வச்ச பேரு மறந்தே போயிட்டுது."

"அது போகட்டும்.... இப்ப கால் வலி எப்படி யிருக்கு?"

"நீட்ட — மடக்க முடியலே. அசைஞ்சா வலிக்குது!...எம்மா, எங்கால் ஒப்பேறுமா?"

"எலும்பு முறிஞ்சு போயிட்டுது பாட்டி! அதை ஒரு இனுசா ஒட்ட வச்சுக் கட்டியிருக் கோம். இன்னும் ஒரு வாரம் போனத்தான் தெரியும். உனக்கு வயசு அதிகமாயிட்டுது பாரு; முறிஞ்ச எலும்பு சேருகிறது கொஞ்சம் கஷ்டந்தான்!....பார்ப்போம்."

நர்ஸ் தனம் நழுவினாள். பாட்டி ஒரு பெரு மூச்சு விட்டாள்.

பக்கத்துக் கட்டிலில் கிடந்த ஒரு நோயா ளிப் பெண் , "பாட்டி! காலில் எப்படி அடி பட்டது?" என்று வினவினாள்.

"அதை ஏன் கேக்கறே போ!...அமாவாசை யாச்சே. சூரியோதயத்துக்கு முன்னாடி நதி யிலே போய் முழுக்குப் போட்டுட்டு வருவோ மின்னு. பொல பொலன்னு விடியும் போதே புறப்பட்டேன். எப்படியோ ஆற்றங் கரைக்குப் போய்ச் சேர்ந்தேன். என்னோட கெட்ட காலத்தைப் பாரு; வழக்கமா நான் குளிக்கிற இடத்திலே நாலு ஜனம் நின்னுது. தள்ளிப் போய்க் குளிக்கலாம்னு பத்தடி நடந்தேன். வயல் தண்ணி ஊத்துப் பறிஞ்சு படிக்கட்டுலே பாசி பிடிச்சிருந்தது. எனக்குத் தெரியாது. அதிலே கால் வச்சேனோ இல்லியோ வழுக்கித் தடாலுன்னு விழுந்து விட்டேன்.."

"பாவம்! உம்....., அப்புறம்?"

"அவன் நல்ல மகாராஜன். யார் பெத்த மவனோ அப்பதான் வண்டியிலே வந்து இறங்கி னான். என்னை அந்த வண்டியிலே தூக்கிப் போட்டு இங்கே கொண்டு வந்து சேர்த்தான். அவன் பிள்ளை குட்டி நல்லா யிருக்கணும்!" என்று சொல்லிக் கண்களை மூடிக் கையெடுத் துக் கும்பிட்டாள் பாட்டி.

சில விநாடிகள் கழிந்த பின், "பாட்டி! உன்னைப் பார்க்கிறதுக்கு ஒருத்தரும் வரலியே, ஏன்? மகன் — மகள் யாரும் இல்லியா?" என்றாள் அந்தப் பெண்.

அந்தக் கேள்விக்குப் பாட்டியால் பதில் சொல்ல முடியவில்லை. அவள் உதடுகள் துடித் தன. கண்களில் நீர் கொப்பளித்தது. அதை மறைப்பதற்காக முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"ஏம் பாட்டி அப்படித் துக்கப்படறே? பிள்ளையே பிறக்கலியா, இல்லே......பிறந்து செத்துப் போயிட்டாங்களா?" யாருக்கும் நியாயமாக எழக்கூடிய சந்தேகந்தானே? அதைத்தான் கேட்டாள் அந்த மங்கை.

உடனே பாட்டிக்குக் கோபம் வந்து விட் டது. "அம்மாடி! நிறைஞ்ச அமாவாசையும் அதுவுமா, எம்பிள்ளைகளை அப்படி யெல்லாம் சொல்லாதே. ராஜாக்கமாதிரி நாலு மவனும், ராஜாத்திகளாட்டம் ரெண்டு பொண்ணும், குடும்பமும்—குடித்தனமுமா, சீரும்—சிறப்புமா இருக்காங்க, தெரிஞ்சுக்க!" என்று சிந்திய கண்ணீரை விரல்களால் நீவித் தரையில் சுண்டினாள்.

"பின்னே ஏன் அவங்க வரலே? நீ விழுந்தது அவங்களுக்குத் தெரியாதா?"

"ஏன் தெரியாது? ஆற்றில் நின்றவர்கள் அனைவருக்கும் தெரியுமே. இன்னுமா அவர்கள் காதுக்கு எட்டாமலிருக்கும்?"

மீண்டும் பாட்டி மௌனமானாள். அடி வயிறு பற்றி எரிந்தது. உள்ளம் கொதித்து விம்மலும் பொருமலுமாக வெளி வந்தன.

அதையுணர்ந்த அப்பெண்ணும் பாட்டியை அதிகம் வற்புறுத்தாமல் விட்டு விட்டாள்.

பாட்டி அந்த ஆஸ்பத்திரிக்கு வந்து நான்கு நாட்கள் ஆகி விட்டன. எழுபது வயது தாண்டியும், கால் எலும்பு முறிந்து 'ஆப்ப ரேஷன்' நடந்து , கட்டுப் போட்டுக் கட்டி லில் கிடந்தாலும் அவளுடைய உற்சாகமான பேச்சும் — சிரிப்பும் அந்த வார்டிலிருந்த இதர நோயாளிகளுக்குப் பெரும் ஆச்சரி யத்தையும் தைரியத்தையும் அளித்தன. நோயின் வாதனையைத் தாள முடியாமல் முன்பு முனகிக் கொண்டும் கதறிக்கொண்டும் கிடந்தவர்கள் பாட்டியைப் பார்த்த பின் அடக்கிக் கொண்டனர். சதா நேரமும் பாட்டி யின் வாயைக் கிளறி விட்டு அவளுடைய பேச்சைக் கேட்பதில் அவர்களுக்கு மன ஆறுதல் கிடைத்தது. நேரம் போவதும் தெரி வதில்லை. அவளும் பேசுவதற்குக் கொஞ்சங் கூடச் சளைக்கவில்லை.

பாட்டியின் உண்மையான நிலை; அவளது இரண்டு பெண்களும் வெளியூர்களில் வெகு தொலைவில் இருந்தனர். கடைக்குட்டி மகன் கல்கத்தாவில் வசித்தான். அவன் மாதா மாதம் பத்து ரூபாய் அவளுக்கு அனுப்புகிறான். மற்ற மூன்று புதல்வர்களும் ஆளுக்கு ஐந்து ரூபாய் கொடுத்தார்கள். அந்த இருபத்தைந்து ரூபாயில், தனக்கென்று தனியாக ஓர் ஓலைக் குடிசை அமர்த்திக் கொண்டு, தன் கையாலேயே சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டு, தனது கடைசிக் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தாள். அவளுடைய சொத்து, சுகம், உலகம் எல்லாம் அந்தக் குடிசைதான்!

தான் எவ்வளவு கஷ்டப்பட்டாலும் தனது பிள்ளைகள் பெரிய பெரிய வீடுகளில் மனைவி மக்களோடு சந்தோஷமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதில் பாட்டிக்குப் பரம திருப்தி. அதோடு, தனது மூத்தமகன் இரண்டு தாரத்தை மணந்தும் அவன் பெயர் சொல்ல ஒரு பிள்ளையில்லையே என்ற சிறிய மனக்குறை

இப்படியேதான் இருக்கும்'' என்று முதலில் சொல்லி விட்டுத்தான் பின்பு பேச்சை ஆரம்பிப்பாள்.

பாட்டியின் தாம்பத்திய வாழ்க்கையைப் பற்றி யெல்லாம் ஒரு நாள் நவநீதம் என்ற நர்ஸ் கேட்டாள்.

''நீங்களெல்லாம் என்னமா பெண்கள்! அந்தக் காலத்திலே....'' என்று ஆரம்பித்து, ''நாங்கள் வாழ்ந்ததைப் போல் ஒரு நாள் உங்களாலே இருக்க முடியுமா?'' என்று தலையை ஒரு வெட்டு வெட்டினாள் பாட்டி. ''என்னோட மாமி உசுரோட இருக்கிற வரைக்கும் எங்க வீட்டுக்காரர் எதிரே நின்னு பேசினதில்லியே. இப்ப கொடுக்கைப் பிடிச்சுக் கிட்டே சுத்திக் கிட்டுத் திரியுது களே, அப்படியா?'' என்று முகத்தில் அஷ்ட கோணங் களையும்



ஏ. சுப்பையா

யும் உண்டு. அந்த மகனுக்கு ஐம்பது வயதாகியும் கூட, இன்னும் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கையோடு, 'அவனுக்கும் ஒரு பிள்ளை பிறந்து, அதை என் கண்ணால் பார்த்தால்தான் நான் செத்தாலும் என் நெஞ்சு வேகும்' என்று அடிக்கடி சொல்வாள். என்னே, தாயின் உள்ளம்!

ஆஸ்பத்திரி நர்சுகளுக்கு எப்பொழுதாவது ஓய்வு கிடைத்தால் பாட்டியிடம் பேசிக் கொண்டிருப்பதற்கு வந்து விடுவார்கள். அவள்பேச்சில் அவ்வளவு ரஸமும் கவர்ச்சியும் இருந்தன. எந்த நர்ஸைப் பார்த்தாலும், 'உம் முகம் என் மூத்த மவளைப் போல் இருக்குது. உம் வயசுலே அவ அச்சு — அடையாளம்

கழித்துக் காட்டினாள். ''பகல்லே பாம்பும் — கீரியும் போல, ராவுலே குறவனும் - குறத்தியும் போல் இருப்போம்; தெரியுமா? நான் ரெண்டு பிள்ளை பெறுகிற வரைக்கும் அவர் முகம் எப்படி யிருக்குமென்றே எனக்குத் தெரியாதே! எங்க மாமி, அவருக்குச் சோறு போடக்கூட என்னை விட மாட்டா. அவர் பின்கட்டுக்கு வந்தால் நான் கூடத்துக்குப் போகணும்—கூடத்துக்கு அவர் வந்தால் நான் பின்கட்டுக்கு ஓடணும்! பகல் நேரத்திலே எப்பவாவது நாங்க ரெண்டுபேரும் பேசுறதோ சிரிக்கிறதோ எங்க மாமி பார்த்துட்டாளோ அவ்வளவுதான்! அன்னிக்கு வீடு ரெண்டா யிடும், ஆமா! ரெண்டு நாளைக்குச் சோறு — தண்ணியே என் கண்ணிலே காட்ட மாட்டா? அப்படி யெல்லாம் நாங்க வாழ்ந்தோம், இன்னிக்கி என்னடான்னு... ஹூம்!..'' என்று தலையில் அடித்துக் கொண்டு சிரிக்கும் பாவனையில் உதட்டைப் பிதுக்கினாள் பாட்டி.

இப்படிப் பேச்சையும் நடிப்பையும், கேட்பதற்கும் பார்ப்பதற்கும் யார்தான்விரும்பாம லிருப்பார்கள்? கேட்டுச் சிரிக்காமல் எப்படி யிருக்க முடியும்?

இம்மாதிரிப் பேச்சின் மூலம் நர்சுகளை மாத்திரமல்ல, இதர நோயாளிகளையும், அவர்களது உறவினர்களையும் பாட்டி தன்வசப் படுத்தி விட்டாள். ஊருக்குப் பாட்டியானது போலவே ஒரு வாரத்துக்குள் அந்த ஆஸ்பத்திரிக்கும் அவள் 'பாட்டி' யாகி விட்டாள்.

அன்று காலையில் வழக்கமாகப் பார்க்கும் லேடி டாக்டர் லீலாவதி, பாட்டியின் பக்கம் வந்தாள். முதுகுக்கு இரண்டு தலையணைகளை முட்டுக் கொடுத்துப் பாட்டியைக் கட்டிலில் சாய்த்து உட்கார வைக்கும்படி நர்சுகளுக்குக் கட்டளை யிட்டாள். அவ்வாறு உட்கார்ந்த பின் காலின் பல பாகங்களையும் கையால் அமுக்கி, 'இங்கே வலிக்கிறதா, இங்கே வலிக்கிறதா' என்று கேட்டாள். வலி கொஞ்சம் குறைந்திருப்பதை அறிந்து, ''எழுந்து நடக்க முடியுமா?'' என்றாள்.

''காலை அசைப்பதற்குக் கூட முடியவில்லையே'' என்றாள் பாட்டி.

இரண்டு தோள்களையும் தாங்கிப் பிடித்து, பாட்டியைத் தூக்கி நிறுத்தும்படி நர்சுகளிடம் கூறினாள் லீலாவதி. அவ்விதம் நிறுத்தப்பட்ட பொழுது எலும்பு முறிந்த இடது கால் தரையில் படாமல் தானாகத் துடித்துக் கொண்டிருந்ததைக் கவனித்தாள்.

''பாட்டி! அந்தக் கால் அவ்வளவுதான், பிரயோஜனப் படாது!'' என்று கூறி, அவளை மெதுவாகக் கட்டிலில் உட்கார வைக்கும்படி நர்சுகளுக்குச் சமிக்ஞை செய்தாள்.

''இனிமேல் நான் நடக்கவே முடியாதா?'' என்று பரிதாபமாக வினவினாள் பாட்டி.

''நடக்கலாம்! அந்த நர்சுகள் உன் தோள்களைத் தாங்கிப் பிடித்துக் கொண்டது போல் இரண்டு 'கவட்டைக் கொம்பு'களின் பலத்தில் தான் நடக்க முடியும்.''

''அதனாலென்ன? பரவாயில்லை. நான் சாகும் வரையிலே மத்தவங்களுக்குத் தொந்தரவாகவோ, பிறத்தியான் உதவியை எதிர் பார்த்தோ இருக்கக் கூடாது. அவ்வளவு தான் என்னோட ஆசை. அதுக்காக நான்

என்ன வேணுமானாலும் செய்யத் தயார்!'' என்று முதியவள் ஆர்வத்தோடு கூறினாள்.

''ஏன் பாட்டி! உன் மக்கள் உன்னைப் பார்த்துக் கொள்ள மாட்டார்களா என்ன?''

''ஏன் மாட்டாங்க? நாலு பேரு இருக்காங்க என்னைத் தூக்கிச் சுமக்கிறதுக்கு! இருந்தாலும் அவங்களுக்கு அது சிரமந்தானே?'' என்று தன் மக்களைப் புகழ்ந்தே பேசினாள் பாட்டி. ஆனால் அந்த நேரத்தில் அவள் மனம் என்ன பாடுபட்டதோ?

மறு தினம் பாட்டி தானாகவே எழுந்து கட்டிலில் உட்கார்ந்திருந்தாள். லேடி டாக்டர் தானே ஒரு தடவை நடந்து காட்டினாள். பின்பு கொம்புகளைப் பாட்டியின் கையில் கொடுத்து, இரு பக்கமும் இரண்டு நர்சுகளைப் பாதுகாப்பாக நிற்கச் செய்து நடக்கச் சொன்னாள்.

நடப்பதற்குத் துடிக்கும் குழந்தை போல் எழுந்தாள் பாட்டி. கொம்புகளை இரண்டு கட்கத்திலும் இடுக்கிப் பலமாகப் பிடித்துக் கொண்டு வலது காலின் பலத்தில் நின்ற அவள், சரீரத்தின் பளுவைக் கொம்புகளின் மீது சுமத்தி, காலைத் தூக்கி ஓரடி முன்னால் வைத்தாள்; தடாலென்று பின்னால் சாய்ந்து விழப் போனவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டனர் பாதுகாப்புக்கு நின்ற நர்சுகள்.

''பாட்டி! முதலில் கொம்புகளிரண்டையும் ஓரடி முன்னால் வைத்துக் கொண்டு பின்பு காலை நகர்த்த வேண்டும்'' என்று சொல்லிக் கொடுத்தாள் லீலாவதி.

பாட்டி அடுத்த அடி சரியாக எடுத்து வைத்து விட்டாள். இரண்டாவது, மூன்றாவது நான்காவது அடிகளையும் நகர்த்தினாள். கீழே விழவில்லை. அவளடைந்த சந்தோஷத்தைப் பார்க்க வேண்டுமே! பற்களற்ற பொக்கை வாயால் சிரித்துக் கொண்டு, ''அம்மம்மா! எனக்கு நடக்கத் தெரிஞ்சுட்டுது. உதவிக்கு ஆள் இல்லாமலே என்னால் நடக்க முடியும்!'' என்று லேடி டாக்டரிடம் உற்சாகத்தோடு கூறினாள்.

அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த ஆண்கள் சிரித்தனர். பெண்களின் கண்கள் கலங்கின. அடிக்கடி பாட்டியுடன் பழகும் தனம், — புரையோடிய புண்களால் புழுப் போல் துடிப்பவர்களையும், குடல் சரிந்து குற்றுயிராய்க் கிடப்பவர்களையும், நிமிஷத்துக்கு நிமிஷம் அணுவணுவாய்ச் செத்துக் கொண்டிருப்பவர்களையும் பரிதாபத்தையும் பார்த்துப் பழகிப் போனதால் உறுதியான நெஞ்சம் பெற்றிருந்தவள் — தன் கண்களில் பொங்கிவந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள் என்றால் அதிகம் விவரிப்பானேன்?

நர்சுகள் பாதுகாப்பில்லாமலே அந்த அறையில் அங்குமிங்கும் திரும்பித் திரும்பி நடந்தாள் பாட்டி. கொம்புகளைப் பிடித்திருந்த கைகளும், அக்குளும் நோவெடுத்தன. கட்டிலில் உட்கார்ந்து விட்டாள். வலது காலைத் தொங்கவிட்டு, இடது காலைக் கட்டில் மீது விறைப்பாக நீட்டியிருந்தாள். அதைத் தான் மடக்க முடியாதே!

''எப்படி இருக்கிறது பாட்டி?'' - இது டாக்டர் லீலாவதி.

''கை கொஞ்சம் வலிக்கிறது. இடது காலும், அசையும்போது இலேசாக நோவுது. எலும்பு முறிஞ்ச இடத்திலே சின்னப் பிடிப்பு



வடலூரிலுள்ள சேஷசாயி தொழிற்சாலைக்குச் சென்னை கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம் மேதி அவர்கள் விஜயம் செய்து பார்வையிட்டார். கவர்னருக்கு அருகிலே சேஷசாயி தொழில் ஸ்தாபனத்தின் தலைவர் திரு எஸ். நாராயணசாமி அவர்களைக் காணலாம்.

இருக்குது. அந்தப் பிடிப்பு சரியாயிட்டா கால் வலிக்காதுன்னு நெனக்கிறேன்.'' நம்பிக்கையோடு பேசினாள் பாட்டி.

''பயப்படாதே! எல்லாம் சரியாய்ப் போயிடும். நேரம் கிடைக்கும் போதெல்லாம் நடந்து பழகு. அப்படியானால் தான் கைகளில் தாய்ப்பு ஏற்படும், தோவெடுக்காது, வேகமாகவும் நடக்கலாம்.'' இவ்வாறு சொல்லி விட்டு லேடி டாக்டர் அங்கிருந்து நகர்ந்தாள்.

பாட்டி, அன்று பல தடவைகள் நடந்தாள். இதர நோயாளிகளின் ஆதரவும் அனுதாபமும் அவளுக்கு உற்சாக மூட்டின. எலும்பு முறிந்த இடத்திலிருந்த பிடிப்பு மாத்திரம் விட்டு விட்டால் கொம்பில்லாமலே நடக்கலாம் என்று கூட அவளுக்குத் தோன்றியது.

அடுத்த நாள் ''நான் வீட்டுக்குப் போகணும்'' என்றாள் பாட்டி.

லேடி டாக்டர் ''ஏன் அவசரப்படுகிறாய்?'' என்று கேட்டாள்.

''தீபாவளி வருதே! ஊரெல்லாம் ஒரே கோலாகலமா யிருக்கும். என் வீட்டிலே ஒரு தீபமாவது ஏற்ற வேண்டாமா?''

''இன்னும் மூன்று நாள் இருக்கிறதே. தீபாவளிக்கு முதல் நாள் நீ போனால் போதாதா?''

''போதும்மா, போதும்!''

''சரி, அப்படியானால் நாளை மறு நாள் அழைத்துப் போகும்படி சொல்லியனுப்பு.''

''வேண்டாம்மா!''

''என்ன வேண்டாம்?''

''என் வீட்டிலேயிருந்து யாரையும் வரச் சொல்ல வேணும். நானே மெதுவாக நடந்து போயிடுவேன்.''

''அவ்வளவு தூரம் நடக்க முடியுமா?''

''ஏன் முடியாதம்மா? கொம்பில்லாமலே நடந்து போயிடுவேன், பாருங்க.''

லீலாவதி சிரித்து. ''அதெப்படி முடியும்?'' என்று கேட்டாள்.

''அந்தப் பிடிப்பு இருக்குதுன்னு சொன்னேனே, அது சரியாய்ப் போயிட்டா கொம்பு எதுக்கு?''

''சரியானால் உன் அதிருஷ்டம்தான்.''

லீலாவதியின் தலை மறைந்ததும் பாட்டி தன் போராட்டத்தைத் தொடங்கிவிட்டாள். இடது காலை மடக்கி நீட்டுவதற்கு முயற்சி செய்தாள். முடியவில்லை. முறிந்த இடம் வேதனை யளித்தது. என்றாலும், முயற்சியில் அவள் தளர்ச்சி யடைய வில்லை. அதிலேயே தன் கவனம் முழுவதையும் செலுத்தினாள். முயற்சி வெற்றி பெறவில்லை யென்றால் கவட்டைக் கொம்பு இருக்கவே இருக்கிறது என்ற தைரியம் அவளுக்கு.

அன்றும் மறுநாளும் பாட்டி அதே வேலையாக இருந்ததால் நம்பிக்கை பலப்படும் முறையில் எலும்புப் பிடிப்பு சிறிது தளர்ந்து காலை இலேசாக மடக்க முடிந்தது. இன்னும் ஒரேயொரு இரவு. ஆஸ்பத்திரிக்கும் பாட்டியின் குடிசைக்கும் மத்தியில் நின்றது. அந்த இரவும் கழிந்து விட்டால், தனது இன்பக் குடிசைக்கு நடந்தே போகலாம். தீபாவளித் தீபம் தன் குடிசையிலும் பிரகாசிக்கச் செய்யலாம் என்ற ஆசை அவள் உடலில் புத்துணர்ச்சியை உண்டுபண்ணியது.

கடவுளைத் தியானம் செய்தாள் பாட்டி.

''ஹே கிருஷ்ணா! ஆறு மக்களையும் தந்து அனாதையாகவும் என்னைத் தவிக்கவிட்டிருக்கிறாய். இந்நிலையில் என்னை முடமாகவும் ஆக்கி விடாதே!

''ஹே அனுதரக்ஷகா! முடமாகி விட்டால் என் கௌரவம் குறைந்து விடுமே என்று நான் அஞ்சவில்லை. இந்த உடலில் உயிர் ஒட்டிக் கொண்டிருக்கும் வரையில் உணவு வேண்டுமே. என்ன செய்வேன்? பிச்சை யெடுக்கலாம்; அது என் பிள்ளைகளுக்குக் கேவலமாயிற்றே! 'நொண்டிக் கிழவியின் பிள்ளைகள்' என்று என் மக்களுக்கு அவமானம் ஏற்பட்டு விடுமே! அதற்காவது மனமிரங்கி நடக்கப் பலத்தைக் கொடு, பரந்தாமா!''

இவ்வாறு மனமுருகப் பிரார்த்தனை செய்து கொண்டே பாட்டி தன் இடது காலை மடக்கினாள். அவள் பிரார்த்தனைக்கு உடனே பலன் கிடைத்தாற் போல் அந்தப் பிடிப்பு 'பட்' டென்று விட்டு விட்டது!

பொழுது விடிந்தது. பாட்டி அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். பத்து மணி யடித்தும் பாட்டி எழுந்திருக்கவில்லை.

நர்ஸ் தனம் வந்தாள். ''பாட்டி!'' என்று குரல் கொடுத்தாள். ''என்ன! அவ்வளவு தூக்கமா?'' என்று பாட்டியை அசைத்தாள்.

''ஐயோ! பாட்டீ....!'' என்று தன்னை யறியாமலே அலறி விட்டாள் தனம்.

அதைத் தொடர்ந்து ஆஸ்பத்திரி முழுதும் ''பாட்டி! பாட்டி!'' என்று எதிரொலித்தது.

# டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.




உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அநேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம். குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும் இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது

# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெறுவதற்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்

# அன்பே ஆரமுதே

**தி. ஜானகிராமன்**

## அத்தியாயம் முப்பத்திரண்டு

டொக்கி ஏதோ சொல்வதற்குத் தயங்கியபடியே மென்று விழுங்குவதைக் கண்டு அனந்தசாமி, ''என்ன தயங்குகிறாய்? சொல்லேன்'' என்றார்.

''அப்பாவுக்குக்கூடத் தெரியாது, மாமா! இப்ப சொல்ல வேண்டாம் என்று இருந்து விட்டேன். எனக்குப் பயமாயிருக்கு.''

''எதைக் கண்டு பயம்?''

''ரங்கன் நேற்று ஒரு காரை ஓட்டிக் கொண்டு வந்தார். திருவொற்றியூர் போய்ச் சுவாமி தரிசனம் செய்யலாம் என்று கூப்பிட்டார். அப்பாவும் நானும் அவரோடு போனோம். தரிசனம் பண்ணி விட்டுப் பிராகாரத்தில் வலம் வரும் போது, 'இந்தச் சுவாமி பேர் தெரியுமா?' என்று கேட்டார் ரங்கன். 'தியாகராஜர்' என்றேன். ஏன் கேட்கிறார் என்று முதலில் புரியவில்லை. அப்புறம் 'தியாகராஜர் என்றால் அர்த்தம் தெரியுமோ?' என்று கேட்டார். என் ஒன்று விட்ட அத்தை புருஷருக்குக் கூடத் தியாகராஜர் என்றுதான் பெயர். அடிக்கடி கேட்ட பெயர்தான். கேட்டுக் கேட்டுப் பழக்கமாகிவிட்டது. அதனால் பேருக்கு என்ன அர்த்தம் என்று ஒருதடவைகூட நான் நினைத்துப் பார்த்ததில்லை. நான் யோசித்துக் கொண்டே விழிக்கிறதைப் பார்த்து, 'தியாகராஜர் என்றால் தியாகம் பண்ணினவர்களுக்கு எல்லாம் ராஜா, பெரிய தியாகம் செய்கிறவர்' என்றார் ரங்கன். 'என்ன தியாகம் பண்ணினார் இவர்?' என்று கேட்டேன். அவருக்குச் சொல்லத் தெரியவில்லை. சற்று யோசித்து 'மும்மலங்களையும் நீக்கினவர், மூன்று குணங்களையும் விட்டவர்' என்று சொல்லி விட்டு 'நான் கூட எல்லாவற்றையும் விட்டு விடப் போகிறேன். அப்பா அம்மா சொத்து கொடுக்க மாட்டேன், வீடு கொடுக்க மாட்டேன், வீட்டில் இருக்கவிட மாட்டேன் என்று சொன்னால் எல்லாவற்றையும் தியாகம் பண்ணி விட்டு ஓடி வந்து விடுவேன்' என்றார். 'ஏன் அவர்கள் அப்படிச் சொல்லணும்?' என்று கேட்டேன். 'பின்னே உன்னைக் கலியாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன் என்று சொன்னால் இந்த மாதிரி என்





**கணவர்**: என்ன அதிசயம் இருக்கு! இந்தத் தீபாவளிக்கு என்னை அங்கு வந்து கொண்டாடும்படி மாமனார் கூப்பிட்டிருக்கிறார்.

**மனைவி**: அட கஷ்டமே, அந்த லெட்டர் நம் தலை தீபாவளிக்கு வந்ததுன்னு !

அப்பா சொல்லலாமோ இல்லையோ' என்று எங்கேயோ பார்த்துக் கொண்டு சொன்னார் ரங்கன். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. 'ஏன் பதிலே பேசமாட்டேங்கிறே. உன்னைக் கலியாணம் பண்ணிக்கிறதுக்காக நான் எதையும் தியாகம் செய்யத் தயார் என்றால் நீ நம்பவில்லையா ?' என்று கேட்டார். நான் அதற்கும் பதில் பேசவில்லை. கடைசியிலே 'நான் தியாகம் பண்ணப் போகிறேன் என்று சொல்லத்தான் இந்தக் கோயிலுக்கு அழைத்து வந்தேன்' என்றார். நான் அப்போதும் ஒன்றும் சொல்லவில்லை. பேசாமல் காரில் வந்து ஏறிக் கொண்டோம். வீட்டு வாசலில் கார் வந்து நின்றதும், 'டொக்கி ! நீ இன்றைக்குச் சொல்வாயோ, நாளைக்குச் சொல்வாயோ? நான் பொறுத்துக் கொண்டிருக்கிறேன். உனக்காக எதையும் பொறுத்துக் கொள்ளத் தயார். தியாகம் செய்யத் தயார் என்று மறுபடியும் சொல்லி விடுகிறேன்' என்று விட்டில் உட்கார்ந்து கொண்டே சொன்னார். கதவைத் திறந்து விட்டு இறங்கினார். உள்ளே வந்து ஒரு நிமிஷம் இருந்தார். பிறகு போய் விட்டார். மணி ஆறரைதான் ஆகியிருந்தது. அப்பா ஊருக்குக் கிளம்பத் தயார் பண்ண ஆரம்பித்தார். நான் 'ஒரு வாரம் கழித்துப் போகலாமே?' என்றேன். கொஞ்ச நேரம் யோசித்தார். பிறகு தந்தி கொடுத்து விட்டு வந்தார்.'' இவ்வளவையும் தலை நிமிராமல் மெதுவாக நின்று நின்று சொல்லி முடித்தாள் டொக்கி.

''ம்....'' என்று புருவத்திடையே கிள்ளிக் கொண்டார் அனந்தசாமி. ''அப்புறம்?'' என்று கேட்டார்.

''அப்புறம் ஒன்றுமில்லை.''

''ஒன்றுமில்லாமல் எப்படி இருக்கும்? ராத்திரி முழுக்க இதைப் பற்றி யோசித்திருப்பாயே!''

''ஒன்றுமே யோசிக்கவில்லை, மாமா! சாப்பிட்டேன். படித்தேன். நீங்கள் சொல்லிக் கொடுத்தாற்போல் 'ராம ராம ராம' என்று சொல்லிக்கொண்டேயிருந்தேன். கோதண்டமும் கிரீடமும் உயரமாக இருந்தன. பத்து அடித்தது கேட்டது. 'பதினென்று கேட்கவில்லை. பத்தரைகூட க் கேட்கவில்லை. அப்படியே தூங்கி விட்டேன்.''

''அப்படியா? நிஜமாகவா தூங்கிப் போய் விட்டாய்?''

''நிஜமாகவா என்று ஏன் மாமா கேட்கிறீர்கள்? அப்படிக் கேட்கும்படியாக நான் உங்களிடம் பேசியிருக்கிறேனா?'' என்றாள் டொக்கி.

''இனிமேல் கேட்கவில்லை. சரி, அப்புறம் அவர் சொன்னதைப் பற்றியெல்லாம் நினைக்கவே இல்லை நீ?''

''இல்லவே இல்லை. அப்பாவை லீவை நீடிக்கச் சொல்லி விட்டு நீங்கள் வந்தால் உங்களிடம் சொல்லுகிறது. இல்லா விட்டால் காலமே உங்களைத் தேடிப் பிடித்தாவது சொல்லி விடுகிறது என்று தீர்மானம் பண்ணிக் கொண்டேன். அப்புறம் அதைப் பற்றி நினைக்கவே இல்லை. அடிக்கடி அந்த நினைவு வந்தது. வேண்டும் என்றே அதை மறந்து தூங்கி விட்டேன்.''

''அப்பாவிடம் சொல்லக்கூடாதோ?''

''அவர் என்ன சொல்லப் போகிறார். சரி என்றுதான் சொல்லுவார். 'அப்பாடா, ஒரு வழி பிறந்ததடாப்பா' என்று குளிர் விட்டுப் போகிறாற் போல் இருக்கும் அவருக்கு. நடந்ததெல்லாம் தான் அவருக்குத் தெரியுமே. நல்லவேளையாகப் பகவான் கண்ணைத் திறந்தார் என்று சந்தோஷப்படுவார். அம்மாவிடமும் நான் சொல்லவில்லை. இருநூறு ரூபாய்க்காக நான் தினமும் கலியாணம் செய்து கொண்டால் கூட அவளுக்குச் சந்தோஷமாகத்தானிருக்கும்.''

அம்மாவைப் பற்றிச் சொன்னதைக் கேட்காதது போல, ''ஏன் ரங்கன் நல்லவராகத்தான் இருக்கிறார். நல்ல

படிப்பு. இதைவிட நல்ல இடம் தபக பண்ணினாலும் கிடைக்காதே'' என்றார் அனந்தசாமி.

''ஆமாம், மாமா!'' என்று கலகல வென்று சிரித்தாள் டொக்கி. ''ஆனால் தபக பண்ணாமலே இத்தனை அதிர்ஷ்டத் தையும் நான் அடையவேண்டியிருக் கிறதே என்றுதான் வருத்தமாயிருக்கு.''

''நீ சொல்வது எனக்குப் புரியவில் லையே. வேடிக்கை பண்ணுகிறாயா?''

''இல்லே, மாமா. நான் பேசுவது வேடிக்கையாகவா இருக்கிறது?'' என்று மறுபடியும் சிரித்தாள் டொக்கி.

''பின்னே?''

''எனக்கு ஒன்றுமே புரியவில்லே.''

''எல்லாம் புரியும். நன்றாகவே யோசித்துப் பார்த்தால் புரிகிறது!''

''யோசித்துத்தான் பார்க்கிறேன். எனக்குச் சுமாராக நடிக்கத் தெரியும்; பாடத் தெரியும். ஆடவும் கற்றுக் கொண்டு வருகிறேன். எனக்குப் பெரிய நட்சத்திரமாக வர வேண்டும் என்று ஆசை. பட்டணத்திலே ஜாகை போட் டதே அதுக்குத்தான். இவர் நேற்று இப்படிச் சொன்னதும் எனக்கு ஒன்றும் புரிய வில்லே.''

''புரியவில்லே, புரியவில்லே என்று சொல்கிறதுதான் எனக்குப் புரியமாட் டேன் என்கிறது.''

''ஒரு சமயம் அவரைக் கலியாணம் செய்து கொண்டு விடலாம் போலிருக் கிறது. அதே சமயம் பயமாயும் இருக் கிறது. ஆனால் நேற்று அவர் கோவிலில், சொல்கிற வரையில் அப்படி எக்கச்சக்க மாகக் கேட்டு வைப்பார் என்று நான் நினைக்கவே இல்லே.''

''சினிமா, கச்சேரி என்று தனி யாக இருந்துவிடுகிறது. இல்லே, கலியாணம் செய்து கொள்கிறது —இரண்டுக்குள் எதைச் செய்கிற தென்று புரியவில்லேயா?''

''அவரைக் கலி யாணம் பண்ணிக் கொண்டு, சினிமா, கச்சேரி என்று நடிக்கக் கூட அவர் சம்மதிப்பார் என்றுதான் தோன்றுகிறது'' என்றாள் டொக்கி.

''பின்னே செய்துகொண்டு விடேன்.''

''இப்படி அழ அழப் பேசுவதைக் கேட்கவா மாமா, நான் வந்தேன், உங் களிடம்?'' என்று நிமிர்ந்து ஒரு தடவை அவரைப் பார்த்து விட்டுக் குனிந்து கொண்டாள் டொக்கி.

அனந்தசாமிக்கு வாயடைத்து விட் டது. இவள் குழந்தையா, பெரியவளா என்றே நிதானிக்க முடியவில்லே. அவ ளுடைய அசாத்திய அறிவையும், அழ கையும் கண்டு நெஞ்சு கண்ணீர்தான் விட்டது. பார்த்துக் கொண்டே உட் கார்ந்திருந்தார். தலேயிலும் வைத்துக் கொள்ள மாட்டார்கள், பூஜைக்கும் சேர்க்க மாட்டார்கள், சூரியகாந்தி போன்ற பூக்களே. அது பாட்டுக்குச் சூரியனேப் போகிற பக்கமெல்லாம் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு நிற்கும். அந்த மாதிரி—

''மாமா, உங்களுக்குத்தான் நல்ல வேளேயாக உடம்பு சரியாயில்லேயே.... நான் இங்கேயே இருந்து, கஞ்சி, வெந் நீர் ஏதாவது போட்டுக் கொடுத்துக் கொண்டிருக்கிறேனே'' என்று அவர் எண்ணப் போக்கில் குறுக்கிட்டாள்.

''பேஷாக இரு. ஆனால் அம்மா ஒன்றியாக இருக்கிறாளே.''

''எப்பொழுதும் அவள் ஒன்றி தானே.. நூறு பேர்கள் இருந்தாலும் அவள் தனியாகத்தான் இருப்பாள்.''



அது சரி, எனக்கென்ன பிரமாதமாகச் சொல்ல இருக்கிறது? ஒரு வெந்நீர் கஞ்சி அதை மங்களப் பாட்டி போட்டுக் கொடுத்து விடுகிறாள்.''

''நான் போட்டுக் கொடுத்தால் குடிக்க மாட்டீர்களா?''

''குடிப்பேன், அம்மா! அவள்தான் செய்து போடுகிறாளே.''

''சரி, அவர் செய்து போடட்டும். நான் பாட்டுக்கு இருந்து விட்டுப் போகிறேன். வீட்டுக்குப் போனால் அவர் வருவார். பார்க்காமல் இருக்க முடியாது. பயமா யிருக்கிறது.''

இரண்டு மூன்று கணங்கள் யோசித்து, ''சரி, இரு. எனக்கும் பேசக் கூச ஆளில்லாமல் தவிக்கிறேன். ஆனால் இங்கேயும் வரத்தானே செய்வார் ரங்கன்?'' என்று கேட்டார் அனந்தசாமி.



''நீ நம்ப சேந்தமங்கலம் சிங்காரம் மகனா?''

''ஆமாங்க!''

''நீ பட்டினத்திலே என்ன பண்றேன்னு அவனைக் கேட்டேன். ஹாட்டையும் சூட்டையும் பூட்டையும் போட்டுக்கிட்டுப் பட்டணத்தையே சுற்றிக்கிட்டு இருக்கேன்னு சொன்னாரே.''

சிறிதுநேரம் பேசாமல் இருந்துவிட்டு, ''சரி, மாமா, நான் வருகிறேன்..... அம்மாவும் ஒன்றியாக இருப்பாள். நடமாடினாலும் தானே எல்லாம் செய்ய முடியாது!'' என்று விடைபெற்றுக் கொண்டாள் டொக்கி.

''மறுபடியும் எப்பொழுதுவருவாய்?''

''நான்தான் இருக்கிறேன் என்று சொன்னேன். நீங்கள்தான் வேண்டாம் என்கிறீர்கள்.''

''உனக்கென்ன இப்படிக் கோபம் வருகிறது?'' என்று சிரித்தார் அவர். ''சரி, இன்றைக்கு அம்மாவுக்கு உதவியாக இரு. நாளைக் காலையில் வந்து சாயங்காலம் வரைக்கும் நீ இங்கேயே இருக்கலாம்.''

''வரேன், மாமா! காலை காப்பிக்கே வந்துவிடுவேன்'' என்று மலர்ந்து போய்க் கத்தினாள் அவள். தகப்பனாரிடமும் அதைச் சொன்னாள். அவள் துளிக்கூடச் சிரமமில்லாமல் குரலை வதைக்காமல் தகப்பனாரிடம் பேசிச் செய்தியைச் சொல்லி விடுவதைக் காண அவருக்கு வியப்பாகத்தான் இருந்தது.

போகும் பொழுது, ''டொக்கி! ஒரு சின்னக் காரியம் செய்வாயா?'' என்றார்.

''என்ன மாமா?''

''அதோ, அந்தப் புத்தகத்திலே ஒரு கார்டு இருக்கு. அதை எடு'' என்று கூறிக் கார்டை வாங்கிக் கொண்டதும் அதில் விடுவிடுவென்று எழுதி, ''இதைக் கௌடிய மடத்துக்குப் பக்கத்திலே தபாலாபீஸ் இருக்கிறது. அதில் போட்டுவிடு'' என்று டொக்கியிடம் கொடுத்தார்.

''யார் மாமா, இது, சந்திரா?''

''உன்னைப் போல் ஒரு பெண். அவள் அம்மா மருந்து சாப்பிடுகிறாள், என்னிடம். அது சரி, பிறருக்கு எழுதின கடிதாசைப் பார்க்கக் கூடாது தெரியுமோ....?''

''விலாசம்தான் மாமா, பார்த்தேன். பின்பக்கம் எழுதியிருக்கிறதைப் பார்த்துவிடமாட்டேன்.''

பிறகு ஒரு வாரம் கழித்துப் போகப் போவதாகச் சொல்லி விட்டு மனைவியின் உடல் நிலை, ஆபீஸ், ஓய்வு முதலியவற்றைப் பற்றி ஒரு நிமிஷம் பேசிவிட்டு விடைபெற்றுக்கொண்டார் ராஜாங்கம்.

''வரேன், மாமா. நாளைக் காப்பிக்கே வருவேன்'' என்றாள் டொக்கி.

''காப்பிக்கு என்ன? கோலம் போடுவதற்கே வந்து விடேன்'' என்றார் அனந்தசாமி.

இருவரும் மாடிப் படி இறங்கிச் சென்றார்கள்.

இறங்கி இரண்டு கணத்துக்கெல்லாம் திரும்பி ஓடிவந்தாள் டொக்கி. முகம் பேயறைந்தாற் போல் ஒரு வெளுப்பு. ஒரு திகில். ராஜாங்கம் பின்னாலேயே வேகமாக வந்தார். டொக்கி நிலைக்கு அப்பால் எங்கோ பார்த்துக் கொண்டு நின்றாள்.

''ஏம்மா?'' என்று கேட்டார் அனந்தசாமி. டொக்கி பதிலொன்றும் பேசவில்லை.

''என்ன சுவாமி இது! உங்களுக்குக் கூடவா ஜுரம்?'' என்று கூப்பாடு

போட்டுக் கொண்டே வந்தார் கப்பராம பாகவதர்.

அவருக்குப் பின்னால் பட்டுச் சட்டையும் இரண்டு அங்குல அகலம் மயில்கண் போட்ட வெண் பட்டு வேட்டியும் கொச கொசக்க அருண்குமார் வந்து கொண்டிருந்தான்.

கடைக்கண்ணாலேயே டொக்கி நிற்கும் பக்கம் பார்க்க முயன்றான். ''வணக்கங்க'' என்றான் அனந்தசாமியைப் பார்த்து. ஓர் எட்டாகப் படியிறங்கும் நிலைக்குள் பாய்ந்து மறைந்தான் அவன். ராஜாங்கமும் தலையைக் குனிந்தவாறே அந்த நிலைக்குள் மறைந்தார்.

மறைந்து விட்டு ஓடினது டொக்கி தான் என்பதை அருண்குமார் தெரிந்து கொள்ள வில்லை என்று அனந்தசாமிக்கு உணர முடிந்தது.

''சாமிக்கு என்னங்க, உடம்பு?'' என்று புன்சிரிப்புடன் வந்த அருண்குமாரின் முகம் திகைப்பும் கவலையுமாக மாறிவிட்டது.

''என்ன ஸ்வாமி, இது!'' என்று கேட்டார் பாகவதர்.

''ஒன்றுமில்லை. சாதாரண ஜுரம். அவ்வளவுதான்.''

''உங்களுக்கா?'' என்றார் பாகவதர்.

மூன்று நான்கு நாட்களாக அனந்தசாமி வரக் காணுமே என்றுதான் பார்க்க வந்தானும் அருண்குமார்.

''என்னங்க இது! தாழம்பாயும், பனங்கட்டையும்! ஜுரம் போதாதுன்னு இதுங்க வேறே வதைக்கணுமா, சாமியை!''

''ஏதோ இதிலேயாவது படுத்திண்டிருக்காரே, தரையிலே கிடந்து உருளாமே...!''

''இதென்ன படுக்கை சாமி?'' என்று வேதனையுடன் முகத்தைச் சுளுக்கினான் காசிலிங்கம்.

''காசி! இதுதான் அவருக்குப் படுக்கை! வீட்டுக்குப் போனவுடனே ஏதாவது கடைக்குப் 'போன்' பண்ணி வெல்வெட்டு மெத்தையும் தலை அணையுமாக அனுப்பச் சொல்லிவிட வேண்டாம்'' என்று எச்சரித்தார் பாகவதர்.

அருண்குமார் சிரித்தான். ''ஐயாவுக்கு நான் எது நினைச்சாலும் உடனே அதைத் துலைக்கப் பார்த்துக் கண்டு கட்டை போட்டுட வேண்டியது.''

''அப்படின்னா, நான் சொன்னது சரிதானா?''

''ஏன் படாதுங்கிறீங்க? சாமி சரின்னாக்கூட நீங்க....''

''சாமி சரின்னு சொன்னா, நான் கொடுக்கிறதை வேண்டாங்கலே. இந்த வயசிலே எனக்குச் சுக்ராச்சாரியார் பட்டம் வேறயா?''

''ஏன், சாமி!'' என்று அனந்தசாமியின் பக்கம் திரும்பினான் அவன்.

''பாகவதர் எப்பொழுதும் தவறாகப் பேச மாட்டாரே.''

நொந்து போய் அருண்குமார் அவரைப் பார்த்தான். நாலு விநாடிகள் கழித்து, ''சரி, நான் கொடுத்து வைக்கலே'' என்று மூச்சு விட்டான்.

''யாருப்பா?'' என்று அனந்தசாமி படிக்கட்டு நிலையைப் பார்த்தார். பாகவதரும் காசியும் திரும்பிப் பார்த்தார்கள். பதினைந்து இருபது பேர்கள் இருக்கும். நாலைந்து சிறுவர்கள். இளைஞர்கள் ஆறேழு பேர்கள். வளர்ந்த பெண்கள் ஐந்தாறு. சின்னப் பையன்கள் ஆளுக்கொரு சிறு நோட்டுப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு அருகே ஓடி வந்தார்கள்.

''யாரப்பா அது?''

''கையெழுத்து!'' என்று காசியிடம் கையை நீட்டினான் ஒரு பையன்.

''போ, தம்பி!'' என்று முகத்தைத் திருப்பிக் கொண்டான் காசிலிங்கம். வெட்கம் பிடுங்கித் தின்றது அவனை. முகத்தைக் கனித்துக்கொண்டே நகர்ந்து கொடுத்தான், முள் மேல் உட்கார்ந்திருப்பது போல.

''போட்டுப் போகச் சொல்லும்.''

வேண்டா வெறுப்பாகப் போட்டான் காசி. திரும்பக் கூட்டத்தைப் பார்த்துக் குமைந்தான். ''ஐயா, உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு. சாமிக்கு உடம்பு சரியாயில்லே. பார்க்க



"வேண்டாம்! என்னோடு நீ பேசாதே! நான் உண்ணாவிரதம் இருக்கப் போகிறேன்....!"

"ஒரு வாய் சாப்பிட்டு விட்டுப் போய் எப்படி வேணுமானா இருங்கோளேன். யார் வேண்டாம்னா?"

வந்தது தப்புன்னு இப்பவே எழுந்து போய் விடுகிறேன். போயிடட்டுமா? உங்களுக்கு வேறே வேலையே கிடையாதா....ம்... போங்கய்யா போங்க சொல்றேன்."

பாகவதருக்கே வியப்பாக இருந்தது. அவன் இதையெல்லாம் ரசித்துப் பூரிக்கிறவன்தான். இன்று ஏன் இப்படி வேதனைப்படுகிறான் என்று அவருக்குப் புரியவில்லை.

"இப்பப் போறீங்களா, இல்லையா?" என்று அதட்டினபிறகு தயங்கித் தயங்கி விட்டு, இடத்தைக் காலி பண்ணி மறைந்தது கும்பல்.

"அப்பா!" என்று கூனிக் குறுகினான் காசி.

"ஏதோ ஆசை பார்க்கிறதுகள்.... அதுக்கு இத்தனை உஷ்ணமாகப் பேசுவானேன்!" என்றார் பாகவதர்.

"என்னைக் கிளறி விடாதீங்களேன். இதென்ன பைத்தியக்காரத்தனம்!" என்று விளக்கெண்ணெய் சாப்பிட்டாற் போல் முகத்தை வைத்துக் கொண்டு அலுத்துக் கொண்டான் காசிலிங்கம்.

"இந்த வேலை மெனக்கெட்ட மக்களெல்லாம் சேர்ந்துதான் பைத்தியமா ஆக்கிட்டாங்க ஆளை. கூத்துக் கொட்டகையிலேதான் மொய்க்கிறதென்று பார்த்தால், இங்கே கூடவா!.. சாமி! குழந்தை கால் விரலெல்லாம் தானா அசைக்கிறான். அப்படியாகப்பட்ட மாயம் பண்ணியிருக்கீங்க. குளிகை குளிகைன்னு சொல்றாங்களே அதெல்லாம் நெசம்தான்னு நினைக்கிறேன். எனக்கு ஒண்ணு கொடுங்க. சாப்பிடறேன். வேணுங்கறப்ப உருத் தெரியாம, நடமாட முடியுமாமே. அந்த மாதிரி ஒண்ணு தின்னக் கொடுங்க. நான் யார் கண்ணிலேயும் படாம இஷ்டம்போல நடமாடறேன்."

அவன் படுகிற வெட்கத்தையும் கூச்சத்தையும் கண்டு இருவரும் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

எழுந்து போய் அவன் நிலைக் கதவை இழுத்துச் சங்கிலியை நாதாங்கியில் மாட்டி விட்டு வந்து உட்கார்ந்து கொண்டான்.

ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். குழந்தை கால் பத்து விரலையும் அசைக்கிறான். அதைச் சொல்லும்போது நெஞ்சை அடைத்து அடைத்து வந்தது அருண்குமாருக்கு.. குழந்தை மாதிரி அழுதான். துடைத்துக் கொண்டு சிறிது நேரம் மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

"சாமி! என் வீட்டிலே காலடி எடுத்து வைச்சீங்க. எல்லாம் மாறிடிச்சு. பசும் சாணம் போட்டு மெழுகிக் கோலம் போட்டாப் போல ஆயிட்டேன் நான். பினாயில் அடிச்சாப்பல இல்லே. அதுவும் சுத்தம் பண்ணும். ஆனால் எனக்கு என் உள்ளாறெல்லாம் கோமயம் போட்டுத்துடைத்துக் கோலம் போட்டாப் போலத்தான் இருக்கு" என்றான் அவன் சற்றுக் கழித்து.

பாகவதர் முதுகு குளிர்ந்து ஒரு சிலிர்ப்பு உதறிற்று.

"சாமி, நல்லா ஓய்வு எடுத்துக்கிட்டு மெதுவா வந்தாப் போதும். உடம்பு நல்லாத் தேற வரைக்கும் வீட்டை விட்டு நகரக் கூடாது" என்றான் காசி.

"புறப்படலாங்களா? ஒரு மணி நேரம் சாமிக்குத் தொந்தரவு கொடுத்தது போதும். நாளைக்குக் குழந்தையை எடுத்துக்கிட்டு வரேன்" என்று கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே எழுந்தான் அவன்.

பாகவதர் ஒன்றும் பேசவில்லை. பெருமிதம் மட்டும் அவர் முகத்தில் கலை வீசிற்று.

"உங்க சிஷ்யனைப்போல உத்தமமான சிஷ்யனைப் பார்த்ததில்லே நான், பாகவதர்வாள்!" என்றார் அனந்தசாமி.

"நீங்க நல்ல கண்ணாடி. நல்ல கண்ணாடிக்கு முன்னாலேதான் நின்னு அழகு பண்ணிக்கத் தோணும். என் மாதிரி பொட்டைக் கண்ணாடியா?" என்று சொல்லிக் கொண்டே நகர்ந்தார் சுப்பராம பாகவதர்.

அரை நிமிஷத்துக்கெல்லாம் தெருவில் அருண்குமாரின் கார் போகும் ஓசை கேட்டது. (தொடரும்)




முயற்சியின் வெற்றியில் நாம் பெருமையடைகிறோம். கவர்ச்சியான தோற்றத்திற்குப் பளபளப்புடைய கருமையான கேசம் முக்கியம். அதற்குச் சிறந்தது வாஸ்மால்

**அழகுடன் திகழும் கேசம் வெற்றிக்கு அறிகுறி!**

வாஸ்மால் சிறந்த கூந்தல் தைலம். கூந்தலை கருமையாகச் செய்கிறது. கேசவளர்ச்சியை ஊக்குவிக்கிறது. தைலமாகவும், பொமேடாகவும், மோசடி செய்ய முடியாத மூடியுடைய பாட்டில்களில் எல்லாக் கெமிஸ்ட்டுகளிடமும் கடைகளிலும் கிடைக்கும்.





கூந்தலின் இயற்கை வளர்ச்சிக்குச் சிறந்ததான விஷேசச் சேர்க்கை வாஸ்மால். கேசத்திற்கு அதிகப்படியான பாதுகாப்பை அளிக்கிறது

**Vasmol**

கருமையை வளர்க்கும் கூந்தல் தைலம்

ஹைஜினிக் ரிசர்ச் இன்ஸ்டிடியூட்
தபால் பெட்டி 1192, பம்பாய்-1

சென்னை ஏஜெண்டுகள் :
ஆர். எஸ். கபூர் & கம்பெனி
பந்தர் தெரு :: சென்னை-1

# கற்பக விருக்ஷம்

## கு. அழகிரிசாமி



மாலை ஐந்து மணி அடிப்பதற்கு முன்பே சைதாப்பேட்டை ரயில்வே ஸ்டேஷனில் வந்து உட்கார்ந்து விட்டான் ஸ்ரீனிவாசன். கையில் ஒரு காசுகூடக் கிடையாது. இருந்ததெல்லாம் ஒரு மலிவு விலைப் பவுண்டன்பேனா, ஒரு வேஷ்டி, ஒரு சட்டை, சட்டையில் இரண்டு பிளாஸ்டிக் பித்தான்கள், அன்று மாலைப் பதிப்பாக வெளிவந்த ஒரு தமிழ்த் தினசரி, சந்தேகத் தெளிவுக்காக வாங்கிய ஓர் ஆங்கில தினசரிப் பத்திரிகை; இவ்வளவுதான். பிளாட்பாரத்தில் கோடியில் கிடந்த ஒரு பெஞ்சில் தனியாளாக ஒரு மணி நேரத்துக்கு மேலேயே உட்கார்ந்து கொண்டிருந்து விட்டான். இவனுக்கு முன்னும் பின்னும் இரண்டொரு பிரயாணிகளும், ஏகதேசமாக ஒரு ரயில்வே ஊழியரும் ஒரே ஒரு தடவை மட்டும் முதுகுக்குப் பின்புறமாக ஒரு போலீஸ்காரரும் நடந்து சென்றார்கள். அடிக்கடி குறித்த காலத்தில் மின்சார வண்டிகள் வருவதும் புறப்படுவதுமாக இருந்தன.

ஸ்ரீனிவாசன் பெஞ்சில் சாய்ந்துகொண்டு யாரையும் எதையும் பார்க்காமல், வானத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். விதிவிலக்காக மின்சார வண்டிகளை மட்டும் இரண்டொரு தடவைகள் பார்த்துவிட்டு முகத்தை மேல் நோக்கித் திருப்பிக் கொண்டான்.. வானத்துக்கும் இவனுக்கும் இடையே வெகு நேரம் வரைக்கும் ஒரு துளிக் கண்ணீர் திரை போட்டு மறைத்துக் கொண்டு நின்றது. கண்ணுக்குத் தெரியும் வானக் காட்சி மனசைப் போலவே கலங்கிப் போயிருந்தது. துயரத்தின் போது, வெளியிலும் தெளிவில்லை; உள்ளேயும் தெளிவில்லை. தெளிந்து, தீர்மானத்துடன், துணிவுடன் வந்த ஸ்ரீனிவாசனைத் துயரம் திமிர் திமிர் என்று பொங்கி எழுந்து கலக்கி அலைக்கழித்துக் கொண்டிருந்தது.

பயப்பட வேண்டியதற்கே பயப்படாமல் வந்தாகி விட்டது. அப்புறம் வேறு எதற்குப் பயப்படுவதிலும் அர்த்தமில்லை. இதனால்தான் டிக்கெட் இல்லாமலும் காசு இல்லாமலும் ஸ்டேஷன் பிளாட்பாரத்துக்கு உள்ளே வேகமாக வந்துவிட்டான். வீட்டுக்கு வெளியே உட்காருவதற்கு அது ஒன்றுதான் அவனுக்கு இடமாகப் பட்டது. வந்து சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, பெஞ்சில் அமர்ந்தான். முன் பின் தெரியாத பிரயாணிகளைத் தவிர வேறு யாரும் இல்லை. இது கொஞ்சம் ஆறுதலாக இருந்தது.

மாலை ஐந்து மணி அடித்தது. இருட்டுவதற்கு இன்னும் ஒன்றரை மணி நேரம் ஆகும். அது வரை அங்கேயே உட்கார்ந்திருப்பது என்ற முடிவு; உட்கார்ந்து கொண்டிருந்தான்.

வேகமாக ரயில் வண்டிகள் வந்து போயின. ஓட்டமும் நடையுமாக வந்து வண்டிகளில் தொத்திக்கொண்டிருந்தார்கள் பிரயாணிகள். சூழ்நிலை முழுதுமே ஓட்டமும் பரபரப்புமாக இருந்தது. ஆனால் ஓட்டமின்றிச் சாவதானமாக வேலை செய்து கொண்டிருந்தது கடிகாரம் ஒன்றுதான். அரை மணி கழிந்திருக்கும் என்று ஏறிட்டுப் பார்த்தால், ஐந்து நிமிஷம்கூட ஆகியிராது. இது அவனுடைய துன்பத்தைப் பெரிதாக்கிக் கொண்டிருந்தது. எத்தனை பேரைப் பற்றிய நினைவுகள் எத்தனை வருஷத்துச் செய்திகள், எத்தனைவித அனுபவங்கள், — எல்லாவற்றையும் மாறி மாறி ஒன்றுக்குப் பல தடவையாக நினைத்துப் பார்த்து, பெருமூச்சு விட்டு, சில சமயங்களில் தன்னுணர்வையும் இழந்து, கடைசியில் திரும்பிப் பார்த்தாலும், கடிகாரம் ஒரு சில நிமிஷங்களுக்கு மேல் தாண்டியிராது.

ஒரு விஷயத்தில் தவறு செய்து விட்டோம் என்றே ஸ்ரீனிவாசனுக்குத் தோன்றியது. தெருக்களில் சுற்றியலைந்திருந்தால், நேரம் வேகமாகக் கழிந்திருக்கும். ஒரு மணி நேரம் கால் போன போக்கில் திரிந்துவிட்டு அப்புறம் ஸ்டேஷனுக்கு வந்திருக்கலாம். எடுத்த எடுப்பிலேயே இங்கே வந்து உட்கார்ந்து, காலத்தை ஓட்டமுடியாமல் அவதிப்படுவதற்குத் தன்னுடைய முட்டாள்தனமே காரணம் என்று நினைத்து வருந்தினான். இனி என்ன செய்வது? என்ன செய்ய முடியும்? டிக்கெட் இல்லாமல் ஸ்டேஷனை விட்டு வெளியே போக முடியாது. எனவே, தானே புகுந்த சிறைக் கூடத்தில், இருக்க வேண்டிய காலத்தை இருந்தே தீர்ப்பதைத் தவிர வேறு வழியில்லாமல் போய் விட்டது.

இப்படிச் சிரமப்பட்டுத் திக்குமுக்காடிக் கொண்டிருந்த ஸ்ரீனிவாசனைத் திடீரென்று



"இவங்களுக்குக் குழந்தை சுபாவம். இவங்களுக்குப் பிடிச்ச புடவை எடுங்க!"

"அப்படியா? ஏம்மா உங்களுக்கு சாக்லேட் கலர் வேணுமா? பிஸ்கட் கலர் வேணுமா? பப்பர்மின்ட் கலர் வேணுமா....?"

ஒருவன் தன் வாய்ச் சொல்லால் தட்டி எழுப்பினான். அவன் ஸ்டேஷனைச் சேர்ந்த ஒரு சிப்பந்தி. அவன் கவனித்த வரையில், மூன்று வண்டிகள் வந்து போயும்கூட ஸ்ரீனிவாசன் ஒரு வண்டியிலும் ஏறாமல் உட்கார்ந்திருந்ததால் அருகில் வந்தான். "யாரப்பா ஏன் இங்கே உட்கார்ந்திருக்கிறாய்?" என்று கேட்டான். உடனே, "எங்கே போக வேண்டும்?" என்றும் கேட்டான்.

ஸ்ரீனிவாசனுக்கு உலகப் பிரக்ஞை வந்தது. ஒரு பதிலும் சொல்லாமல் எழுந்து நின்றான்.

"எங்கே போக வேண்டும்?" திரும்பவும் கேட்டான் ரயில்வே சிப்பந்தி.

ஸ்ரீனிவாசன் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "எழும்பூருக்கு" என்றான்.

"சரியாப் போச்சு, போ. எழும்பூருக்கு அந்தப் பக்கமாகப் போய் நில். இங்கே தாம்பரம் வண்டிதான் நிற்கும்" என்று சொல்லி ஸ்ரீனிவாசனை அவன் கிளப்பி விட்டான்.

'நல்ல வேளை' என்று ஸ்ரீனிவாசன் எழுந்து எதிர்ப்பக்கம் பிளாட்பாரத்தை நோக்கி நடந்தான். சிப்பந்தி தன் வேலையைக் கவனிக்கப் போய் விடவே, இவன் இந்தப் பிளாட்பாரத்தில் ஒரு மூலையைத் தேடிப் பிடித்து உட்கார்ந்தான். அப்பொழுதிலிருந்துதான் அவனுக்குப் பய உணர்ச்சி தோன்ற ஆரம்பித்தது. அந்த அளவுக்குத் துயர நினைவுகள் குறையலாயின. சில சமயங்களில் பயம் தாழ்ந்து, துயரம் பொங்கும். இந்த இரண்டும் இரண்டு அலைகளாக அவன் மனத்தில் எழுவதும் விழுவதுமாக இருந்தன.

ஒவ்வோர் ஆளைப் பார்க்கும்போதும் ஒரு சந்தேகம், ஒரு பயம் – அது ரயில்வே சிப்பந்தியாக இருக்கலாமோ என்று. அவன் பார்த்து விட்டால், இவனை முழுக்க முழுக்கச் சந்தேகித்து, 'டிக்கெட் இருக்கிறதா?' என்று கேட்பான். 'இல்லை' என்று பதில் சொன்னால் மறுகணமே ஸ்டேஷன் மாஸ்டர் முன்னிலையில் போய் நிற்க வேண்டி வரும். அப்புறம், தன் மீது குற்றம் சாட்டப்படும். அதைத் தொடர்ந்து வீட்டுக்குக் கொண்டு வரப்பட்டு......அதன் பின் என்ன நடந்தால் என்ன? வீட்டுக்குத் திரும்பி விட்டால் அப்பாவைப் பார்க்க வேண்டும்; அம்மாவைப் பார்க்க வேண்டும்; தங்கையைப் பார்க்க வேண்டும்; மூவருடைய கண்ணீரையும், கசப்பையும், சிதைந்த கனவையும் பார்க்க வேண்டும். ஒரு மனிதனுக்கு இத்தனையுமே அதிகம். ஆனால் ஸ்ரீனிவாசனோ இவற்றையும் தாண்டி, கன்யாவையும் வேறு பார்க்க வேண்டியிருந்தது. அவளைப் பார்ப்பது என்றால் தன் அவமானத்தையே கண்ணெதிரே பார்ப்பது என்றுதான் அர்த்தம். தனக்கு இனி உய்வில்லை, வாழ்க்கையில்லை என்று சொல்லாமல் சொல்லும் ஒரு கொடிய விதியைக் கண்ணெதிரே காண்பதற்கும் அதற்கும் வித்தியாசம் இல்லை. இவற்றைப் பார்ப்பதை விட, மரணத்தைப் பார்ப்பது எவ்வளவு சுலபம்; எவ்வளவு இதமானது! இப்படித் தோன்றி விட்டது அவனுக்கு. இந்த யோசனையுடனேயே ஸ்டேஷனை நோக்கிப் பத்திரிகையும் கையுமாகவே வந்தான். பத்திரிகையில் அன்று மாலை எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை முடிவுகள் வெளியாகி இருந்தன. தமிழ்ப் பத்திரிகையிலும் அவனுடைய நம்பர் இல்லை; ஆங்கிலப் பத்திரிகையிலும் இல்லை.

ஃ ஃ ஃ

கிருஷ்ணசாமி ஐயங்கார் தம் மகனுடைய எஸ். எஸ். எல். ஸி. படிப்பை ஒரு கற்பக விருட்சமாகவே கருதியிருந்தார். அவன் படித்துப் பாஸ் பண்ணி விட்டால், கற்பக விருட்சம் விரும்பியதையெல்லாம் கொடுக்காவிட்டாலும், ஒய்ந்து உட்காருவதற்கு நிழலாவது கொடுக்கும் என்பது அவர் நம்பிக்கை. வாழ்நாளெல்லாம் பட்ட துன்பங்களுக்கு ஒரு முடிவும் உண்டு, தமக்கு ஒரு விடிவு காலமும் உண்டு என்று அவர் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்து, நிகழ்காலத்தைத் தள்ளிக் கொண்டு வந்தார்.

அவருடைய குடும்பம் அப்படி ஒன்றும் பெரியதல்ல. மனைவி, மகன், மகள், அப்புறம் அவர்—இந்த நான்கு பேர்கள்தான்; ஏகாங்கியானாலும் போதிய வருமானமில்லாவிட்டால், தரித்திரத்திலிருந்து தப்புவது எப்படி? அவருக்குத் தொழில், பெருமாள் கோயில் பூஜை செய்வது. கோயிலோ அவரைப் போன்றே ஏழைமை நிலையில் இருந்தது: அந்தப் பகுதியில் வசித்து வந்த ஒரு குறிப்பிட்ட ஜாதியாருக்கு அந்தப் பெருமாள், குலதெய்வம். பூஜித்துக் கொண்டாட வேண்டியவர்களில் பெரும்பாலோர் வசதியான நிலையில் இல்லாததால், தெய்வத்துக்குச் சிறப்புப் பூசனையும் இல்லாது போய் விட்டது. பெரும்பாலும் இரண்டொரு பணக்கார வியாபாரிகளின் தயவில்தான் கோவிலும், கோவிலை நம்பிய கிருஷ்ணசாமி ஐயங்கார் குடும்பமும் நிலைபெற்று வந்தன. மாதம் ஐம்பது அறுபதுக்குள்ளாகவே வரும். இதில் வாடகை, பள்ளிச் செலவு போக மீதி முப்பது முப்பத்தைந்தை வைத்துத்தான் உண்ணவும், உடுத்தவும் வேண்டும். இப்படி வருஷக் கணக்கில் ஜீவனம். பையன் எஸ்.

எஸ். எல். ஸி. பாஸ் செய்து விட்டு வரட்டும், ஏதாவது ஒரு வழி செய்யலாம் என்று கோவில் பக்தர்களில் ஒருவரான பணக்கார வியாபாரி ஒருவர் ஐயங்காரிடம் உறுதியளித்திருந்தார். மிஞ்சிப் போனால் தம் கடையிலேயே தாற்காலிகமாக வேலைக்கு வைத்துக் கொண்டு, அவன் டைப்பும் சுருக்கெழுத்தும் படித்தபின் வேறு நல்ல வேலைக்கு அனுப்ப ஏற்பாடு செய்வதாக அவர் சொல்லி யிருந்தார். எனவே, முழு நம்பிக்கையோடு காத்திருந்தார் ஐயங்கார். மகனுடைய படிப்பின் மீது தம் எதிர்காலத்தை ஒரு சுமையாக ஏற்றி வைத்து விடலாம் என்றே அவர் கோட்டை கட்டினர்.

ஸ்ரீனிவாசனின் தாயார் தன் பங்குக்குச் சுமை ஏற்றத் தவறவில்லை. மகனுடைய படிப்பை அஸ்திவாரமாகக் கொண்டு அவள் கட்டிய மனக்கோட்டைகள் பல. அவன் உத்தியோகம் பார்த்துச் சம்பாதிப்பதைச் சேர்த்து வைத்து மகளுக்குக் கல்யாணம் பண்ணிவிட வேண்டும். அப்புறம் இரண்டு அறைகள் உள்ள ஒரு வீட்டைப் பார்த்து வாடகைக்குப் பிடிக்க வேண்டும். மகனுக்கும் கல்யாணம் ஆக வேண்டும். பேரன் பேத்தி எடுத்துப் பார்க்க வேண்டும்.

இப்படிப் பெற்றோர் இருவருமே அந்தக் கற்பக விருக்ஷத்தின் அடியில் போய்ப் புகலிடம் தேடக் காத்திருந்தனர். இது ஸ்ரீனிவாசனுக்குத் தெரியும். தன்னுள்ளே தான் வளர்க்கும் கற்பகக் கன்று வாடிவிடக் கூடாது என்று அதற்கு அல்லும் பகலும் உரமிட்டு வளர்க்கும் முறையில், அரும்பாடு பட்டுப் படித்தான். செடியைத் தண்ணீர் விட்டோ, கண்ணீர் விட்டோ, ரத்தத்தைச் சிந்தியோ கூட வளர்த்துவிடலாம். ஆனால் செடி முளை விடுவதற்கு ஒரு சாண் அகலக் கொல்லையாவது வேண்டாமா?

ஸ்ரீனிவாசனுக்கு நிம்மதியாக இருந்து படிக்க வீட்டில் இடமில்லை. ஒண்டுக் குடித்தனமாக இருக்கும் ஒரே அறைதான் வீடு. இதனால் புத்தகமும் கையுமாகப் பெருமாள் கோவிலுக்கே போய் விடுவான். பள்ளிக்கூடம் போகும் வரை படிப்பான். அப்புறம் பள்ளி முடிந்து வந்து இருட்டும் வரையில் அங்கே உட்கார்ந்து படிப்பான். விடுமுறை நாட்களில் பகல் முழுதும் அங்கேதான். கோவிலில் சில சமயங்களில் வழிப்போக்கர்கள் சிலர் தூங்குவார்கள்; பிச்சைக்காரர்கள் குறட்டை விடுவார்கள்; குழந்தைகள் ஓடி விளையாடுவார்கள். வீண் பேச்சுப் பேசிக் கொண்டிருப்பார்கள் சில ஆசாமிகள்...... இந்தச் சூழ்நிலையில் ஸ்ரீனிவாசன் கற்பகக் கன்றை வளர்த்து வந்தான்.

ஆனால் ரத்தத்தை விட்டு வளர்த்த செடியும் பரிதாபகரமாகக் கருகி விட்டது. இதற்கு யாரை நொந்து கொள்வது? உலகத்தில் காரணம் தெரியாத துன்பங்களுக்குப் பஞ்சமா என்ன? தேனினும் இனிய குரல் படைத்திருந்த எவரோ ஒரு பாடகனுக்குத் தொண்டையில் புற்றுநோய் வந்ததாமே, அதற்கு என்ன காரணம்?

பரீட்சையில் தேறவில்லை என்பது தெரிந்ததும் ஸ்ரீனிவாசனுக்கு இந்த உலகமே காலடியிலிருந்து நழுவிவிட்டது. கடையில் பத்திரிகையை வாங்கிப் படித்தவன், ஆவலோடு காத்திருக்கும் பெற்றோர்களை நோக்கி வராமல் ஸ்டேஷனைப் பார்த்து வெறி கொண்டவன் போல் நடந்தான். அப்பொழுது பெற்றோரின் நினைவும், கல்யாணத்துக்குக் காத்திருக்கும் தங்கையின் நினைவும் வந்திருந்தால் வெறும் வேதனையாக மட்டும் இருந்திருக்கும். ஆனால் கன்யாவின் முகம் மனக் கண்முன் வந்து நின்று விடவே, வேதனையோடு அவமானமும் கலந்தது. தன்னைத் தானே வெறுத்தான்.

தன்னை ஒரு மனிதப்பிறவி என்று மதிக்கவே அவனால் முடியவில்லை. தான் இந்த உலகத்துக்கு ஒரு களங்கமாக, அசிங்கமாக இருப்பது போலவே அவனுக்குத் தோன்றியது. இந்தக் களங்கத்தைப் போக்கினால்தான் தன் அருவருப்பு உணர்ச்சி நீங்கும். சேற்றிலே நிற்பது போல் அவன் உடம்பிலே உயிர் நின்று தத்தளித்தது. சீக்கிரத்தில் இந்தச் சாக்கடையை விட்டு வெளியேறிவிட வேண்டும் என்று வேகமாக ஸ்டேஷனை நோக்கி வந்தான்.

இருட்டும் வரையில் அங்கே உட்கார்ந்திருக்க வேண்டும். இருட்டியபிறகு எழுந்து சிறிது தூரம் நடக்க வேண்டும். அப்புறம் ஓடும் ரயில் முன்னால் விழுந்து உயிரைப் போக்கிக் கொள்ள வேண்டும். இதுதான் அவன் செய்திருந்த முடிவு.

ஃ ஃ ஃ

நேரம் ஆகஆக ஸ்ரீனிவாசன் பெற்றோரையும் அவர்கள் வைத்திருந்த நம்பிக்கையையும்




“நம்ப பாட்டி பாடிண்டே மாவு அரைக்கிறதைப் பார்த்துத்தான் இந்தக் கிராமபோன் கண்டுபிடிச்சிருக்கான்னு நினைக்கிறேன்!”

பரீட்சை தேறாமல் போனதையும் கூட மறந்து விட்டான். அந்த நினைவுகளுடன் சம்பந்தப்பட்ட உணர்ச்சிகளெல்லாம் கோரக் கூத்தாடி விட்டு ஓய்ந்து விழுந்து விட்டன. மிஞ்சி நின்ற நினைவு, அனைத்தையும் விடச் சக்தி வாய்ந்ததாக இருந்த நினைவு சுகன்யாவைப் பற்றி இருந்த நினைவுதான்.

சுகன்யா பரீட்சையில் தேறிவிட்டாள். அவளுடைய நம்பர் பத்திரிகையில் இருக்கிறது; இரண்டு பத்திரிகைகளிலுமே இருக்கிறது. இதை நினைக்கும்போது அவனுக்கு அவமானமாக இருந்த நிலை மாறி, அவள் மேல் கோபம் கொள்ளும் ஒரு விசித்திரமான நிலையும் ஏற்பட்டது. எதற்காகக் கோபம்? எதற்காகவுமே கோபம்தான். அவள் ஏன் பரீட்சையில் தேறினாள்? ஏன் ஒரு பெண்ணாகப் பிறந்தாள்? எதற்காகத் தன் எதிர்வீட்டுக்கு அப்பா அம்மாவோடு குடியிருக்க வந்தாள்? பரீட்சை நெருங்கும் சமயத்தில் அடிக்கடி தன்னிடம் வந்து தெரியாததை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு அவள் செய்த காரியங்கள் அனைத்துமே அவனுடைய கோபத்துக்குக் காரணங்களாகி விட்டன.

சுகன்யா மீது இப்படிக் கோபமும் ஆத்திரமும் பிறக்கும் ஒரு கட்டம் வரும் என்று அவன் எதிர்பார்த்ததே இல்லை. அதனால் இப்போது கோபம் வருவதைக் கண்டு, தனக்கு மூளைக் கோளாறு ஏற்பட்டு விட்டதோ என்றுகூட ஒரு கணம் பயந்தான். உள்ளமும் உடம்பும் கொதித்தன. தன் நெருப்பு தன்னையே சுட்டது. வெப்புத் தாங்க முடியாமல், "சுகன்யா!" என்று வாய்விட்டே சொல்லி அனல் கொதிக்கும் சுவாசத்தை வெளியே விட்டான். 'சுகன்யா! எதற்காக நீ எதிர் வீட்டுக்கு வந்தாய்? ஏன் என்னிடம் வந்து பாடம் படித்தாய்? எதற்காக நீ பரீட்சையில் பாஸ் பண்ணினாய்?'

❀ ❀ ❀

ஸ்ரீனிவாசன் குடியிருந்த வீட்டுக்கு எதிர் வீடு ஒரு வருஷத்துக்கு முன் காலியாயிற்று. யாரோ ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர் மனைவியோடும் மகளோடும் அங்கே குடிவந்தார். பெண் பள்ளிக்கூடம் போகிறவளாக இருந்தாள். எந்தப் பள்ளிக்கூடம், என்ன வகுப்பு என்பவற்றை யெல்லாம் அக்கறை எடுத்துக் கண்டு பிடித்து விட்டான் ஸ்ரீனிவாசன். தன்னைப் போலவே எஸ். எஸ். எல். ஸி. படிப்பவள். வயதிலும்கூடத் தனக்குச் சமதையாக இருக்கக் கூடும் என்று நினைத்தான். முதலில் அவனுக்கு இது ஆச்சரியமாகக் கூட இருந்தது. ஏனென்றால் அவன் படிக்கும் வகுப்பில் அவன்தான் அசாதாரணமாக மூத்தவன். இருபது வயதுப் பையன். தனக்கு அடுத்த வயது மாணவன், நான்கு வயதுக்குக் குறைந்தவனாகவே இருந்தான். இடையிடையே பணக் கஷ்டம் வந்து, அந்தந்த வருஷத்துப் படிப்பைப் பாழடித்தது; ஒரு தடவை நோய்வாய்ப்பட்டு மாதக்கணக்கில் கிடந்தான். இத்தனை தடங்கல்களையும் தாண்ட வேண்டிய நிர்ப்பந்தத்தினால், இந்த வயதில் இந்த வகுப்புப் படிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் சுகன்யாவுக்கு என்ன தடங்கல்கள் ஏற்பட்டிருக்க முடியும்? வசதியான குடும்பத்தில் பிறந்து ஏகபுத்திரியாக இருக்கும் அவள், இப்போது கல்லூரியில் அல்லவா படிக்க வேண்டும்? இந்தத் திகைப்பு அவனுக்குப் பல மாதங்கள் வரை நீங்கவில்லை.

சுகன்யா அழகாக இருந்தாள். நிமிர்ந்து பார்த்தாலும் யாரையும் பார்க்காத ஒரு பார்வை. முகத்தில் சிரிப்புக் களையை ஒருநாள் கூட அவன் பார்த்தவனல்ல. எதிர்ப்பட்ட சமயங்களிலெல்லாம் பார்க்காதவள் போன்று பார்க்காமலேயே தன்னைக் கடந்து செல்லுவாள். மிகவும் கர்வம் பிடித்தவளாக இருக்க வேண்டும் என்று நினைத்தான். இது அவனுக்குப் பிடிக்க வில்லை. ஆனால் அவள் அழகு பிடித்திருந்தது; அவள் எதிர்வீட்டில் குடியிருந்தது பிடித்திருந்தது; ஒரு நாளைக்கு ஒரு தடவையாவது அவளைப் பார்ப்பதும் அவனுக்குப் பிடித்திருந்தது.

பரீட்சை நெருங்கிக் கொண்டிருந்த சமயத்தில் சுகன்யா வீட்டுக்கு ஒரு டியூஷன் வாத்தியார் வர ஆரம்பித்தார். எந்நேரமும் அவள் புத்தகமும் கையுமாக இருந்தபடியால் முன் போல் இனந்தவறாமல் அவளுடைய தரிசனம் கிடைக்க வில்லை. கண்ணாரக் கண்டால், அதைப் பற்றி எண்ணி இன்ப உணர்ச்சி பெறுவது சிறிது நேரமே நீடிக்கும்; காணாத தினத்திலோ, ஏமாந்த உணர்ச்சி நாளெல்லாம் நிரம்பியிருக்கும். இதற்காக அவன் படிப்பில் அசிரத்தையாக இருந்துவிட வில்லை. பெருமாள் கோவிலில் உட்கார்ந்து மனப்பாடமாக இருந்த பாடங்களையும்கூடத் திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டுதான் இருந்தான்.

ஒரு நாள் மாலையில் நன்றாக இருட்டியதும் புத்தகக் கட்டுடன் வீட்டுக்குத் திரும்பினான் ஸ்ரீனிவாசன். நல்ல பசி. காலையில் சாப்பிட்டது. மத்தியானம் வெறும் காப்பிதான். வீட்டுக்கு வந்து பார்த்தால் சாப்பாடு இன்னும் தயாராக வில்லை. சோர்ந்து துவண்டு ஒரு மூலையில் படுத்து விட்டான். சிறிது நேரத்துக்கெல்லாம் எதிர்பாராதவிதமாக வீட்டுக்குள்ளே வந்தாள் சுகன்யா.

ஸ்ரீனிவாசனின் தாயார் புரியாமல் விழித்துப் பார்த்தாள். அவனுக்கு ஒன்றுமே விளங்க வில்லை. சுகன்யா தனது வீட்டுக்கு வருவதா?

வீட்டுக்கு மட்டும் அவள் வரவில்லை. அவன் அருகிலும் வந்தாள். கையில் ஆங்கிலப் புத்தகம் இருந்தது. அவன் எழுந்து நின்றான். குறிப்பிட்ட ஒரு புத்தகத்தைத் திறந்து அவனிடம் காட்டிச் சில சந்தேகங்களைக் கேட்டாள். அவை மிகமிக எளிமையான பகுதிகள், அவனைப் பொறுத்த வரையிலும். சந்தேகங்களைப் போக்கினான் — நின்று கொண்டேதான். அப்பொழுது அவள் கேட்ட இரண்டொரு கேள்விகள், அவளுடைய கல்வித்தரத்தை எடுத்துக் காட்டுவன போல் இருந்தன. ஆனால், அதைப் பற்றி அவன் அப்போது நினைக்கவில்லை. அவள் வந்ததும், நின்றதும், சில வார்த்தைகள் பேசி விட்டுப் போனதுந்தான் அவன் மனசில் பதிந்திருந்தன. அவள் தன்னைத் தேடி வந்து விட்டாள். தன்னிடமும் உதவி கோரி வந்து விட்டாள்; தனக்கும் ஒரு முக்கியத்துவம் இருக்கிறது என்பவை சேர்ந்து, சிறிது நேரத்துக்கு அவன் பசியைக்கூட மறக்கடித்து விட்டன; தாங்க முடியாத சந்தோஷம்.

உங்கள்
டார்ச்சில்
எஸ்ட்ரெலா
பொருத்தி
இரவில்







எஸ்ட்ரெலா

ப்ளாஷ் லைட் பாட்டரிகள
டார்ச்கள் மற்றும் பல்புகள்





''எல்லோரும் இப்படி ஒன்று சேர்ந்து பனாரஸ் பட்டுப் புடவை வாங்க எத்தனித்து விட்டீர்களே! கடைசியில் நான் காசிக்குக் கிளம்பவேண்டியது தான் போலிருக்கே!''

'' அப்பா! அங்கேயே வாங்கினால் அந்தப் புடவை 'சீப்பா' இருக்கும். வாங்கி அனுப்பிவிடப்பா!''

இரவு சாப்பிட்டுப் படுத்த பிறகு, அவள் தனக்கு 'நன்றி' சொல்லாமல் போனது ஞாபகம் வந்தது. சர்வ சாதாரணமான எளிய பகுதிகளைக்கூடப் புரிந்து கொள்ளாத மோசமான கல்வித்தரம் நினைவுக்கு வந்தது. நிச்சயம், பல வகுப்புக்களில் பெயிலாகியிருப்பாள் என்று நினைத்தான். அதன் முடிவில் அவள் தனக்குச் சமமான பிராயத்தில் இந்த வகுப்புப் படிப்பதன் காரணம் புலனாகி விட்டது, அவனுக்கு.

அழகாக இருந்தாலும் புத்திக் கூர்மை இல்லை. அத்துடன் நன்றி உணர்ச்சியும் இல்லை. எது இல்லாமல் போனால்தான் என்ன? அழகு இருந்தது: தன்னைத் தேடி வருவதில் இன்பானுபவம் இருந்தது. அப்புறம், இல்லாத எதைப் பற்றித்தான் கவலை?

ஸ்ரீனிவாசன் விழுந்து விழுந்து படிப்பதற்குக் குடும்பத்தின் எதிர்கால க்ஷேமம் மட்டும் காரணமல்ல. ககன்யாவின் கண்முன் தான் ஓர் அறிவாளியாக, வீரனாக விளங்க வேண்டுமென்ற வேட்கையும் உண்டாகி விட்டது.

அந்தப் பெண் இரண்டு வாரங்களுக்குப் பின் மற்றொரு முறையும் வந்தாள். பரீட்சை தொடங்குவதற்கு முன் மேலும் இரண்டு தடவைகள் அவள் வந்து விட்டாள்.

ஒரு சந்தர்ப்பத்தில் கூட அவள் உட்காரவில்லை. தன் சந்தேகங்களைக் கேட்பதைத் தவிர வேறு எதைப் பற்றியும் பேசவில்லை. ''தாங்ஸ்'' — அதை உச்சரிக்கக்கூட இல்லை.

ஒரு நாள் தெருவில் கண்ணுக்கு எதிரே அவளைப் பார்த்த போது, பழகிய பெண் என்பதால் ஸ்ரீனிவாசன் இலேசாகப் புன்னகை செய்தான். அவள் பதிலுக்குச் சிரிக்கவும் இல்லை; அவனைப் பார்க்கவுமில்லை. கவனியாமலே போய் விட்டாள்.

உரிய நாளில் அவர்கள் இருவரும் பரீட்சை எழுதினார்கள்.

அவள் தேறிவிட்டாள்.

அவன் தேறவில்லை.

ஃ ஃ

நன்றாக இருட்டிவிட்டது. ஸ்டேஷனில் ஒன்று பாக்கியில்லாமல் எல்லா விளக்குகளும் ஏற்றப்பட்டு விட்டன. தான் குறித்திருந்த நேரமும் வந்துவிட்டது. இனியும் அங்கே உட்கார்ந்திருப்பதில் அர்த்தமில்லை. இவ்வளவு நேரமும், ஸ்டேஷன் சிப்பந்திகளிடம் அகப்படாமல் இருக்க வேண்டுமே என்ற பயத்துடன் இருந்தாகி விட்டது. எப்படியோ தப்பி விட்டோம். கடைசி நேரத்தில் அகப்பட்டுவிடக் கூடாதே என்று ஸ்ரீனிவாசன் சந்தடி மிகுந்த ஒரு சமயத்தில் ஸ்டேஷனை விட்டு, நழுவி வெற்றிகரமாக வெளியே வந்து விட்டான்.

வெளிப்புறமாகத் தண்டவாளத்தை ஒட்டிச் செல்லும் நடைபாதையை நோக்கி நடந்தான். கண்ணீர்த் திவலையினூல் பாந்தவானம் மங்கியதைப் போல், ரயில்வே சிப்பந்தியிடம் கொண்ட பயத்தினால் மங்கி மறைந்திருந்த மரண பயம், இப்போது முழுமையும் தெளிவு கொண்டு எதிரே வந்து விட்டது.

'சும்மா நடந்து போக வில்லை: சாவதற்காக நடந்து போகிறோம்.'

—இதை நினைத்துப் பார்த்தான் ஸ்ரீனிவாசன். நடை நிற்காவிட்டாலும் மனம் ஸ்தம்பித்து விட்டது. முன்புறம் மரணம்; பின்புறம் வாழ்க்கை. இரண்டுமே நினைக்க முடியாத பயங்கரங்களாக இருந்தன. எதை ஏற்பது? எதை உதறுவது? அவனால் முடிவு கட்ட முடியவில்லை. நடந்து செல்லும் கால்களே முடிவு கட்டட்டும் என்று விட்டு விட்டவனைப் போல் போய்க் கொண்டிருந்தான். அவனுடைய உயிர் அந்தக் கால்களிலேயே தஞ்சம் புகுந்து விட்டது. அவை விட்ட வழி விட்டும். ......

மாம்பலம் ஸ்டேஷனை நோக்கி நடக்கும் போது, ஒரு நிமிஷம் மரணத்தைப் பற்றிய சிந்தனை; மறு நிமிஷம் வீட்டைப் பற்றிய நினைவு..........

ஒரு கட்டத்தில் சாவைப் பற்றி எண்ணாமல், 'சாவுக்குப் பின் என்ன?' என்பதைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கி விட்டான். அந்தச் சிந்தனை வளர்ந்து கொண்டே போயிற்று......

செத்த பிறகு, தாயும் தந்தையும் தங்கையும் கதறித் துடிப்பார்கள். மூவரில் ஒருவருக்காவது பைத்தியம் பிடிக்கும்; ஒருவருக்குத் தன்னைப் போலவே தற்கொலை எண்ணம் பிறக்கும். மற்றொருவர் இரண்டையும்விட பயங்கரமான ஒரு நிலையில் அகப்பட்டுக் கொண்டு தத்தளிப்பது நிச்சயம். தான் உயிரோடு இருந்தால், இத்தனையும் நிகழாமல் தடுத்துவிடலாம். வேறு கஷ்டங்கள் ஏற்பட்டால், சமாளிக்க முடியும். இந்த மாதிரியான எண்ணம் பிறந்த பிறகும்கூட அவன் திரும்பிவிடவில்லை. நடந்து கொண்டுதான் இருந்தான். தான் நினைத்த காரியத்தை ஒரு சில நிமிஷங்களுக்குள் முடித்து விடும் உறுதியோடிருந்தான்.

''வீட்டாரின் தத்தளிப்பையும் பொருட்படுத்தாமல் சாவை அரவணைக்கத் தன்னைத் தூண்டுவது, அவமான உணர்ச்சிதான் என்பதில் என்ன சந்தேகம்? அந்த உணர்ச்சிக்குக்

காரணம், சுகன்யா! பாஸ் பண்ணிய சுகன்யா வுக்காகத்தான் சாகப் போகிறோம்.''

ஸ்ரீனிவாசன் அப்படியே பிரமை பிடித்த வன் போல் நின்று விட்டான்.

அவளுக்காகத்தான் சாவு என்றால், அந்த மரணத்துக்கு என்ன மதிப்பு? சாகிறவனுக் குத்தான் என்ன மதிப்பு? அவள் தன்னைக் காதலிக்க வில்லை; தானும் அவளைக் காத லிக்கவில்லை.

அவள் எதில் சிறந்தவள்? படிப்பிலா? நன்றி உணர்ச்சியிலா? அரிய குணங்களிலா? அவளைப் போன்ற கர்வியை, மக்குத்தனமான வளை, நன்றி உணர்ச்சியற்றவளை இதுவரை பார்த்ததுகூட இல்லை. அவளிடம் இருப்ப தெல்லாம் அழகு ஒன்றுதான். அதை விட் டால், பாஸ் பண்ணி விட்டாள் என்ற ஒரு பெருமிதம் இருக்கிறது. இந்த இரண்டுக்காக வும் சாவதென்றால், ஊரில் இருக்கிற ஒவ் வொரு அழகிக்காகவும், ஒவ்வொரு பாஸ் பண்ணிய பெண்ணுக்காகவும் சாக வேண்டும்.

அர்த்தமில்லாமல் முட்டாள்தனமாக இந்த முடிவு எடுத்து வந்து விட்டோம் என்று கருதி னான். தன் பிணத்தைப் பார்த்து அவள் அழு வது ஒரு புறம் இருக்கட்டும், அருவருப்பில்லா மலாவது பிணத்தைப் பார்ப்பாளா?

தன் முட்டாள்தனத்துக்கு, தன் தலையி லேயே கல்லை எடுத்து ரத்தம் வரும் வரையில் இடித்துக் கொள்ளலாம் போல் இருந்தது.

மிகுந்த ஆவேசத்துடன் கையிலிருந்த பத் திரிகைகளைத் துண்டு துண்டாகக் கிழித்தெறிந் தான் ஸ்ரீனிவாசன். வந்த வழியே அவன் திரும்பிவிட்டான்.

ஃ ஃ ஃ

கிருஷ்ணசாமி ஐயங்காரும் தெரிந்த கடை ஒன்றில் பத்திரிகையை எடுத்துப் பார்த்தார். பையனுடைய நம்பர் வரவில்லை என்று கண்ட தும், ரத்த ஓட்டம் நின்று விட்டது. வெகு சிரமப்பட்டு மனத்தைக் கட்டுப்படுத்தினார். பல்லைக் கடித்துக் கொண்டு நிதானமாக வீட்டை நோக்கி நடத்து வந்தார். அப்புறம் அரை மணி நேரம் வீடு முழுதுமே மௌனம் நிலவியது. ஆகாயக் கோட்டை கட்டிய ஒவ் வொருவருக்கும் மற்றவருடைய முகத்தைப் பார்க்கவும், பார்த்துப் பேசவும் வெட்கமாக இருந்தது. இடிந்து போய் ஆளுக்கு ஒரு பக்கம் ஒதுங்கினார்கள்.

அரை மணி நேர மௌனத்துக்குப் பிறகு, வீடு அல்லோலகல்லோலப்பட்டது. ஸ்ரீனி வாசன் வீட்டுக்கு வராமல் இருப்பது ஏன்? எங்கே போயிருப்பான்? எங்கே போனான்?

ஐயங்கார் திகிலோடு எழுந்து போய் மக னைத் தேடினார். கோவில், பள்ளிக்கூடம், வாசக சாலை, சிநேகிதர்களின் வீடுகள்..... அரை மணி நேரம் சுற்றிப் பார்ப்பது; பிறகு வீட்டுக்கு வந்து, 'வந்து விட்டானா?' என்று பார்த்து விட்டு, பழையபடியும் வெளியே போவது; ஆறு தடவைகள் வந்து பார்த்து விட்டார். ஆறு தடவைகளிலும் வீட்டில் ஆறு இடிகள் விழுந்தன.

இந்தக் கலவரங்கள் எதிர்வீட்டுக்கு எட்டி யதும் சுகன்யா வந்தாள். சுகன்யாவின் தாயாரும் தங்கையும் அவளைப் பார்த்து, 'கோ' வென்று கதறினார்கள். அவளுக்கும் கண்ணீர் வந்து விட்டது. ''ஒரு வேளை நம்பர் வீட்டுப் போயிருக்கும், நானே பேப்ப ரையும் பார்க்க வேண்டும்'' என்று சொல்லி ஆறுதல் அளிக்க முயன்றாள் சுகன்யா.

அப்போது வீட்டில் யாருக்குமே நம்பர் களைப் பற்றிய கவலை இல்லை. நம்பர்கள் நாளை வந்தாலும் வரட்டும், அல்லது வரா மலே போகட்டும், ஸ்ரீனிவாசன் வந்தால் போதும் என்ற நிலையில் இருந்தார்கள்.

இதற்கு அந்தப் பெண் என்ன ஆறுதல் அளிக்க முடியும்? ஒன்றும் பேசாமல் இருந்து விட்டுத் தன் வீட்டுக்குத் திரும்பி விட்டாள்.

ஏழாவது தடவையாக அலைந்து விட்டு வந்த கிருஷ்ணசாமி அய்யங்கார், யாரிடமும் எதுவும் பேசாமல் ஓர் ஓரமாகச் சுவரில் சாய்ந்து உட்கார்ந்து விட்டார். மனைவியும் மகளும் கேட்ட கேள்விகளுக்கு அவர் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

அப்புறம் அந்த வீட்டுக்குச் சுகன்யாவின் அம்மா வந்தாள். மகள் சாப்பிடாமல் அழுது கொண்டு படுத்திருக்கிறாள் என்ற செய்தியை யும் சொல்லி விட்டு ஸ்ரீனிவாசனைப் பற்றி விசாரித்தாள்.

மனமில்லாமலும் தெம்பில்லாமலும் கண் ணீரும் கம்பலையுமாக ஐயங்காரின் மனைவி பதில் சொல்லிக் கொண்டிருக்கும் சமயம்.....

ஸ்ரீனிவாசன் வந்து விட்டான்!

''சீனு!'' என்று ஒரு பெரிய கூப்பாடு போட்டு விட்டு, அவனைக் கட்டிக் கொண்டு அழுதாள் தாயார். தங்கையும் வந்து, ''எங்கே போனே சீனு?'' என்று கேட்டு விட்டுக் கேவிக் கேவி அழுதாள். ஐயங்கார் நிமிர்ந்து உட்கார்ந்தார். முழங்கால்களைக் கட்டிக்கொண்டு வெறித்த பார்வையோடு மகனையும் மற்றவர்களையும் பார்த்தார்.

''பிள்ளை வந்து விட்டான். எதற்கு அழு கிறீர்கள்? போதும், சும்மா இருங்கள்!'' என்று அமர்த்தினாள் சுகன்யாவின் தாயார்.

அவன் வந்துவிட்ட செய்தியறிந்த சுகன்யா ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடி வந்தாள். வந்து அவனுடைய குனிந்த தலையை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தாள்.

''சீனு!'' என்று சுகன்யா அவனை அழைத் தாள். பெயர் சொல்லி அழைத்தாள்.

ஸ்ரீனிவாசன் முகத்தைத் தூக்கிச் சுகன்யா வின் கண்களைப் பார்த்தான்.

அந்த இரு கண்களிலும் கண்ணீர் ததும்பி யிருந்தது. கண்ணீரையும் பார்த்தான். அப் போது......... அந்தக் கண்ணீரில் வேறொரு கற்பகக் கன்று தளிர்த்தது.

அவனுடைய கண்ணீருக்கும் ரத்தத்துக்கும் வளராமல் கருகிய கற்பகத்துக்குப் பதில் மற் றொரு கற்பகத்துக்குக் கண்களால் நீர் வார்க் கும் தரும தேவதையைப் பார்ப்பது போலவே சுகன்யாவைப் பார்த்தான் ஸ்ரீனிவாசன்.

ஃ ஃ ஃ

''சுகன்யா! உன்னை வெறுத்ததால் நான் சாகாமல் வாழ நினைத்தேன்; இப்போது உன்னுடைய அன்பால் (உன்னிடம் கொண்ட அன்பால் என்று நினைக்கச் சங்கோசமாக இருந்தது) சாகாமல் வாழ நினைக்கிறேன்! நீ எப்போதுமே என்னைச் சாக விட மாட்டாய்! அப்படித்தானே?'' ஆனந்தக் கண்ணீரைத் தலையணையில் ஒற்றிக் கொண்டான் ஸ்ரீனிவாசன்.

—அட்டைப் படக்கதை

# காந்தரால்

சுகந்த காந்தரைடின் கூந்தல் வளரும் தைலம்

கல்கெமிகோவின்
காந்தராலில் சுத்தமான
**ஆலிவ் எண்ணெய்**
கலந்திருக்கிறது
அதனால்
கூந்தலின்
வளர்ச்சிக்கு
பல வகையிலும்
அனுகூலமாகிறது





**தி கல்கத்தா கெமிகல் கோ. லிட்.**

தென் இந்திய ஆபீஸ்: 5-149, பிராட்வே, சென்னை -1

## பருக்கள் மறைந்து விடுகின்றன

சருமம், மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் ஆகிவிடுகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன: இன்றிரவு நிக்ஸோடர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும், வழவழுப்பாகவும் மாக மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள்: நிக்ஸோடர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் அது இருக்கச் செய்யும். என்ற பூர்ண நம்பிக்கையுடன் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

## ஆஸ்தமா பிராங்கைடீஸ் குளிர்சுரம்

முதலியவைகளை எப்படி அடக்குவது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல், சுவாசம் தடைபடுதல் ஆஸ்த்மா, பிராங்கைடீஸ், ஜலதோஷம், குளிர் சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து, இரத்தத்தின் மூலமாக சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சு விடுதல் இல்லாமல் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு இது நிச்சயமாக அளிக்கும்.

# மசினிகுடி ஐக்கா

பிலோ இருதயநாத்

உதகையிலிருந்து மைசூர் போகும் மார்க்கத்தில்சுமார் மூப்பது மைல் தூரத்தில் 'கோகால்' என்ற ஓர் ஊர் இருக்கிறது. கோகாலில் திரு பிச்சன் என்பவருடைய வீட்டில் ஒருவாரம் தங்கினேன்.

அவர் இல்லத்திலிருக்கும் போது திருகனித்தன் கோத்தர் என்பவருடைய நட்புக் கிடைத்தது. அவர் மூலம் சுற்றுப் புறங்களிலிருக்கும் மலைப் பிராந்தியங்களுக்குப் பிரயாணம் செய்தேன்.

கூடலூரிலிருந்து — மசினி குடிப் பாதை வழியாக மாயாறுக்குப் போகும் பாதையில் ஏறத்தாழ மூன்று மைல்கள் நடந்தால் ஓர் பழைமையான அநுமனின் பளிங்குச் சிலை இருப்பதாகச் சொன்னார்கள்.

''மசினி குடியில் பல்லாண்டுகளாகப் பொம்பன் பூசாரி என்னும் ஒரு சிற்பி இருந்தார். ரொம்பவும் அடக்கமானவர். சிறந்த அறிவாளியான அவரிடம் ஊரார் தங்களுடைய சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ள வருவார்கள். கலை இருக்கும் இடத்தில் காசு இருக்காது என்பதற்குப் பொம்பன் பூசாரி மட்டும் விலக்காக முடியுமா? அநேகமாக அரைப் பட்டினியும் கால் பட்டினியுமாகத் தான் காலத்தைக்கடத்தி வந்தார். யாராவது சிற்ப வேலைகளுக்கு 'ஆர்டர்' கொடுத்தால் அந்தக் காலங்களில்தான் அவர் பசியின்றிப் புசிப்பது வழக்கம்.

உதகை — கூடலூர் — மசினிகுடி முதலிய இடங்களில் நவம்பர் — டிசம்பர் மாதங்களில் கடுமையான குளிர் பனி இருக்கும் என்பது நமக்குத் தெரியும்.

அந்த ஏழைச் சிற்பியினிடத்தில் எத்தனையோ சிற்பக் கலையிலும் மாணவர்கள் வந்தார்கள். சிலர் கற்றார்கள், சிலர் பாதியில் சென்றார்கள். ஆனால், ''ஐக்கன்'' என்ற மாணவன் மட்டும், கற்றவித்தை போதாதென்றோ அல்லது குரு விசுவாசமோ, குருவை விட்டுப் போகவே இல்லை. ''ஐக்கா!'' என்று குருவின் குரல் கேட்டதும் எந்தச் சோலையில், எந்த மூங்கிற் புதரில் இருந்தாலும் சரி, உடனே ஒரே ஓட்டத்தில் அவர் எதிரில் வந்து நிற்பான். ஐக்கனைக் குருவின் நிழல் என்றே கூறலாம்.

கூடலூர், மசினி குடி பிராந்தியத்தில் நஞ்சன் செட்டியார் என்பவர் ஒரு பிரபல பண்ணை முதலாளி; ஏராளமான ஏக்கர் நிலம் உடையவர். தயாள குணமும், இரக்க மனமும் படைத்தவர். அவர் ஓர் அநுமார் கோவில் கட்டத் திட்டமிட்டுப் பொங்கலன்று கும்பாபிஷேகம் செய்வதென்று முடிவு செய்தார். ஆகவே அநுமான் உருவச் சிலை ஒன்று செய்து கொடுக்கும்படி பொம்பன் பூசாரியிடம் கேட்டுக் கொண்டார்.

பொம்பன் பூசாரியும் குறித்த தவணையில் சிலையை முடித்துக் கொடுப்பதாகச் சொல்லி முன் பணமும் வாங்கிக் கொண்டார். அவ்வாண்டு பொங்கலுக்கு வந்திருந்த சிறிய வேலைகளை ஐக்கனே செய்து முடித்தான். இது பெரிய இடத்து ஆர்டராக இருந்ததால் பொம்பனே சிலைக்கு வேண்டிய உளி முதலியவைகளைத் தயார் செய்து விட்டார். வெகுதூரத்திலிருந்து பாறையையும் கொண்டு வந்து வைத்திருந்தார்.

''ஐக்கா! சிலையின் வேலை ஆரம்பிப்பதற்கு முன் நான் செய்யப் போகும் சிலையின் மூர்த்தியை நினைத்துப் பூஜை செய்வது வழக்கமாயிற்றே! அதற்கு வேண்டியவைகளை யெல்லாம் தயார் செய்தாயா? ஏனென்றால் அநுமானை உலகம் முழுதும் போற்றாதவர் இல்லை. கோயில் கட்டுபவரோ ஒரு பெரிய பண்ணையார். கலம் கலமாக நெல் கிடைத்தாலும் கிடைக்கலாம். பொங்கலுக்குக் குறைந்தது ஒரு மாதத்துக்கு முன் சிலையைக் கொடுத்தால்தான் அவர்கள் பொங்கலுக்கு முன் கோவில் கட்டி முடிப்பார்கள். இன்று வேலையைத் தொடங்க வேண்டும்'' என்று பொம்பன் பூசாரி தம் சீடனிடம் கூறிவிட்டுக் குளிக்கப் போனார்.

குளிப்பதற்குச் சென்றவர் வெகு நேரமாகியும் திரும்பி வராதது கண்ட சீடனுக்குக் கவலையாகப் போய்விட்டது. ஐக்கன் குளிக்கும் இடத்துக்குச் சென்று பார்த்தான். தன்னுடைய குருநாதர் சிறிய பாறை ஒன்றின் வழியே இறங்கும்போது, அப்பாறை புரண்டு அவரைக் கீழே தள்ளி அவர் விழுந்த வேகத்தில் வலக் கரமும், இடக் காலும் முறிந்து, நினைவு தப்பிக் கிடப்பதைக் கண்டான்! உடனே பதறிப் போய் அவரைத் தூக்கிக் கொண்டு வந்து குடிசையில் படுக்க வைத்தான் ஐக்கன். வைத்தியரும் பொம்பன் பூசாரிக்கு வைத்தியம் செய்து, சில பச்சிலைகளை, முறிந்த பாகங்களில் வைத்துக் கட்டி, ''பொம்பனாரே! தாங்கள் சுமார் நாற்பது நாட்கள் வரையில் படுக்கையை விட்டு அசையவே கூடாது. அப்பொழுதுதான் எலும்புகள் கூடும்'' என்று கூறிச் சென்றார்.

வைத்தியர் கூறிய வார்த்தைகளைக் கேட்டுச் சிற்பியாருக்கு உள்ளம் உடைந்தது. அவர் முகம் வாடியது. 'நஞ்சன் செட்டியாருக்கு வாக்களித்த தவணைக்கு மேல் வைத்தியருடைய தவணை ஓடிவிட்டதே. சிற்பத்துக்காக முன் பணம் வாங்கியிருக்கிறோமே' என்று கவலை ரேகைகள் சிற்பியாரின் முகத்தில் ஓடியதைக் கண்டான் ஐக்கன்.

நாட்கள் வேகமாக உருண்டு சென்றன. அல்லும் பகலும் பொம்பன் சிற்பியாருக்கு வேண்டிய பணிவிடைகளை யெல்லாம், ஐக்கனே செய்து வந்தான்.

சீடனின் கவனிப்பால் பொம்பன் பூசாரியால் சற்று நடக்கவும் உட்காரவும் முடிந்தது. நாள்தோறும் விடியற்காலையில் கடவுள் பூஜைக்குப் பின் ஐக்கன் ''சுவாமி!'' என்று கைகூப்பி நிற்பான். அன்று வெகுநேரமாகியும் அவன் வரவில்லை. 'சரி! ஏதோ வேலையாகக் கடைக்குச் சென்றிருக்கிறானோ என்னவோ?' என்று எண்ணிப் பொம்பனே எழுந்து வெளியில் வந்தார்.

தூரத்தில் பண்ணையார் நஞ்சன் செட்டியார் வருவதைக் கண்டு பொம்பன் பூசாரி உள்ளம் கலங்கினார்.

அவரைக் கண்டதும், ''ஜக்கா! ஜக்கா!'' என்று அழைத்தார்.

''அநுமானின் சிற்ப வேலைகளெல்லாம் முடித்து விட்டீர்கள் போலிருக்கிறது! அநுமான் கோவில் கட்டும் வேலை, இன்னும் சில நாட்களில் முடிந்து விடும். உங்களுக்கு என்ன உடம்பு? முக வாட்டத்துடன் இருக்கிறீர்களே?'' என்றார் நஞ்சன் செட்டியார்.



''செட்டியாரே! ஏழையை மன்னிக்க வேண்டும். அநுமான் சிலையைத் தொடங்குவதற்குமுன் அன்று நான் குளிப்பதற்குச் சென்றேன். கல் இடறிக் கீழே விழுந்து, வலக் கரமும், இடக் காலும் உடைந்து விட்டன. இந்தப் பையன் ஜக்கன் இல்லாவிட்டால் என்றோ மறைந்திருப்பேன். நான் கொஞ்சம் சுகம் அடைந்ததும், உங்களுடைய கடமையை முடித்துத்தருகிறேன். தயவுசெய்து மன்னிக்கவும்'' என்று மிகவும் பணிவுடன் வேண்டினார்.

ஜக்கனைக் காணாததால் பொம்பன் பூசாரியே எழுந்து, தாம் கொண்டு வந்த பாறையைச் செட்டியாருக்குக் காட்டுவதற்காக அவரை அழைத்துச் சென்றார்.

'பாறையை அது இருந்த இடத்தில் காணோமே' என்று பொம்பன் விழித்தார். ஆனால் பாறையைப் புரட்டிக் கொண்டுபோன அடையாளம் தரையில் தெரிந்தது. வியப்புடன் அதைப் பின்தொடர்ந்து இருவரும் பேசிக் கொண்டே சென்றார்கள். ஒரு மரத்தின் அடியில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அந்த மரத்தடியில் சிற்பம் செய்யக் கொண்டு வந்த பாறையும் இருந்தது.

சிற்பியார் பாறையின் அருகில் வர வர, பாறையில் ஏதோ ஓர் உருவம் காணப்பட்டது. பாறையின் மேல் படிந்திருந்த பனித் துளிகளைத் துடைத்துப் பார்த்தார்கள். சிலையைப்போல் இருவரும் நின்று விட்டார்கள்.

திடீரென்று ''ஆ!'' என்று கத்திக் கொண்டே சிலையின் பின்பக்கத்துப் பள்ளத்துக்கு ஓடினார் பொம்பன். அவர் பின்னே நஞ்சனும் ஓடினார். இருவரும் சற்றுத் தாழ்ந்த இடத்திலிருந்து ஜக்கனைப் புரட்டி எடுத்தார்கள். ஜக்கனின் உடல் பனியால் விறைத்துப் போய் உயிரற்றுக் கிடந்தது. அந்தக் காட்சியைக் கண்ட பொம்பன் கண் கலங்கினார்.

''குரு கொடுத்த வாக்குத் தவறக் கூடாது என்பதற்காகத் தானே சிலையைச் செதுக்க ஆரம்பித்திருக்கிறான் ஜக்கன். பாறையில் அநுமான் சிலையைச் செதுக்கியபின் அதை நிறுத்துவதற்காக ஓர் அடி பள்ளம் தோண்டி அதில் இவ்வளவு பெரிய பாறையைத் தூக்கி நிறுத்தியிருக்கிறான். பாறையின் மேல் பகுதியில் தன் தோளை முட்டுக் கொடுத்துத் தூக்கின போது பாறை சற்று அவன் மேல் சாய்ந்து ஜக்கனின் தலையில் பலமாக அடி ஏற்பட்டிருக்கிறது. ஜக்கனின் தலையில் ஏற்பட்ட காயத்தின் அடையாளம், இதோ பாருங்கள்! இச்சிலையின் தலையிலும் குருதிபடிந்திருக்கிறது'' என்று அநுமன் சிற்பத்தின் தலையில் இருக்கும் குருதியை நஞ்சனுக்குப் பொம்பன் காட்டினார்.

''பேசாப் பாறையைப் பேசும் பாறையாக்கியவன், பேசாமல் கிடக்கிறானே. நான் செய்வதைவிட, இச்சிலை உயிர் உள்ள சிலையைப் போல் காணப்படுகிறது. தன் உயிரை இச்சிலைக்குக் கொடுத்தான் போலும். எனக்காக இவன் செய்த தொண்டு மிக மிகப் பெரியதன்றோ! இவன் இல்லாவிடில் நான் இறந்தேயிருப்பேன். என் காதில் உளியின் ஓசை கேட்டால், நான் தடை செய்திருப்பேன் என்று அங்கு வைத்த பாறையை இவ்வளவு தூரம் கொண்டு வந்திருக்கிறான்.''

குருவின் உள்ளத்தை அறிந்து வேலையைச் செய்த சீடனை எண்ணிக் கண்ணீர் கசிந்தார் பொம்பன் ஆசாரி.

பொம்பனின் கண்ணீரையும், ஜக்கனுடைய குரு பக்தியையும் பாராட்டிய நஞ்சன், ''சிற்பியாரே! ஜக்கன் செய்த அநுமானின் சிலை, அவனுடைய குரு பக்தியை விளக்கும் வண்ணம், இங்கேயே நிலைத்து நிற்கட்டும். இந்தத் தெய்வீகச் சிலையை எடுத்துச் செல்ல எனக்கு மனமில்லை. உங்கள் சீடனின் பெயர் உலகம் அறியும் வரையில் நிலைத்து நிற்கட்டும்'' என்று கூறி விடைபெற்றுச் சென்றார்.

இப்படிச் சிலையின் கதையைக் கூறிக் கொண்டே வந்த பெரியவர் அந்த மசினிகுடியிலிருந்து—மாயாறு போகும் வழியில் நிலைத்து நின்று கொண்டிருக்கும் சிலையைக் காட்டி, ''சுமார் எழுபது ஆண்டுகளுக்கு முன் நான் சிறுவனாக இருக்கும்போது, இச்சிலையின் உருவம் நன்றாகக் காணப்பட்டது. நாளுக்கு நாள் இயற்கையாலும், சிலையின்மேல் தேங்காய்கள் உடைப்பதாலும், இச்சிலை தேய்ந்து போய் விட்டது. இருந்தாலும் அன்று ஜக்கனுடைய குருதிபட்ட இடம் மட்டும் நாளுக்கு நாள் வளர்ந்து, மக்கள் கண்களில் நன்றாகப் படும்படியாகப் பளிச்சென்று இருக்கிறது. பாருங்கள்!'' என்றார்.

அவர் கூறியதுபோலவே அந்தச் சிலையின் தலையில் பளிச்சென்று ரத்தக்கறை தெரிந்தது.

## இருமல் மற்றும் ஜலதோஷத்திலிருந்து பூர்ண நிவாரணம் பெற





# ஸிரோலின்

'ரோஷ்' அருந்துங்கள்




இருமல் அல்லது ஜலதோஷமிருந்தால் அசட்டை செய்யாதீர்கள்—ஸிரோலின் அருந்தி அபாயமின்றி துரிதமாக பூர்ண நிவாரணம் பெறுங்கள். ஸிரோலின் இருமலை நிறுத்துவதோடு மட்டுமல்லாமல் இருமலை உண்டுபண்ணும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது. ஸிரோலின் தொண்டைப் புண்களுக்கு சமனமூட்டுகிறது, கபம் மற்றும் சளியை போக்குகிறது. அது எவ்வளவு கடுமையான இருமலிலிருந்தும் அபாயமின்றி துரிதமாக நிவாரணமளிக்கிறது. அபாயமற்ற, நிவாரணமளிக்கும் தன்மையையும் மற்றும் இனிய ருசியையும் ஸிரோலின் பெற்றிருப்பதால் குடும்பத்திலுள்ள அனைவரும் அதைப்பெரிதும் விரும்புகிறார்கள். ஸிரோலின் என்றால் குழந்தைகளுக்கு ஒரே குஷி!

**உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஸிரோலின் வைத்திருங்கள்**

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்:
வால்டாஸ் லிமிடெட்




## சர்க்காவும் அஹிம்சா சமுதாயமும்

"என் சர்க்கா வழிபாட்டுக்கு ஆதாரமான உணர்ச்சி உங்களுக்கும் இருந்தாலன்றி நூறு ஆண்டுகளானாலும் அஹிம்சையைக் காணமுடியாது. நான் சர்க்காவினிடத்தில் கண்ட அஹிம்சையின் சக்தியை நீங்களும் என்னைப் போன்ற உள்ளத்தோடு அணுகி னாற்றால் அல்லவா காண முடியும்? அதனாலேயே ஒன்று என்னை விட்டு விடுங்கள். இல்லையேல் என்னுடன் வாருங்கள் என்கிறேன். என்னுடன் வருவதானால் ஆலோசனை கூறுவேன், எல்லாம் செய்து தருவேன். உங்களுக்கு இன்னும் புரியவில்லையானால் நான் முழுதும் உங்களுடன் உட்காருகிறேன். புரியாமலே புரிந்து விட்டது என்று சொல்வீர்களானால் நீங்கள் தம்மையும் ஏமாற்றிக் கொண்டு பிறரையும் ஏமாற்றியவரானீர்கள். நாம் சில கணங்களல்ல, கஞ்சியோ கூழோ கிடைத்தது போதுமென்று காத்திருப்பதற்கு. நாம் அவ்வளவு மரியாதை கெட்டவர்களல்ல. நாட்டில் செய்ய வேண்டிய வேலைகள் மலை மலையாகக் கிடக்கின்றன. வழிகளும் பல இருக்கின்றன. என் நம்பிக்கை என்னையன்றி உங்களை உயர்த்தாது. ஆகையால் ஏமாற வேண்டாம். என்னை என் வழி செல்ல விடுங்கள். என் வழி தவறினால் சர்க்கா பற்றிய என் நம்பிக்கை அர்த்தமில்லாத விக்கிரக வழிபாடானால், அந்தச் சர்க்காவில் உள்ள மரத்தை விறகாக்கி என்னை அதனால் கொளுத்தி விடுங்கள்; அல்லது நானே என் கையினால் சர்க்காவைக் கொளுத்தி விடுகிறேன்."

காந்தியடிகளின் உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டும் ஆதர்ச மொழிகள் இவை. 1942 இயக்கத்தில் சர்க்கா சங்கத்தின் வேலைகள் சிதறுண்டு போன பிறகு சங்கத்தின் நிர்வாகிகளும் முக்கிய கதர் ஊழியர்களும் 1944 செப்டம்பர் முதல் வாரத்தில் சேவா கிராமத்தில் கூடினார்கள். 1942-44ல் ஆகா கான் சிறை மாளிகையில் இரண்டு ஆண்டுகள் அடிகள் தவம் இருந்தார் அல்லவா? அச்சமயம் அஹிம்சை பற்றியும் அதை வெளிப்படுத்த சர்க்காவுக்குள்ள சக்தியைப் பற்றியும் ஆழ்ந்து சிந்தித்தார். அந்தச் சிந்தனையின் விளைவாக அவர் கருத்து மழை பொழிந்தார். அத்தருணத்தில் அடிகள் செய்த சொற்பொழிவுகள், கதர் இயக்கத் தலைவர்களுள் ஒருவரான திரு ஜாஜூ அவர்களுடன் நடத்திய சர்ச்சை, ஹரிஜனங்கள் முன்னேற்றம் பற்றிய கருத்துக்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

காந்தியக் கருத்துக்களின் களஞ்சியமென மதிக்கத் தக்க இந்தச் சிறந்த நூலை எல்லாக் கதர் ஊழியர்களும் சமூக சேவைத் தொண்டர்களும் அவசியம் படிக்க வேண்டும்.

கிடைக்குமிடம்: சர்வோதயப் பிரசுராலயம், தஞ்சாவூர். விலை: ரூ. 1.25.

## சமூக சீர்திருத்தமும் காந்தியடிகளும்

வாழ்க்கைப் பிரச்னைகளைப் பற்றிக் காந்தியடிகளின் அரிய கருத்துக்களைத் தொகுத்து வெளியிட்டுவரும் சிறப்பான பணியைக் காந்தி நூல் வெளியீட்டுக் கழகத்தினர் நடத்தி வருகின்றனர். இதுவரை ஆறு தொகுப்புக்களை வெளியிட்டிருக்கின்றனர். ஏழாவது தொகுப்பு இப்பொழுது நம் பார்வைக்கு வந்திருக்கிறது. இதில் சில ஜீவாதாரமான பிரச்னைகளைப் பற்றி மகாத்மா வெளியிட்ட கருத்துக்களும் யோசனைகளும் இடம் பெற்றிருக்கின்றன.

இந்தத் தொகுப்பைச் சமூக சேவைக்கு வழிகாட்டி என்று தாராளமாகக் கூறலாம். முதலில் சமூகசேவைக்கான தகுதிகள் யாவை? செய்ய வேண்டிய சீர்திருத்தங்கள் என்னென்ன என்பதற்குப் பதிப்பாசிரியர் முதலிடம் அளித்தது மிகப் பொருத்தமாகும். அடுத்தபடியாகத் தீண்டாமை ஒழிப்புப் பகுதி இடம் பெற்றுள்ளது. எல்லாச் சமூக சேவைகளையும் விடத் தீண்டாமை ஒழிப்பு மிகவும் கடினமானது. காந்தியடிகள் போல் மதப் பற்றும் கடவுள் பக்தியும் உள்ளவர்கள் இந்தத் திருப்பணிக்கு ஆதரவு அளித்ததனால் தான் இந்தத் துறையில் ஓரளவு வெற்றி பெற முடிந்தது.

மதம் மாறினால் தீண்டாதார்கள் நிலை உயர்ந்து விடும் என்கிற தப்பெண்ணத்தைக் காந்தியடிகள் நீக்குகிறார். இத்தொகுப்பின் முந்திய பகுதிகள் போல் கட்டுரைகள் தேதிவாரியாகப் பிரசுரிக்கப்பட்டிருப்பதனால் மகாத்மாவின் சிந்தனை வளர்ச்சி பெறுவதைப் புரிந்து கொள்ள உதவியாயிருக்கிறது

"நான் கூறுவதில் முரண்பாடு தோன்றக் கூடாது என்பது பற்றி நான் கவலைப்படவில்லை. சத்தியத்தை நாடிச் செல்லும் நான் பல கொள்கைகளை உதறித் தள்ளியிருக்கிறேன். பல புதிய விஷயங்களைக் கற்றுக் கொண்டிருக்கிறேன். எனக்கு வயதாகிவிட்டாலும் என் மன வளர்ச்சி நின்றுவிட்டதென்ற உணர்ச்சி ஏற்படவில்லை" என்று காந்திஜி கூறியிருப்பது கவனிக்கத் தக்கது.

சமூக சேவை, சீர்திருத்தத் தொண்டு புரியும் யாவரும் வேத புத்தகம் என மதிக்கத் தக்கது இத்தொகுப்பு. இதைச் சிறப்பான முறையில் தயாரித்து, நீரோட்டம் போன்ற சரள நடையில் வெளியிட்டுள்ள பதிப்பாசிரியர் திரு வேங்கடராஜுலுவையும் துணை ஆசிரியர் திரு ஜெயமணி சுப்பிரமணியத்தையும் பாராட்ட வேண்டும். — ரா. ஈ.

மகாத்மா காந்தி நூல்கள் — 7; காந்தி நூல் வெளியீட்டுக் கழகம், சென்னை - 2; விலை: ரூ 7 - 50.

Printed & Published by R. Ananthana rayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

